# பதிப்புரை

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானென்னதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே !

என்பது மணிவாசகரின் திருவாக்கு. யான், எனது என்று கூத்தாடுவது உலகியல். ஆனால் அறிவும் அன்பும் ஒன்று கலந்தால் உண்மையான வாழ்வை நிலையாகப் பெறலாம். அருள் உள்ளங்கொண்டவர்கள் கூறிய வார்த்தைகளின் விளக்கம் அவரவர் வாழ்வில் மேற்கொள்ளும் தகைமைக் கேற்ப அமைவுபெறும். வாழ்வியலில் இதனைப் புரிந்து ஆன்ம அறிவு பெற்று செயல்வழி இறைவனைக் காணுதல் தன் சக்திக்கு அப் பாற்பட்டதாகத் தோற்றலாம். தத்துவங்களை எளிதில் உணரவியலாது என எண்ணலாம். ஆனால் அப்படி யெல்லாம் மனித மனத்திற்கப்பாற்பட்டது எதுவுமில்லை யென்று இந்நூல் - சாதனா விளக்குகிறது.

நோபல் பரிசுபெற்ற வங்கக் கவிஞர் தாகூரின் உள்ளத்தெழுந்தது 'சாதனா'. கீதாஞ்சலிக்குப் பின் னர் தோன்றியது. ஆதலின் ஆழ்ந்து உணர்ந்த அரிய பண்புகள், அன்பின் ஆற்றல், வாழ்வின் இலட் சியம் ஆகிய எல்லாம் தெளிவுபெற ஒளிர்கின்றன. இந்நூல் அரிய தத்துவங்களை எளிதில் உணர்த்தி, ஆன்ம அறிவுபெற, யான், எனது என்பது அற, அன்பு டைமையின் ஆழத்தைக்காட்டி வாழ்வை வாழ்வாக வாழ வழிவகுத்துத் தருகின்ற அருமை நெஞ்சில் நின்று மகிழ்ச்சியூட்டுகிறது.

இத்தகைய ஒரு நூலை வேறொரு மொழியில் சுவை குன்றாமல் மொழிபெயர்த்துத் தருவது மிக எளிதன்று. இவ்வரும்பணியை திரு. ரா. நடராசன் அவர்கள் தம் ஆழ்ந்த தத்துவ நூலறிவுத் திறன் கொண்டு, தமிழில் மிகச் சிறப்பாக மொழிபெயர்த்துத் தந்துள்ளார்கள்.

தாகூரின் 'சாதனா'வை முதல் முதலாகத் தமிழில் வெளியிடும் பேறு பெற்றமைக்கு மகிழ்ச்சியும் பெருமையும் அடைகிறோம். மக்களனைவரும் படித்துப் பயன்பெறுவர் என்பதில் ஐயமில்லை.

காரைக்குடி
1-9-58.

வீர. சிவராமன்
செல்வி பதிப்பகம்

## பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம் எம். ஏ.

அவர்கள் நல்கிய

# முன்னுரை

இன்றைய உலக அறிஞர்களில் ஒருவராக எண்ணப் படுபவர் கவிச்சக்ரவர்த்தி இரவிந்திர நாத தாகூர். இந்திய மொழி ஒன்றில் எழுதியே உலகப் பெருமை அடைய முடியும் என்பதை எடுத்துக்காட்டிய பெருமை அவருக்கே உரியது. இந்திய நாட்டுக் கவிஞர் அனைவரும் தத்துவ ஞானிகளாகவும் இருந்தனர் என்பதும் மறுக்க முடியாத ஒரு புதுமை. நூலின் முகவுரையில் 'மேனாட்டு அறிஞர் கட்கு நமது பண்டைய சமய சாத்திரங்கள் ஆராய்ச்சிக் குரிய பழம் பொருள்களாய்க் காட்சியளிக்கின்றன. நமக்கோ அவை இன்னுயிர் போன்று முக்கியமாக இருக்கின்றன,' என்று தாகூர் கூறுவதிலிருந்து இந் நூலின் அடிப்படையை ஒருவாறு அறியலாம்.

சாதாரண மக்கள் உலகைக் காண்பதற்கும் கவிஞர் காண்பதற்கும் பெரிய வேறுபாடு உண்டு. நம்போன்ற வர்கட்கு உயிரற்ற பொருள்களாகவும், சடங்குகளாகவும் காணப்படுபவை கவிஞனுக்கு உயிருள்ளவையாகக் காட்சி நல்குகின்றன. இந்த அடிப்படையில்தான் 'சாதனா' நூலின் தத்துவக் கருத்துக்கள் விளங்குகின்றன. 'மனித னுடைய ஆசைகள் அநேகம். அவ்வாசைகள் பல்வேறு உலகப் பொருள்களை நாடிப் பைத்தியங்கொண்டு அலை கின்றன. அவ்வாசைகளின் வாழ்வும் முடிவும் அப்பொருள் களிலிருக்கின்றன. ஆனால் மனிதனுக்குள்ளே இருக்கும் ஒன்றோ சதா ஒற்றுமையை நாடிக்கொண்டே இருக்கிறது. அறிவில் ஒற்றுமை; அன்பில் ஒற்றுமை; மன நோக்கங் களில் ஒற்றுமை.' (பக்கம் 56)

சாதனா என்ற நூலின் திரண்ட சாரம் இதுவே என்று கூறலாம். பரந்தும், விரிந்தும், பல்வேறுபட்டும்

உள்ள இவ்வுலகிடை ஒற்றுமையைக் காண்பது ஆன்மா வின் வேலை. அவ் வேலை நிகழும்பொழுது ஏற்படுகின்ற தடைகள் முதலியனவும், அவற்றைப் போக்கும் வழியும் பேசப்படுகின்றன. இறுதியில் உள்ள 'செயல்வழி இறைவனைக் காணுதல்', 'அழகை உணர்தல்,' 'இறை வனை உணர்தல்' ஆகிய பகுதிகள் அனுபவத்தின் மூலம் கண்ட வழிகளாகும்.

இத்துணைச் சிறந்த நூலை மொழி பெயர்த்தல் எளிதான செயலன்று. திரு ரா. நடராசன் இவ்வரிய செயலை எளிதில் இயற்றியுள்ளார் என்றே கூறவேண்டும். இந்தியக் குடியரசின் ஜனாதிபதி டாக்டர் இராசேந்திர பிரசாத் எழுதிய 'இந்தியா பிரிக்கப்பட்டால்' போன்ற பெரு நூல்களை மொழிபெயர்த்து. மொழிபெயர்ப்புக் கலையில் நல்ல அனுபவம் பெற்றவர்.

சிறந்த மொழிபெயர்ப்பின் இலக்கணம் ஒன்றுண்டு. படிக்கும் பொழுது மொழி பெயர்ப்பு என்ற எண்ணம் உண்டாகாமல் இருப்பதே அந்த இலக்கணம். அம் முறையில் திரு. நடராசன் நன்கு வெற்றிபெற்றுள்ளார் என்றே கூறவேண்டும்.

நல்ல தமிழறிவோடு மொழிபெயர்ப்புத் திறமும் பெற்ற அவர் இவ்வளவு பெரிய சாதனையை மேற் கொண்டது முற்றிலும் பொருத்தமானதே யாகும். மேற் கண்ட சாதனையில் அவர் வெற்றியும் பெற்றுள்ளார். தெள்ளிய செம்பாகமான அழகிய தமிழ் நடை கற்பார்க்குக் கற்கப்படும் பொருளின் கடுமையைக் குறைத்து இன்பம் ஊட்டுகிறது.

திரு. நடராசன் முயற்சியால் இத்தகைய பெருநூல் கள் பல தமிழில் நிரம்ப வருமாயின் அது தமிழ் செய்த நற்பேருகும்.

சென்னை
27—8—58

அ. ச. ஞானசம்பந்தன்

# பொருளடக்கம்

# தாகூரின் முன்னுரை

ஆழ்ந்த நூலறிவு கொண்டவன் என்ற முறையிலோ அல்லது தத்துவஞானி என்ற முறையிலோ நான் இந்நூலில் உள்ள பொருள்களைப் பற்றிப் பேசவில்லை என்பதை முதலிலேயே தெளிவு படுத்தி விடுதல் நல்லது என நினைக்கிறேன். நாள்தோறும் உபநிஷதங்களை ஓதி இறைவனை வழிபாடு செய்கின்ற குடும்பத்தில் பிறந்தவன் நான். எடுத்துக்காட்டாக வாழ்ந்த தந்தையினை நேருக்கு நேர் கண்டவன் நான். அவர்தம் வாழ்நாள் அடங்கலும் இறைவனோடு ஒன்றியிருந்தார். எனினும் அவர் இவ்வுலக வாழ்வில் தம்மைச் சார்ந்த கடமைகளைக் கைவிட்டாரில்லை. மனித இனத்தைப் பாதிக்கக்கூடிய பொதுவான காரியங்களில் தமக்குரிய ஈடுபாட்டைக் குறைத்துக் கொண்டாருமில்லை.

தொன்மை வாய்ந்த இந்தியாவின் பண்பு, புனிதமான சாத்திரங்களில் புலனாகிற வண்ணமும், தற்போது அது இந்திய மக்களின் வாழ்க்கையில் வெளிப்படுகிற வண்ணமும் கண்டறிவதற்கு மேனாட்டு வாசகர்கட்கு இக்கட்டுரைகள் ஒரு வாய்ப்பளிக்கின்றன.

மனிதன் கூறியவற்றுள் சிறந்தவற்றை வெறும் சொற்களைக் கொண்டே சீர்தூக்கிப் பார்த்தல் கூடாது. அவற்றுள் பொதிந்துள்ள கருத்தைக் கொண்டே சீர்தூக்கல் வேண்டும். சமுதாய வளர்ச்

சிக்கும் முன்னேற்றத்துக்கும் ஏற்றவாறு அக் கருத்துக்கள் எவ்வாறு மலர்கின்றன என்பதை வைத்தே பெரியார்களின் சொற்களுக்குப் பொருள் காணவேண்டும். தற்காலத்தில் கிறிஸ்தவமதம்எவ்வி தம் வாழ்கிறது என்பதைக்கொண்டுதான் கிறிஸ்தவ மதத்தின் உண்மையான பொருளை அறிந்துகொள் கிறோம். ஆதிநாளையக் கிறிஸ்துவ மதத்தினின்றும் இன்றையக் கிறிஸ்துவ மதம் எவ்வளவோ மாறுபட் டிருக்கலாம் என்றாலும் இன்று அது மனிதனுடைய வாழ்வில் எவ்வளவு தோய்ந்திருக்கிறது என்பதைக் கொண்டுதான் உண்மையான கிறிஸ்தவமதத்தை நாம் அறிய முடிகிறது.

மேனாட்டு அறிஞர்கட்கு நமது பண்டைய சமய சாத்திரங்கள், ஆராய்ச்சிக்குரிய பழம்பொருள்களா கக் காட்சியளிக்கின்றன. நமக்கோ அவை இன் னுயிர் போன்று முக்கியமாக இருக்கின்றன. இறந்த கால எண்ணங்களும் ஆர்வங்களும் நூல்வடிவில் பாதுகாக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைத்தான் இந்தியர் சமய சாத்திரங்களாகக் கொண்டாடுகின் றனர் எனக் கருதினால் அவை தம்முடைய சிறப்பை இழந்து விடுகின்றன.

மேலான இதயம்படைத்தவர்கள் தங்கள் அனு பவத்திலிருந்து கூறிய வார்த்தைகள் உயிராற்றல் உள்ளவை. அவற்றின் பொருளை எந்த முறையில் கூறிப்பார்த்தும் அறுதியிட முடியாது. ஒவ்வொரு வனும் அவற்றைத் தம் வாழ்க்கையில் கடைப் பிடித்து வாழ்வானாகில் அப்போது அவற்றிற்கு விளக்கம் காணக்கூடும். எனக்கு உபநிஷதங்களும் புத்தருடைய போதனைகளும் என்றென்றும் உயி

ருள்ளவைகளாக நிற்கின்றன. அவற்றின் வளரும் ஆற்றலுக்கு எல்லையில்லை. அவை எனக்கென்று தனிப்பொருள் கொண்டிருக்கின்றன என்பதை நான் அறிவேன். ஆகையால் அவற்றை நானும் என் வாழ்க்கையில் கடைப்பிடிப்பதோடு மற்றவர் களையும் கடைப்பிடிக்குமாறு அறிவுரை கூறியிருக் கிறேன்.

உபநிஷதங்கள் எனக்கென்றே தனிப்பொருள் கொண்டிருக்கின்றன. அவ்வாறே பிறருக்கும் அவரவர்க்கென்றே உணர்த்தக்கூடிய பொருளை அவை கொண்டுள்ளன. தாங்கள் உணர்ந்த பொருள் சரிதானா என்பதை நான் அறிந்து கொண்ட பொருளைக்கொண்டு மற்றையோரும் உறுதியடைவார்கள். அந்த அளவிற்கு நான் உணர்ந்த பொருள் பிறர்க்குப் பயனுள்ளதாக இருக்கும்.

வங்காளத்தில், போல்பூர் என்ற ஊரிலுள்ள எனது பள்ளி மாணாக்கர்கட்கு நான் வங்க மொழி யில் பேசிய சில பேச்சுக்களிலிருந்து இணைத்துத் தொகுத்தவைதாம் இப்போது நூல் வடிவில் கொண்டுவரப்பட்டிருக்கின்றன.

பாபு சதீசசந்திர ராய், பாபு அசித்குமார் சக்கர வர்த்தி ஆகியோரின் மொழி பெயர்ப்புக்களையும் ஆங்காங்கு சேர்த்திருக்கிறேன். செயல் வழி இறை வனைக் காணுதல் (இறைவனை உணர்தல்) என் னும் கட்டுரை வங்க மொழியிலிருந்து எனது சகோதரர் மகன் பாபு சுரேந்திரநாத தாகூரால் மொழி பெயர்க்கப்பட்டதாகும்.

ஹார்வார்டு பல்கலைக் கழகப் பேராசிரியர் ஜேம்ஸ். எச். வுட்ஸ் என்பாருக்கு எனது நன்றி உரியதாகும். அவர் இக் கட்டுரைகளை எழுதுமாறு ஊக்குவித்து அப் பல்கலைக் கழகத்தில் நான் இவற்றை வாசித்துக் காட்டுவதற்கும் ஏற்பாடு களைச் செய்தார். இக்கட்டுரைகள் அச்சாகும்போது சரிபார்த்தும் திருத்தியும் உதவிய திரு. எர்னெஸ்ட் ரைஸ் அவர்கட்கும் எனது நன்றி.

# மனிதனும் பிரபஞ்சமும்

புராதன கிரேக்க நாகரிகம் நகரங்களைச் சுற்றி எழுப்பிய மதில்களுக்கிடையே பேணி வளர்க்கப் பட்டதாகும். தற்கால நாகரிகங்கள் அனைத்திற்கும் உண்மையாக சாந்தும் செங்கலும்தான் தொட்டி லாக அமைந்திருக்கின்றன.

இம் மதில்கள் மக்களின் மனத்தில் தமது தன் மையை ஆழமாகப் பதித்துவிடுகின்றன. நம் முடைய மனப்போக்கில் பிரித்தாளும் கொள்கையை அமைத்துவிடுகின்றன. இக் கொள்கை காரண மாக, நாம் கைப்பற்றியுள்ளவற்றைச் சுற்றி சுவர் கள் எழுப்பி, அவை தம்முள் ஒன்றுசேராதபடி பிரித்து விடுகிறோம். தேசத்தையும் தேசத்தையும் பிரித்து வைக்கிறோம். அறிவையும் அறிவையும் பிரித்து வைக்கிறோம்; மனிதனையும் இயற்கையை யும் பிரித்து வைக்கிறோம். நாம் எழுப்பிய மதில் களுக்கு அப்பாலுள்ள எவற்றின் மீதும் நமக்கு பலத்த சந்தேகம் ஏற்படுகிறது. அவற்றை நாம் எளிதில் ஏற்றுக்கொள்வதில்லை. நமது நம்பிக்கை யைப் பெறுவதற்கு அவை பெரிதும் போராட வேண்டியிருக்கிறது.

ஆரியர்கள் முதன் முதலில் இந்தியாவில் காலடி எடுத்து வைக்கும்போது எங்கு பார்த்தாலும் காடாக இருந்தது. புதிதாக நுழைந்த இவர்கள் இக்காடுகளை நன்கு பயன்படுத்திக்கொண்டார்கள்,

இக் காடுகள் கொடிய வெயிலைத் தடுத்து இவர்களுக்கு குளிர் நிழல் அளித்தன. சண்டமாருதப் புயல்களைத் தடுத்து புகலளித்தன. அவர்களுடைய கால்நடைகளுக்குத் தீனி அளித்தன. அவர்களுடைய வேள்வித் தீக்கு உணவு அளித்தன. குடிசைகளைக் கட்டுவதற்கு வேண்டிய பொருள்களை அளித்தன. இக் காடுகளில் இயற்கை அரணும் நீர்வளமும் உணவு வளமும் நிறைந்த பகுதிகளில் இவ் ஆரியர்களின் வெவ்வேறு இனத்தார்கள் ஆங்காங்கே தங்கி வாழ்ந்தார்கள். இவ்வாருக இந்திய நாகரிகம் காடுகளில்பிறந்து தன்பிறப்பிடத்தையும் சூழ்நிலையையும் பொறுத்து ஒரு தனி இயல்பைக் கொண்டதாக அமைந்தது. எங்கும் பரவி நின்ற இயற்கையின் மடியில் அது தவழ்ந்தது. இந்திய நாகரிகத்திற்கு உணவூட்டி உடையுடுத்தி வளர்த்தது இயற்கை. இயற்கையின் வேறுபடுகின்ற எல்லா அம்சங்களுடனும் நெருங்கிய தொடர்பும் இடையருத உறவும் கொண்டிருந்தது இந்நாகரிகம்.

இத்தகைய வாழ்வு, மனிதனுடைய வாழ்வுத் தரத்தைத் தாழ்த்தி, பெருக்கமாக வாழ வேண்டும் என்ற தூண்டுதலைக் குறைத்து, அவனது நுண்ணறிவை மழுக்கிவிடும் என்று யாரேனும் நினைக்கக் கூடும். புராதன இந்தியாவில் கானக வாழ்விலேற்பட்ட சந்தர்ப்பங்கள் மனித மனத்தை வென்றுவிடவில்லை. அவனது ஊக்கத்தின் ஓட்டத்தை குறைத்து விடவில்லை. அவ் வாழ்வு அவனது மனத்தை ஒரு தனிப் பாதையில் திருப்பியது. எக்காலமும் இயற்கை சூழ வாழ்ந்து வந்ததால் தன்னுடைய ஆதிக்கத்தைப் பரப்பவேண்டும், அதைச் சுற்றி கோட்டைச் சுவர் எழுப்பவேண்டும் என்ற

எண்ணம் அவன் மனத்தில் உதிக்கவில்லை. பொருள் களைக் கைப்பற்ற வேண்டும் என்பது அவனுடைய நோக்கமன்று. தன்னை உணரவேண்டும், தன்னைச் சூழ்ந்திருக்கும் இயற்கையோடு ஒன்ருகி வளர வேண்டும், இவ்வாறு வளர்வதின் மூலம் தன் னுணர்வை விரிவுபடுத்த வேண்டுமென்பதே அவ னுடைய நோக்கம். உண்மை, எல்லாவற்றையும் தன்னுட் கொண்டது என்பதை உணர்ந்தான். ஒன்ருேடொன்று ஒட்டாத தனியிருப்பு, தனிவாழ்வு, என்பன பிரபஞ்சத்தில் கிடையாது என்பதை அறிந்தான். எல்லாப் பொருள்களினுள்ளும் நம் முயிர் கலப்பதின் மூலமே நாம் உண்மையை, அடைய முடியும் என்பதை அறிந்தான். மனித ஆன்மாவிற்கும் உலகின் ஆன்மாவிற்கும் இடையே காணப்படும் நெருங்கிய தொடர்பை உணருவதே, கானகத்தில் வாழ்ந்துவந்த பண்டைய இந்திய முனி வர்களுடைய பெருமுயற்சியாக இருந்தது. காலம் செல்லச் செல்ல இப்பூர்வீகக் காடுகள் மறைந்து வயல்கள் தோன்றின. எல்லாத் திசைகளிலும் செல்வச் சிறப்பு மிகுந்த நகரங்கள் தோன்றின. பேரரசுகள் ஏற்பட்டன. இப்பேரரசுகள் உலகத் தின் மற்ற பாகங்களிலுள்ள வல்லரசுகளுடன் தொடர்பு வைத்துக்கொண்டன. இவ்வாறு செல் வச் செழிப்பில் ஓங்கியிருந்த காலத்திலும் இந்தியா வின் இதயம் தன்னுடைய ஆதி லட்சியமான தன்னை உணருதலாகிய தவத்தையே மேன்மை யாகக் கொண்டாடியது. இந்திய இதயம், ஆசிர மங்களில் வசித்துவந்த முனிவர்களுடைய எளிய வாழ்க்கையை மேன்மையாகப் பாராட்டிற்று ஆசிர

மங்களில் தேங்கி நின்ற அறிவுச் சுனையிலிருந்து தனக்கு வேண்டிய அருளொளியைப் பெற்று வந்தது.

இயற்கையை அடக்கி ஆள்கிறோம் என்று மேனாட்டினர் பெருமையடித்துக் கொள்வதாகத் தோன்றுகிறது. மனிதன் பகைமைத் தன்மை யான உலகத்தில் வாழ்வதுபோலவும், தனக்கு வேண்டிய பொருள்களனைத்தையும், தனக்கு அன் னியமான முறையில் அமைக்கப்பட்டதும், தனது நோக்கத்திற்கு உடன்படாததுமான அமைப்பி லிருந்து பலவந்தமாகப் பறிக்கவேண்டியிருப்பது போலவும் அவர்கள் கருதுகிறார்கள். தம்மைச் சுற்றித் தடைச்சுவர் எழுப்பிக்கொண்டு வாழும் நகர வாழ்வின் வழக்கமும் பயிற்சியும் இவ்வித மனப் போக்கை ஏற்படுத்துகிறது. நகரத்தில் வாழும் மனிதன் தனது கூரிய மனப் பார்வையை எப்போ தும் தன் வாழ்வின் மீதும் தன் காரியங்களின் மீதுமே செலுத்திக்கொண்டிருக்கிறான். இத்தகைய வாழ்வு, மனிதனுக்கும் அவனைப் பெற்று வளர்த்துப் பேணுகின்ற பிரபஞ்சத்துக்கும் இடையில் ஒரு போலித்தனமான பிரிவை ஏற்படுத்துகிறது.

இந்தியாவிலோ பிரபஞ்சத்தைப்பற்றிய கருத்து வேறு விதமாக இருந்தது. பிரபஞ்ச அமைப்பில் மனிதனும் ஒரு கூறு என்பது இந்தியா கண்ட பேருண்மை. மனிதனுக்கும் பிரபஞ்சத்துக்கும் இடையிலிருக்கும் ஒருமைப்பாட்டை வலியுறுத்தி யது இந்தியா. நம்மைச் சூழ்ந்துள்ளவை நமக்கு முற்றிலும் அன்னியமாக இருக்குமானால், நாம் அவற்றோடு எவ்விதத் தொடர்பும் கொள்ள முடியா

தென்று அது உணர்ந்தது. மனிதன் தனக்கு வேண்டிய பெரும்பாலான பொருள்களை முயன்று பெற வேண்டியிருக்கிறதே என்றுமட்டும் அவன் குறைகூறலாம். இயற்கை மீது அவன் கூறக் கூடிய குறை இது ஒன்றுதான் உண்மை. ஆனால் அவனுடைய முயற்சிகள் யாவும் வீண்போவதில்லை. அவன் ஒவ்வொரு நாளும் வெற்றிமேல் வெற்றி அடைந்து கொண்டிருக்கிறான். இவ்வெற்றிகளே அவனுக்கும் இயற்கைக்கும் நியாயமான உறவு இருக்கிறதென்பதை எடுத்துக்காட்டுகிறது. எப்படி யென்றால் நம்மோடு உண்மையான உறவில்லாத எதையும் நம்முடைமையாகக் கொள்ள முடியாது.

ஒரு பாதையை இரண்டுவிதமாக நாம் நோக்க லாம். நாம் சேரவிரும்பும் இடத்தையும் நம்மையும் அப்பாதை பிரித்துவைக்கிறதென்று கருதலாம். அப்படிக் கருதினால் நாம் எடுத்துவைக்கிற ஒவ் வொரு காலடியும் பெரிய எதிர்ப்பைச் சமாளித்துப் பெற்ற வெற்றியாக எண்ணிக்கொள்கிறோம். இன் னொரு நோக்கு நாம் போய்ச்சேரவேண்டிய இடத் துக்கு, நம்மை அப்பாதை இட்டுச் செல்லுகிறது என்று நினைப்பது; அப்போது அந்தப்பாதை நாம் போய்ச்சேரவேண்டிய லட்சியத்தின் ஒரு கூறாக அமைந்து விடுகிறது. அப்பாதை ஏற்கெனவே நமது லட்சியத்தின் தொடக்கம். அதன் மீது பிரயாணம் செய்வதின் மூலம் அப்பாதை தன்னிட முள்ள ஒன்றை நமக்குக் கொடுக்கப்போகின்றது; அதைத்தான் நாம் பெறப்போகிறோம். இந்தியா இவ்வாறுதான் இயற்கையை நோக்குகிறது. நாம் இயற்கையோடு ஒன்றுபட்டிருக்கிறோம் என்பது இந்தியாவுக்குக் கண்கூடான உண்மை. உலகப்

பொருள்களுடன் உறவுகொண்டிருப்பதனுல் தான் மனிதனுக்கு நினைக்கும் ஆற்றல் இருக்கிறது. இயற்கைச்சக்திகளை மனிதன் தனக்காகப் பயன் படுத்திக்கொள்ள முடிகிறது என்ருல், அவனுடைய சக்தியும் பிரபஞ்ச சக்தியும் ஒன்ருக இருப்பதுதான் காரணம். நாளடைவில் மனிதனுடைய நோக்கம், இயற்கையை இயக்கிக்கொண்டிருக்கும் நோக்கத் தோடு மோதிக்கொள்ளாது. இயற்கை உயிரற்ற பொருள்களையும் விலங்கினங்களையும் கொண்ட தென்றும் அந்த அமைப்பில் மனித இனம், முன்பின் பொருத்தமில்லாமல் திடுதிப்பென்று தொடங்குகிற தென்றும் மேனுட்டினரிடையே ஒரெண்ணம் பரவிக் கிடக்கிறது. அவர்களுடைய கருத்தின்படி உயிர் இனத்தில் தாழ்ந்தபடியுள்ளன யாவும் மட்டமான இயற்கையின் பால் பட்டனவாகும். அறிவுத்துறை யிலோ அறநெறியிலோ பூரணத்தின் முத்திரை யிடப்பட்டவை யனைத்தும் மனிதத்தன்மையின் பாற்பட்டன. இத்தகைய பாகுபாடு அரும்பையும் மலரையும் தனிவேறு இனமாகப் பிரித்து அவை யொன்றுக்கொன்று எதிரான இரண்டு தனிக் கொள்கைகளைக் கொண்டுள்ளன என்றும் அதனுல் தான் அவை அழகுபெற்றிருக்கின்றன என்றும் கூறுவதுபோன்றிருக்கிறது. ஆனுல் இந்திய மனமோ இயற்கையுடன் தனக்குள்ள உறவையும் எல்லாவற்ருேடும் தனக்குள்ள இடையருத இணைப் பையும் ஒப்புக்கொள்ளத் தயங்கியதே இல்லை.

படைப்பின் அடிப்படையில் ஒற்றுமையிருக்கிற தென்பது இந்தியாவில் வெறும் வேதாந்த விசார ணையாக இருக்கவில்லை. உணர்விலும் செய்கை யிலும் இவ்வொற்றுமையைக் காண்பதே இந்தி

யாவின் வாழ்க்கை லட்சியமாக இருந்து வந்திருக் கிறது. தியானம், தொண்டு, ஒழுங்குபடுத்தப்பட்ட வாழ்க்கை, ஆகியவைகளின் மூலம் இந்தியா தன்னு ணர்வை விரிவாக்கிற்று. ஒவ்வொரு பொருளையும் ஆன்மவடிவில் காணுமாறு தன்னுணர்வைப் பெருக் கிற்று. மண், நீர், ஒளி, பழங்கள், மலர்கள், ஆகியவை யெல்லாம் இந்தியாவுக்கு வெறும் சடப்பொருள் களல்ல. வேண்டும்போது பயன்படுத்திக்கொண்டு வேண்டாதபோது அப்பாலெறியத் தக்கனவுமல்ல. பண்ணின் பூரணத்திற்குப் பல ஸ்வரங்களும் அவசியமாயிருப்பதைப் போல, தன்னை முழுதும் உணருவதற்கு, இயற்கைப் பொருள்களனைத்தும் மனிதனுக்கு அவசியமாகின்றன. உலகம் இருப் பதுவே அது நமக்குப் பெரும்பயனுள்ள தென் பதைக் காட்டுகிறதென்பது, இந்தியா கல்லாது உணர்ந்த கல்வி. இவ்வுண்மையை நாம் எப்பொழு தும் மனதிலிறுத்திக் கொள்ளவேண்டும். இவ்வுல கோடு நாம் உணர்வுடன் கூடிய தொடர்பை ஏற் படுத்திக்கொள்ள வேண்டும். நாம் ஏற்படுத்தும் தொடர்பு வெறும் விஞ்ஞான அதிசயங்களைக் கண்டு பிடிக்கவேண்டுமென்ற ஆசையாலோ, பொருள் திரட்ட வேண்டுமென்ற ஆசையாலோ தூண்டப் பட்டதாக இருக்கக்கூடாது. அன்புடனும், பெரு மகிழ்ச்சியுடனும், அமைதியுடனும், கொள்கின்ற உறவாக இருத்தல் வேண்டும். ஒருவிதத்தில் பார்த்தால் உலகம், நமது ஐம்பொறிகளுக்குத் தென்படுவதைப்போல இருக்கவில்லை. விஞ்ஞானி இதை நன்கறிவான். மண்ணும் நீரும் சக்தி களின் விளையாட்டு. அச்சக்திகள் நமக்கு மண்ணும் நீருமாகக் காட்சியளிக்கின்றன. நாம் அவற்றை

முழுதும் உணரமுடியாது; ஏதோ கொஞ்சம் உணர லாம். இதையும் விஞ்ஞானி நன்கறிவான். மண், நீர் என்ற சக்திகளாக உருவெடுத்து காலப் போக்கில் இயங்கி நிற்கும் நித்திய இச்சையை உணர்ந்து விட்டால், மண், நீர், ஆகியவை களைப்பற்றிய முடிவான உண்மையையும் நாம் அறியக்கூடும் என்பதை ஆன்மஉணர்வுக் கண் திறக்கப்பெற்றவன் நன்கு உணர்வான். இவ் உணர்வு விஞ்ஞானத்தைப் போன்று வெறும் அறிவல்ல. ஆன்மாவை ஆன்மா உணர்வதாகும் இது. அறிவு, பலத்தைக்கொடுக்கும். இவ்வுணர்வு பலத்தைக் கொடுக்காது. ஆனல் அது ஆனந்தத் தைக் கொடுக்கும். சொந்தமான இரு பொருள்கள் ஒன்று கூடுவதால் ஏற்படுவதே ஆனந்தம். உலகத் தோடு ஏற்பட்ட பழக்கம் ஒருவனுக்கு விஞ்ஞானம் கற்பித்ததைக் காட்டிலும் அதிகமாக ஒன்றும் உலகத்தைப்பற்றித் தெரிவிக்காவிட்டால், ஆன்ம உணர்வு கொண்ட ஒருவனுக்கு உலகம் எவ்வாறு தோற்றமளிக்கும் என்பதை அவன் ஒரு போதும் உணரப்போவதில்லை. தண்ணீர் ஆன்ம உணர்வு பெற்றவனது உடலைத் தூயதாக்குவது மட்டுமன்றி அவனது உள்ளத்தையும் அது தூய்மைப்படுத்து கிறது. ஏனெனில் அது அவனது ஆன்மாவைத் தொடுகிறது. மண், அவனது உடலைத் தாங்குவ தோடு மட்டும் நின்று விடவில்லை. அவன் மனத் தையும் மகிழ்விக்கின்றது. ஏன்? மண்ணின் தொடர்பு வெறும் ஸ்தூலத்தொடர்பு மட்டுமல் லாது அவனுக்கு நித்தியமான உயிருள்ள காட்சி யுமாகிறது. உலகுடன் தனது உறவை யுணராத மனிதன் சிறையில் வாழ்கிருன். சிறையின் சுவர்கள்

அவனுக்கு அன்னியமானவை. எல்லாப்பொருள் களிலும் நித்திய ஜீவனைக்காணும் பொழுது மனிதன் விடுதலை பெறுகிருன். தான் பிறந்துள்ள இவ்வுலகின் முழு அர்த்தத்தையும் அப்பொழுது தான் உணர்கிருன். பூரண உண்மையில் தானு மிருப்பதைக் காண்கிருன். 'பார்க்கும் திசையெல் லாம் நாமன்றி வேறில்லை என்ற ஒன்ருகக் காணும் காட்சி' அவனுக்கு ஏற்பட்டு விடுகிறது. 'உட லோடும், உயிரோடும், சுற்றியுள்ள பொருள் களுடன் மிக நெருங்கிய உறவு கொண்டுள்ளோம் என்பதைத் தெளிவாக உணர்ந்து கொள்ளுங்கள்' என்று இந்து சாத்திரங்கள் இந்தியர்களுக்கு விதிக் கின்றன. உதய சூரியனையும், பாய்ந்து செல்லும் நீரையும், வளந்தரு மண்ணையும் நம்மைத் தழுவிக் காக்கும் மெய்ப்பொருளின் வெளித்தோற்றங் களாகக்கொண்டு அவைகளை வாழ்த்தி வரவேற்க வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. எங்களது அன்ருட ஜபத்தின் வாசகம் 'காயத்திரி' எனப் படும். காயத்திரியை, வேதங்களின் சாரம் என்று கருதுகிருர்கள். காயத்திரியின் துணையால், உணர் வுள்ள மனித ஆன்மாவுக்கும் உலகுக்கு முள்ள முக்கிய ஒற்றுமையை அறிய நாம் முயல்கிருேம். எதனுடைய சக்தி, மண், விண், விண்மீன்கள் ஆகியவற்றைப் படைக்கிறதோ, மேலும், எந்தச் சக்தி, வெளி உலகத்தோடு இடையருது கூடவே இருந்து இயங்குகிற அறிவாகிய ஒளியை நம்மனத் தில் ஏற்றுகிறதோ, அந்த நித்திய ஜீவனுல் நிலை நிறுத்தப்பட்டிருக்கிற ஒற்றுமையை உணரக் கற்றுக் கொள்கிருேம்.

இதனால் பல்வேறு பொருள்களுக்கிடையே காணும் மதிப்பின் தராதரத்தைக் கவனியாது அவற்றை இந்தியா அலட்சியம் செய்ய முயன்றிருக்கிறது என்று கூறப்படுமானால் அது சரியல்ல. அவ்வாறு செய்தால் வாழ்க்கையே நடைபெறாது என்பது இந்தியாவுக்குத் தெரியும். படைப்பு வரிசையில், மனிதன் மேல் வரிசையிலுள்ளவன் என்பது இந்திய மனம் அறியாததல்ல. ஆனால் மனிதனுடைய மேம்பாடு எதில் அடங்கியிருக்கிறதென்பதைப்பற்றி இந்தியா கொண்ட கருத்தோ வேறுபட்டதாகும். மேம்பாடு, பொருளைத் திரட்டும் சக்தியிலில்லை, ஒன்றுபடும் சக்தியிலிருக்கிறது. அதனால்தான், எங்கெங்கு தனிப்பெருமை அல்லது தனியழகுடன் இயற்கை விளங்கியதோ, அவ்விடங்களைத் தனது புண்ணிய ஸ்தலங்களாக இந்தியா தேர்ந்தெடுத்துக் கொண்டது. அவ்விடங்களுக்குச் சென்றவுடன், அற்பத் தேவைகளை நாடி யுழலும் குறுகிய வட்டத்தைத் தாண்டிவந்து எல்லையற்ற பரம்பொருளில் தானுமிருப்பதை அவன் மனம் காணும். எல்லா உயிர்களின்மீதும் அன்பு செலுத்துவதற்காக, இந்திய மக்களனைவரும் புலாலுண்டு வந்த வழக்கத்தை நீக்கி, சைவர்களானதற்கு இதுவே காரணம். இது மனித சரித்திரத்திலேயே ஒப்புயர்வற்ற அற்புத நிகழ்ச்சியாகும்.

அகத்திலும் புறத்திலும் பெரும் பேதச்சுவர்களை எழுப்பி இயற்கையின் வற்றாத வாழ்வுச் சுனையிலிருந்து எப்பொழுது நம்மை நாம் வம்படியாகப் பிய்த்துப் பிரித்துக்கொள்கிறோமோ, பிரபஞ்சத்தைச் சேர்ந்த மனிதன் என்ற நிலைமையை விட்டுவிட்டு நாம் எதனிலும் சேராத வெறும் மனிதன் என்று

எப்பொழுது ஆகிருேமோ, அப்பொழுது பெருஞ் சிக்கலான பிரச்சினைகளை உண்டாக்குகிருேம். இதை இந்தியா நன்குணர்ந்திருந்தது. இப்பிரச் சினைகள் தீரக்கூடிய வழியை அடைத்துவிடுகிருேம். பிறகு என்னென்ன போலி முறைகளுண்டோ அவைகளையெல்லாம் கையாளுகிருேம். இந்த முறைகள் ஒவ்வொன்றும் ஓயாத் தொல்லைகளை பரி வாரம்போல் உடனழைத்து வருகின்றன. பிரபஞ் சத்தில் தனக்குள்ள புகலிடத்தைவிட்டு எப்பொழுது மனிதன் நீங்குகிருனே, எப்பொழுது மனித ஜாதி என்ற ஒற்றைக் கயிற்றின்மீதே நடக்க ஆரம்பிக் கிருனே அப்பொழுது, ஒன்று, அவன் ஆட்டத்தில் நிற்கவேண்டும் அல்லது கீழே விழவேண்டும். ஒவ்வொரு அடியெடுத்து வைக்கும்போதும் ஒவ் வொரு சதையையும் நரம்பையும் முறுக்கிப் பிடித்து நிறுத்திச் செல்ல வேண்டும். இளைத்த சமயத்தில் அவன் பரம்பொருள்மீது எரிந்துவிழுவான். உலக சிருஷ்டியிலே மனிதனுக்கு மாத்திரம் அநீதி இழைக்கப்பட்டிருக்கிறதென்று உள்ளூரப் பெருமை யும் திருப்தியும் அவனுக்கு உண்டாகிறது.

ஆனல் இந்த நிலைமை நெடுநாளைக்கு ஓடாது. மனிதன் தன் உயிரின் முழுமையை உணர்ந்தாக வேண்டும். எல்லையின்மையில் தன்னிடத்தையும் அவன் கண்டுகொள்ள வேண்டும். மனிதன் என்னதான் அரும்பாடு பட்டாலும் தேன் கூட்டுக் குள்ளேயே தேனை உண்டாக்க முடியாது. தேனை வெளியே போய்த்தான் தேடவேண்டும். கூட்டின் சுவர்களுக்கு வெளியே இருக்கின்றது உயிருக்கு வேண்டிய வற்ருத அமுதுச்சுனை. எல்லையற்ற பரம்பொருளின் கையணைப்பு உயிரூட்டுந் தன்மை

யது, தூய்மைப் படுத்துவது. மனிதன் எப்பொழுது அதைத் தடுத்துவிட்டு தன் வாழ்வுக்கும் உய்வுக்கும் தன்னையே சாருகிறானோ அப்பொழுது தனக்கே பைத்தியத்தை உண்டாக்குகிறான். தன்னையே சந்து சந்தாகப் பிய்த்துக்கொள்கிறான். தன் சத்தையே உண்ணத் தலைப்படுகிறான். பரிபூரணத்தைச் சார்ந்திருக்கிறேன் என்ற பின்னமைப்பை இழந்த அவனுடைய வறுமை தனது உயர் தன்மையான எளிமையை இழந்து நிற்கிறது. அவ்வறுமை நாற்றம் அடைகிறது. நாணத்தால் முகத்தை மறைத்துக்கொள்கிறது. அவனது செல்வமும் பெருந்தன்மையற்று வெறும் ஆடம்பரமாக மாறுகிறது. செல்வம் வந்தபோது, உடல் வாழ்வதற்காக அவனுக்குப் பசிகள் உண்டாவதில்லை. பசிகள் தங்கள் காரியத்தோடு அடங்கிக் கிடப்பதில்லை. அவைகளே இறுதி லட்சியங்களாகமாறி அவனுடைய வாழ்வுக்கு நெருப்பு மூட்டிவிட்டு, பற்றியெரியும் பயங்கரத் தீ வெளிச்சத்தில் யாழ் மீட்டுகின்றன. இத்தகைய நிலைமையை அடைந்தபொழுதுதான் நாம் நம்முடைய காரியங்களினால் பிறரைக் கவர்ச்சி செய்வதற்குப் பதிலாக அவர்களைத் திகைக்கவைக்க முயல்கிறோம். நமது கலை வெகு நூதனமாக இருக்கவேண்டுமென்று ஆசைப்பட்டு, மிகப் பழமையானதும், ஆனால் புதுமையாகவும் இருக்கின்ற உண்மையைக் கைவிட்டு விடுகிறோம். மனிதனுடைய தோற்றம் மிக எளிமையானது. ஆனாலும் பெருமை வாய்ந்தது. இலக்கியத்தில் அவனுடைய முழுத் தோற்றத்தையும் பார்க்கத் தவறிவிடுகிறோம். அவ்வாறு தோன்ற வேண்டிய மனிதன் ஏதோ வெறும் மனோதத்துவப்

பிரச்சினைப் பொருளாக நமக்குக் காட்சியளிக்கிறான் அல்லது கண்ணைப் பறிக்கும் செயற்கையொளியில் சித்தரித்துக் காட்டப்படுவதால் வரம்பு தாண்டிய உணர்ச்சிப் பிண்டமாகத் தோன்றுகிறான். தனது உடல் தேவைகளைப் பொறுத்த அளவோடு மட்டும் அவனுடைய அறிவு சம்பந்தப்பட்டு நிற்கும் பொழுது அவனுடைய உயிரின் ஆணிவேர்கள் தமக்குச் சொந்தமான நிரந்தர நிலத்தைக் காணாது தவிக்கின்றன. அவனது ஆன்மா எப்போதும் பட்டினியாகக் கிடக்கின்றது. ஆரோக்கியமான வலுவைப் பெறுவதற்குப் பதிலாக அவன் போதை வரிசைகளை வைத்துக்கொள்கிறான். தன் அந்தரங் கக் காட்சியை அவனால் பார்க்க முடியவில்லை. எல்லையற்ற பொருளுடன் சேர்ந்திருப்பதால்தான் தனக்குப் பெருமையுள்ள தென்பதை மறந்து தன்னுடைய பெருமையைத் தன் பருமனால் அளக்கிறான். பரிபூரணம் அமைதியானது. அவ் வமைதி நட்சத்திரங்கள் நிறைந்த வானத்திலும், சிருஷ்டியின் ஆதியந்தமற்ற நடனத்திலும் காணப் படுகிறது. பரிபூரணத்தின் அமைதியோடு ஒப் பிட்டு தனது செயலின் தராதரத்தை நிர்ணயிக்க வேண்டியதிருக்க, தன் நடமாட்டத்தைக்கொண்டு அதை நிர்ணயிக்கிறான்.

இந்தியாவில் ஆரியர்கள் நுழைந்தது போல ஐரோப்பியர்கள் அமெரிக்காவில் குடியேறினார்கள். அமெரிக்காவில் அவர்களுக்கும் கண்ட திசையெல் லாம் காடுகள் எதிர்ப்பட்டன. பூர்வீகக் குடிகளும் அவர்களை எதிர்த்தார்கள். அங்கு மனிதனோடு மனிதன் நடத்திய போராட்டமும், மனிதன் இயற்கையோடு நடத்திய போராட்டமும் கடைசி

வரை நிகழ்ந்துவந்தன. சமாதானம் ஏற்பட வில்லை. இந்தியாவில் காட்டுமிராண்டிகள் வாழ்ந்த காடுகள், தபோவனங்களாக மாறின. அமெரிக் காவிலோ இயற்கை ஆலயங்களான காடுகள் மனிதன் பார்வையில் கேவலம் மரக்கூட்டங்களா கத் தென்பட்டன். அவை மனிதனுக்கு செல்வத் தையும் அதிகாரத்தையும் ஈந்தன. அவனுடைய அழகுணர்ச்சிக்குப் பின் பாட்டுப் பாடின. ஒரொரு சமயம் தன்னந்தனியா யொதுங்கிய கவிஞனுக்கு கவிதா உணர்ச்சியை அளித்தன. ஆனால் மனித னுடைய ஆன்மா உலக ஆன்மாவோடு சந்திக் கும் ஞானவனங்கள் என்ற தெய்விகத் தொடர்பை அமெரிக்கக் காடுகள் பெறவில்லை.

காரியங்கள் வேறுமாதிரி நடந்திருக்கவேண்டு மென்று நான் சொல்லவரவில்லை. சரித்திரம் எல்லா இடங்களிலும் திரும்பத்திரும்ப ஒரேமாதிரி நிகழ்ந்துகொண்டிருந்தால், நிகழ்ச்சிகளத்தனையும் வீணாகும். வெவ்வேறு நிலையிலுள்ள மக்கள் தங்களது உயர்ந்த பண்பாடுகளை மனித சமுதாய மன்றத்துக்குக் கொண்டுவந்து பரிமாறிக்கொள்ள வேண்டும். அப் பண்பாடுகள் ஒன்றுக்கொன்று அவசியமானதாகவும், நிறைவு செய்வனவாகவும் இருக்கும். இதுவே மனித சமுதாயத்தின் ஆக் கத்தை விருத்தி செய்வதற்கு நல்ல முறையாகும். இந்தியா தனது வாழ்க்கையைத் தொடங்கின போது அதற்கு அலாதியான சந்தர்ப்பச் சேர்க்கை கள் கிடைத்தன. அவைகளை இந்தியா வீணடிக்க வில்லை யென்பதைத்தான் நான் எடுத்துக்கூற விரும்புகிறேன். சந்தர்ப்பங்கள் தனக்கு அமைத் துக்கொடுத்த முறையில் இந்தியா சிந்தனை

செய்தது. ஆழ்ந்த தியானம் செய்தது: மெய் வருந்தி உழைத்தது. வாழ்வின் ஆழத்தில் மூழ்கியது. தானும் ஏதோ அருநிதியங்களைப் பெறத்தான் செய்தது. சமுதாய வளர்ச்சிச் சரித்திரத்தில் வேறெங்குமில்லாத தனிப்போக்கை உடைய இந்திய மக்களுக்கு இந்தியா பெற்றெடுத்த நிதியங்கள் மதிப்பிழந்து நில்லா. மனிதனுடைய வாழ்வு எண்ணற்ற அம்சங்களை உடையது. அவனுடைய பூரண வளர்ச்சிக்கு எல்லா உயிர் அம்சங்களும் தேவையே. ஆகவேதான் அவனுடைய உணவு, உலகிலுள்ள பல வயல்களில் பயிராக்கப்பட வேண்டியிருக்கிறது. பல உற்பத்திஸ்தானங்களிலிருந்து கொண்டுவரப்படவேண்டியிருக்கிறது.

நாகரிகம் ஒருவகையான வார்ப்புப்போன்றது. ஒவ்வொரு தேசமும் தன்னுடைய லட்சியத்துக்கேற்பத் தனக்கென்று பிரத்தியேகமாக ஒரு நாகரிக வார்ப்பை உண்டாக்கி, அதில் தன்னுட்டு ஆண்களையும், பெண்களையும் அவ்வார்ப்பிலிட்டு உருவாக்க முனைகிறது. அதனுடைய ஸ்தாபனங்கள், சட்டசபைகள், எது புகழ்ச்சி, எது இகழ்ச்சி என்பது பற்றிய முடிபு, தெரிந்தும் தெரியாமலும் கற்பிக்கும் கல்வி, ஆகிய யாவும் அந்த லட்சியத்தையே நோக்கிச் செல்கின்றன. தற்காலத்திய மேலை நாட்டு நாகரிகம் ஒழுங்காக அமைக்கப்பட்டுள்ள முயற்சிகளின் மூலம் தன்னுட்டு ஆடவர் பெண்டிரை உடலிலும், மனத்திலும், ஒழுக்கத்திலும் உரமேறிய திறமைசாலிகளாக்க முயல்கிறது. சுற்றியுள்ள இயற்கைப்பொருள்களின் மீது தனது ஆதிக்கத்தை விருத்தி செய்வதன் பொருட்டே ஆங்கு தேசங்கள் தங்களது முழுச்சக்திகளை ஈடுபடுத்துகின்றன. தங்க

ளது விஞ்ஞானத் திறமைகளை ஒருமுகப்படுத்தி முழுமூச்சாக மேலும் மேலும் பொருளீட்டுவதிலும், அகப்பட்டதை யெல்லாம் பணமாக மாற்றுவதிலும், இக்காரியங்களுக்கு இடையூருய் நிற்பவைகளை வெல்லுவதிலும் மும்முரமாக இருக்கின்றன. இயற்கையையும் இதர இனத்தவரையும் வெல்லுவதற்காக எக்காலத்திலும் அந்நாட்டினர் போர்க்கலை பயின்று வருகிருர்கள். அவர்களுடைய போர் ஆயுதங்கள் நாளுக்குநாள் திகைப்படையச் செய்கிற அளவுக்கு பயங்கரமாகிக்கொண்டு வருகின்றன. அவர்களுடைய இயந்திரங்கள், கருவிகள், சாதனங்கள், அவர்களுடைய கழகங்கள் திடுக்கிடுமளவில் பெருகிக்கொண்டு போகின்றன. மனிதனுடைய ஆண்மை எதிர்ப்பறியாதது. எல்லாவற்றையும் அடக்கியாளுவதே அதன் நோக்கம். மேனுடுகளின் செயல்கள் இவ்வாண்மையை ஆச்சரியகரமான முறையில் வெளிப்படுத்துகின்றன. அவை மேலான வெற்றி யென்பதற்குச் சந்தேகமில்லை.

எது பூரணத்துவம் என்பதைப்பற்றி இந்தியா தனக்கென்று ஒரு தனி லட்சியத்தை வைத்திருந்தது. தனது காரியங்களனைத்தையும் தன் லட்சியத்தை நோக்கியே அது திருப்பியது. இந்தியாவின் நோக்கம் சக்தியைப் பெறுவதல்ல. இதுபற்றியே தன்னுடைய திறமைகளை எவ்வளவு தூரம் பெருக்கலாமோ அவ்வளவு தூரம் பெருக்காமல் இந்தியா புறக்கணித்துவிட்டது. தன்னைக் காக்கவும் பிறரைத் தாக்கவும் மனிதர்களை ஒன்று கூட்டிப் பயிற்சியளிக்கவில்லை. பொருள் சேர்க்கவோ, ராணுவ அல்லது அரசியல் ஆதிக்கத்தைப்

பெறவோ மனிதர்களிடையே கூட்டுறவை ஏற்படுத்தவில்லை. இந்தியாவின் லட்சியத்தை உணர்ந்து அதை நிறைவேற்றுவதற்காக, அவளுடைய சிறந்த புலவர்கள் தனியாக ஒதுங்கித் தியான வாழ்க்கையிலீடுபட்டார்கள். இவர்கள் உண்மையின் அற்புத ரகசியங்களை ஊடுருவிச் சென்று அருநிதியங்களைக் கைக்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டதன் காரணமாக இந்தியா இகலோக வெற்றிகளைப் பெரிதும் இழக்கவேண்டி நேரிட்டது. இருப்பினும் இந்தியாவின் வெற்றியும் விழுமியது. இவ்வெற்றி எல்லையற்ற மனித ஆர்வத்தை இணையற்ற முறையில் வெளிப்படுத்துகிறது. பரம்பொருளை உணர்வதே இதன் லட்சியம்.

இந்தியாவில் அறவோர், அறிஞர், ஆண்மையாளர் இருந்திருக்கின்றனர். அமைச்சர், அரசர், பேரரசர் இருந்திருக்கின்றனர். ஆனால் இவர்களனைவரிலும் இந்தியா யாரைத் தனக்கு வழிகாட்டியாக எதிர்நோக்கி நின்றது-யாரைத் தனது பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்தது ?

அவர்கள் தான் ரிஷிகள். யார் இவர்கள்? இந்த ரிஷிகள் ? "பரமாத்மனை நன்குணர்ந்து அறிவு நிரம்பியவர்கள். ஆத்மாவில் அவன் ஒன்றியிருப்பது கண்டு அந்தராத்மாவில் ஐக்கியமானவர்கள். இதயத்தில் அவன் இருப்பதை உணர்ந்து ஆசைகளினின்று நீங்கியவர்கள். உலகக் காரியங்களனைத்தினும் அவனை அனுபவித்தவர்களாய் அமைதிபெற்றவர்கள். எல்லாத் திக்குகளிலும் பரமேஸ்வரனை எய்தி நிலையான அமைதியைக் கண்டவர்கள்,

எல்லாவற்றோடும் ஒன்றானவர்கள், பிரபஞ்ச உயிரில் கலந்தவர்கள் ".

இவ்விதமாக எல்லாவற்றோடும் உள்ள உறவை உணருதலும் கடவுளோடு ஒன்றுவதன் மூலம் ஒவ்வொரு பொருளோடும் கலத்தலும் ஆகியவைகளே மனித சமுதாயத்தின் இறுதியான நோக்கமும் நிறைவும் என்று இந்தியா கருதியது.

மனிதனால் நாசம் பண்ணமுடியும், கொள்ளையடிக்க முடியும், ஈட்ட முடியும், திரட்ட முடியும். ஆனால் அவனுடைய பெருமை இச்செயல்களில் இல்லை. அவனுடைய ஆன்மா எல்லாவற்றையும் உணர்கிறது. அதுவே அவனது பெருமை. எப்பொழுது மனிதன் ஈவிரக்கமற்ற ஆசாரங்களாகிய உயிரற்ற உடற் கூட்டினால், தனதாவியைப் போர்த்திக் கொள்கிறானே, எப்பொழுது ஓயா உழைப்புக்களின் உணர்வற்ற வேகம் புழுதி நிறைந்த சூறுவளிபோல் அவனைச் சூழ்ந்துவீசி அவனுடைய தொலைப் பார்வையைத் தடுத்துவிடுகிறதோ அப்பொழுது அவனுக்குச் சர்வ நாசம்தான். இந்த நிலைமை எல்லாவற்றையும் உணருகின்ற அவனது ஆவியைக் கொன்று விடுகிறது. முக்கியமாக மனிதன் தனக்கோ உலகுக்கோ அடிமையானவனில்லை. அவன் அன்பாளன். அவனுடைய சுதந்தரமும் நிறைவும் அன்பிலிருக்கிறது. அன்பென்பது நிறையறிவின் மற்றொரு பெயர். உணருகின்ற இச்சக்தியின் மூலம் அவனுடைய வாழ்வை எங்கும் பரப்புவதால் எங்கும் தங்கும் இறையுயிரோடு அவன் ஒன்றுபடுகிறான். எங்கும் நிறைந்த இறையுயிரே இவனுடைய ஆன்மாவின் மூச்சு. எங்கெங்கு

மனிதன் பிறரைப் போராடித்தள்ளிமுந்திக்கொண்டு தனக்கே உயர்வைத் தேட முயல்கிருனே, மற்றவர் களைக்காட்டிலும் எவ்வளவோ பெருமை பாராட்டி அதன் மூலம் தனக்குத் தனி கௌரவத்தைச் சம்பா திக்க முயல்கிருனே அப்போது அவன் பரம்பொரு ளிலிருந்து அப்பாற்பட்டவனுகிருன். இது காரண மாகவேதான், மனித வாழ்வின் லட்சியத்தைக் கை வரப்பெற்றவர்களை உப நிஷத்துகள் 'ஆன்றமைந் தோர்' 'இறைவனேடொன்றினேர்' எனக் கூறு கின்றன. அதாவது அவர்கள் மனிதனேடும் இயற்கையோடும் நன்கிசைந்து அதனுல் இறைவ னேடும் இடையீடற்ற கலப்புள்ளவர்ளெனக் கூறு கின்றன. ஒரு ஒட்டகம், ஊசியின் காதுவழி நுழை வதாயினும் எளிதாகிவிடலாம். ஆனுல் ஒரு பணக் காரன் சொர்க்கத்தில் நுழைவதென்பது எளிதல்ல என்று இயேசுநாதர் சொல்லும் பொழுது, அவரு டைய போதனையில் இந்தப் பேருண்மையின் ஒளி யையே காண்கிருேம். நாம் எவ்வெவற்றை நமக் கென்று அருமையாகப் பேணிவைத்துக் கொள் கிருேமோ அவை நம்மைப் பிறரோடு சேரவொட் டாமல் பிரிக்கின்றன. நம்முடைய உடைமைகளே நம்மைப்பிணிக்கும் வரம்புகள். எவன் செல் வத்தைத் திரட்டுவதில் முனைந்திருக்கிருனே அவ னுடைய அகங்காரம் விம்மிப் புடைப்பதனுல் ஆன்ம அறிவென்னும் வாசலுக்குள்ளே அவனுல் நுழைய இயலுவதில்லை. ஆன்ம உலகென்பதோ எல்லா வற்றேடும் ஒன்றி இசைவதாம். அவனே அவ னுடைய உடைமைகளென்ற சுருங்கிய சுவர்களுக் கிடையே அடைபட்டுக் கிடக்கிருன்.

இது நோக்கியே உப நிஷதங்களும் 'அவனைக் காணவேண்டின் நீ எல்லோரையும் அணைத்துக் கொள். செல்வத்தைத்தேடும் போது, உண்மையாக நீ அற்ப சொற்பத்தை அடைவதற்காக, எல்லா வற்றையும் இழக்கிறாய். பரிபூரணமாக இருக்கின்ற வனை அடைவதற்கு இது வழியல்ல' என்று கூறுகின்றன.

உப நிஷதங்களுக்கு நேரடியாகவோ மறைமுக மாகவோ கடமைப்பட்டுள்ள சில மேனாட்டுத் தத்துவ நூலார் நன்றி பாராட்டாமல், இந்தியாவில் கூறப்படும் பிரமம் என்பது வெறும் கற்பனையென் றும், உலகத்திலிருக்கும் எல்லாம் பொய் என்று கூறுகின்ற வேதாந்தம் என்றும் வாதிக்கிறார்கள். சுருங்கச் சொன்னால் வரம்பிலியை நுட்ப வாதங் களில் தவிர வேறெங்கும் கண்டுகொள்ள முடியா தென்கிறார்கள். இத்தகைய கொள்கை நமது நாட்டி னருள் சிலரிடையேயும் இப்பொழுதும் இருக்கக் கூடும், முன்பும் இருந்திருக்கக்கூடும். ஆனால் இக் கொள்கை இந்தியா முழுவதும் பரவிநிற்கும் மனப் போக்குக்கு ஒத்ததில்லை. உண்மையில், எல்லையற்ற பொருள், எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருக் கிறதென்பதை வலியுறுத்தி அதை உணருவதே இந்தியாவின் இடைவிடாத ஆர்வமாக இருந் திருக்கிறது.

"உலகில் இருப்பன யாவும் இறைவனால் மூடப்பட்டிருக்கிறதாகக்" காண வேண்டுமென்று எங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிறது.

"நீரிலும் நெருப்பிலும் இருக்கின்ற இறை வனை, உலக முழுதும் நிறைந்திருக்கிறவனை,

வருஷத்திற் கொருமுறை விளைகிற தானியத்திலும், வருஷந்தோறும் பயனளிக்கிற மரங்களிலும் இருக்கிற இறைவனை நான் மீண்டும் மீண்டும் வணங்குகிறேன்".

இக்கடவுளா உலகினுக்கு அப்பாற்பட்டவர்? உண்மையில் இது இறைவனை எங்கும் காண்பதை மாத்திரம் காட்டவில்லை. உலகிலுள்ள எல்லாப் பொருள்களிலும் இறைவனைக்கண்டு தொழுவதைக் காட்டுகிறது. கடவுளுணர்வு பெற்றவனென்று உப நிஷத்தில் கூறப்பட்ட மனிதன், பிரபஞ்சத்தை ஆழ்ந்த பக்தியோடு நோக்குகிறுன். அவன் வணங்கும் கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறுர். நாம் காணுகின்ற யாவற்றையும் உண்மையாக்குகிற பேருண்மை இதுதான். அறிவைப் பொறுத்தமட்டிலும் என்பதில்லை, பக்தியைப் பொறுத்தும் இது உண்மையான விஷயமாகும். 'நமோ நமஹ' நாங்கள் அவனை எவ்விடத்தும் வணங்குகிறோம். மீண்டும் மீண்டும் வணங்குகிறோம்.

'இம்பர்வா னுலகில்வாழ் வீரே கேளீர்
இருளுக்கப் பானின்று ஒளியை வீசும்
இறைவனை நான் கண்டுள்ளேன் கண்டுள்
ளேனே'

இங்கே திடீரென்று ஆனந்த பரவசமாகி உலகனைத்தையும் நோக்கிக் கூறுகின்ற முழக்கத்தில் பரம் பொருளை அறிகிறோம். ஐயந்திரிபு மயக்கத்திற்கிடமின்றி நேருக்குநேர் திடமாகக் கண்டனுபவித்த பேரின்பப் பெருக்கையன்றோ மேற்கூறிய சொற்களில் காண்கிறோம்?

உபநிஷத உபதேசங்களின் ஒழுக்க விதிப்பகுதி களைப் பெரிதும் வற்புறுத்தி வந்த புத்தர் இதையே தான் இவ்வாறு அருளினர். "எல்லாப் பொருளுட னும், அஃது மேலிருப்பினும் சரி, கீழிருப்பினும் சரி, அருகிலிருப்பினும் சரி, தொலைவிலிருப்பினும் சரி, தென்படினும் சரி, தென்படாவிடினும் சரி, அவற் றுடன் பகைமையின்றி, கொலை விருப்பமின்றி, எல்லையற்ற அன்பு பூணுதலாகிய உறவைக்கொள். உறக்கம் வரும்வரை நிற்கும்போதும், நடக்கும் போதும், இருக்கும் போதும், கிடக்கும் போதும், இத்தகைய உணர்வில் வாழ்வதே பிரம விஹாரம் எனப்படும். அதாவது நீ பிரம ஞானத்தில் வாழ் கிருய், பிரமத்தன்மையில் நடமாடுகிருய், பிரம ஞானத்தில் ஆனந்தம் கொள்கிருய்.

இந்த பிரமஞானத் தன்மையாவதென்ன? எவன் முக்கியமாக எல்லாப் பொருள்களுக்கும் ஒளி யாகவும் உயிராகவும் இருக்கிருனே, எவன் உலகை நடத்தும் அறிவாக இருக்கிருனே அவனே பிரமன். எல்லாவற்றையும் உணர்வது, அறிந்திருப்புதே அவனது தன்மை. அவனுடைய அறிவில் நாம் உடலோடும் உயிரோடும் ஆழ்ந்திருக்கிருேம். அவ னுடைய அறிவின் மூலமாகத்தான் சூரியன் பூமியைத் தன்பால் இழுக்கிறது. அவனுடைய அறிவின் மூலமாகவே, ஒளியலைகள் வானில் ஒரு கோளிலிருந்து இன்னெரு கோளுக்கு அனுப்பப் படுகின்றன.

இந்த ஒளி, உயிர், எல்லாமுணரும் உயிர், வெளிப்பரப்பில் மட்டுமன்றி நமது ஆன்மாக்களி

லும் இருக்கின்றது. வெளிப் பரப்பில் அதாவது வெளியுலகில் அவன் எல்லாமறிந்தவனுக இருக்கிருன். நமது ஆன்மாவிலும் அதாவது அகவுலகிலும் அவன் எல்லாமறிந்தவனுக இருக்கிருன்.

உலக அறிவை அடைவதற்கு நாம் நம்முடைய உணர்ச்சியை எங்கும் பரவிநிற்கும் உலக உணர்ச்சியோடு ஒன்று படுத்தவேண்டும். உண்மையில் மனிதசமுதாயத்தின் உண்மையான முன்னேற்றம், அது எவ்வளவு தூரம் இவ்வுணர்ச்சியைப் பரப்பி நிற்கிறதோ அந்த அளவைப் பொறுத்திருக்கும். நம்முடைய கவிதை, தத்துவம், விஞ்ஞானம், கலை, சமயம், ஆகிய யாவும் நம்முடைய உணர்வு வரம்பை உயர்ந்த துறையிலும் அதிகப் பரப்பிலும் விரிவடையச் செய்யவே தொண்டாற்றுகின்றன. அதிக நிலப்பரப்பை ஆக்கிரமித்துக் கொள்வதனுல் மனிதன் உரிமைகளைப் பெறவில்லை. வெளியில் நடந்துகொள்ளும் நடத்தையினுலுமன்று. அவன் எவ்வளவு தூரம் உண்மையாளனுக இருக்கிருனே அவ்வளவுக்கு அவனது உரிமைகள் அதிகமாகுகின்றன. அவன் உண்மையாளனுவது அவனது உணர்வின் விரிவைப் பொறுத்திருக்கும்.

சுருங்கிய வரம்பில் அடைபட்டிருக்கும் நமது உணர்வு, கட்டு நீங்கி விடுதலையடைவதற்கு நாம் எப்படியும் விலை கொடுத்தாக வேண்டும். அந்த விலை என்ன? தன்னை ஒப்படைத்தல்தான் அவ்விலை. தன்னை மறுப்பதனுலேதான் நமது ஆன்மா தன்னை உண்மையாக உணரமுடியும். "கொடுப்பதால் பயன் பெறுவாய். ஆசை கொள்ளாதே" என்று உபநிஷதம் கூறுகிறது.

பலனைப்பற்றிய ஆசையை விட்டுவிட்டுப் பற்றின்றி வேலை செய்யுமாறு கீதை நமக்கு உபதேசிக்கிறது. 'பற்றின்றி வேலை செய்க' என்று இந்தியாவில் உபதேசிக்கப்படும் உபதேசம், உலகம் மாயை என்ற கருத்திலெழுந்ததென்று வெளிநாட்டார் அநேகர் முடிவுசெய்து விடுகிறார்கள். உண்மையோ இதற்கு நேர்மாறானது.

தனது பெருக்கமொன்றையே கருதுகிறவன் பிற யாவற்றையும் தாழ்த்தி மதிப்பிடுகிறான். தன்னோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் அவனுக்கு உலகம் பொய்யாகி விடுகிறது, ஆகவே மனிதன் உலகிலுள்ள எல்லாவற்றின் உண்மையை உணருவதற்குத் தன்னுடையசொந்த ஆசைத் தளைகளிலிருந்து விடுபட வேண்டும். நம்முடைய சமுதாயப் பொறுப்புகளைத் தாங்குவதற்கும் நம்முடைய உற்றார் உறவினருடைய சுக துக்கங்களைப் பங்கிட்டுக் கொள்வதற்கும் நாம் நமது சொந்த ஆசைத் தளைகளை ஒழிக்க வேண்டியிருக்கிறது. பெருவாழ்வைப் பெற விரும்பும் மனிதனுடைய ஒவ்வொரு முயற்சியும் 'கொடுத்துப் பயன்பெறு, ஆசைப்படாதே' என்றே அவனை நோக்கிக் கூறுகிறது. இவ்வாறாக எல்லாவற்றுடனும் ஒன்றி அவற்றோடு கலந்து தன் உணர்வை விரிவடையச் செய்வதற்காக மனித சமுதாயம் பாடுபடுகின்றது.

எல்லையற்ற பரம்பொருளென்று இந்தியர்கள் கூறுவது நலிந்த சூனியத்தையன்று. அவர்கள் பொருளல்லவற்றைப் பொருளென்று கூறவில்லை. "அவனை இப்பிறவியிலறிவதே மெய்த்தன்மையாகும். இப்பிறவியில் அவனை அறியாதிருப்பது

சாவாகிய அழிவாகும்" என்று இந்திய முனிவர்கள் வலியுறுத்திக் கூறியிருக்கின்ருர்கள். அவனே எவ் வாறு அறிவது? "அவனே ஒவ்வொன்றிலும் உணருவதன் மூலம்". இயற்கையில் மட்டுமன்றி, குடும்பத்திலும், சமுதாயத்திலும், ராஜ்யத்திலும், எல்லாவற்றிலும் நாம் பிரபஞ்ச அறிவை உணரு வதற்கேற்ப நமக்கும் நன்மையாகும். இதை உண ரத் தவறும்போது நாம் அழிவை நோக்கி நடக்கிருேம்.

ஒரு காலத்தில் தீர்க்க தரிசனம் படைத்த கவி கள் இந்திய வானில் செழித்து வீசும் சூரிய கிரணந் தோய நின்று கொண்டு, உறவு பூண்டு மகிழ்ச்சி பொங்கி உலகை வரவேற்றனர். இப்படியும் ஒரு காலம் பழந்தொன்மையிலிருந்த தென்பதையறிய என் மனத்தில் ஆனந்தம் பொங்குகிறது. மனித சமுதாயத்தின் வருங்காலத்தில் உயர்ந்த நம்பிக்கை ஏற்படுகிறது. எல்லாவற்றையும் இறைவனுக்கி மயங்கும் மயக்கமல்ல இக்காரியம். மனிதனே பெரும் பூதவடிவத்தில் எங்கும் பிரதிபலிக்கக் காண் பதுவுமில்லே. இயற்கையினரங்கத்தில் மறைந் தோடும் ஒளிகளிலும் நிழல்களிலும், மனித நாடகத் தைப் பெரிதுபடுத்திப் பார்ப்பதுமன்று. இதற்கு மாருக மனிதன் தன்னேத் தளேக்கும் கட்டுகளேக் கடந்து, வெறும் மனிதனுகயிருப்பதற்கு மேலாக, எல்லாவற்ருேடும் ஒன்றுவதாகும். இது கற்பனே யின் களியாட்டமுமன்று. தன்னேப்பற்றிய பொய்ப் புனேவுகளிலிருந்தும், மிகைப்படுத்தும் நினேப்புக் களிலிருந்தும் தன்னுணர்வுக்கு விடுதலே அளிப்ப தாகும். உலகில் எண்ணற்ற உருவங்களெடுத்து

உயிர்த்துடிப்புக் கொண்டியங்கும் அதே சக்தியே நமது உள்ளுணர்வாயும் தோன்றியிருக்கிற தென்பதை முற்கால முனிவர்கள் தங்களது மனத்தின் அமைதியான ஆழத்தில் உணர்ந்தார்கள். எங்கும் ஒரே இணைப்பு. இதில் இடை முறிவென்பதேயில்லை. அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமான பூரணப் பொலிவில் இடைமுறிவை அவர்கள் காணவில்லை. உண்மையான வாழ்வில் சாவு பிளவை ஏற்படுத்துகிற தென்பதைக்கூட அவர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. அவனது நிழலே சாவு, அவனது நிழலே நித்திய வாழ்வு என்று அவர்கள் கூறினார்கள். வாழ்வுக்கும் சாவுக்குமிடையே ஏதேனும் முக்கிய வேற்றுமை இருக்கிறதென்று அவர்கள் கருதவில்லை. 'சாவுதான் வாழ்வு' என்று திடமாகக் கூறினார்கள். வாழ்வை, அதன் வருகின்ற வடிவிலும் போகின்ற வடிவிலும் மகிழ்ச்சியோடு வணங்கினார்கள். 'சென்றதும், இனிச் சேர்வதும், இவ்வாழ்வில் மறைந்திருக்கிறது'. கடலின் அலைகளைப் போல, தோற்றமும் மறைவும் மேற்பரப்பில்தான். ஆனால் நித்திய வாழ்வோ கெடுவதுமில்லை, குறைவதுமில்லைஎன்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள்.

ஒவ்வொன்றும் இறவாத வாழ்விலிருந்தே தோன்றியிருக்கிறது. ஒவ்வொன்றும் உயிர்த்துடிப்புக்கொண்டிருக்கிறது. ஏனெனில் வாழ்வு அனந்தமானது.

உணர்வின் விடுதலை யென்ற உன்னதமான இந்த லட்சியம் நமது மூதாதையர் நமக்கு விட்டுச் சென்ற சிறந்த சொத்தாகும். நாம் இதை நம்முடையதென்று ஏற்றுக்கொள்ளுமாறு காத்துக்

கொண்டு நிற்கின்றது. இது அறிவைச் சார்ந்த விஷயம் மட்டுமன்று, எழுச்சி வேகமான விஷயமு மன்று. ஒழுக்க நெறியான அடிப்படையையும் கொண்டிருக்கிறது. ஆகவே இதை நடைமுறை யில் செயலுக்குக் கொண்டுவரவேண்டும். 'பரமேஸ் வரன் எங்கும் பரவியிருக்கிருன். ஆகையால் அவன் எல்லாவற்றிலும் மறைந்துநிற்கும் நன்மை யாவான்" என்று உபநிஷதம் கூறுகிறது. எல்லா உயிர்களுடனும் அறிவினுலும், அன்பினுலும், சேவையினுலும் ஐக்கியமாகி எங்கும் பரவியுள்ள இறைவனில் தன்னை யுணர்வதே நன்மையின் சாரம். 'வாழ்வு அனந்தம்' என்பதே உபநிஷதப் போதனைகளில் பொதிந்துள்ள கருத்தாகும்.

# ஆன்ம அறிவு

நமது உணர்வின் எல்லையை விரிவடையச் செய்து உலகமெங்கும் அதைப் பரவும்படி செய்வதன் மூலம், எல்லாமுணர்ந்த, எங்கும் பரவிய, ஆன்மாவாகிய பிரமத்தில் வாழ்வதும், இயங்குவதும், அதில் மகிழ்வுற்றிருப்பதுமே புராதன இந்தியாவின் பேரவா என்பதைக் கண்டோம். அச்செயல்கள் மனிதனுல் முடியாத காரியமாயிற்றே என்று யாரேனும் வாதாடலாம். உணர்வின் விரிவு என்பது வெளிக்காரியம் என்ருல் அதற்கு முடிவு கிடையாது. அஃது அகப்பையினுல் கடல் நீரை அகற்றிய பின்பு கடலைக் கடப்பது போலாகும். எல்லாவற்றையும் உணரத் தலைப்பட்டுக் கடைசியில் ஒன்றையுமே உணர முடியாமல் போகும்.

ஆனுல் உண்மையில் இக்காரியம் வெளிப் பார்வைக்குத் தென்படுவதுபோல அவ்வளவு அபத்தமானதில்லை. ஒவ்வொரு நாளும் மனிதன் தனது ஆதிக்கப் பரப்பை விரித்துக்கொண்டும் அதற்கேற்ப தனது சுமைகளை ஒழுங்குபடுத்திக்கொண்டும் இருக்கிருன். அவனுடைய சுமைகளோ அநேகம். அவனுல் சுமக்க் முடியாதபடி அவ்வளவு அதிகம். ஆனுல் தன் சுமைகளைக் குறைக்கக்கூடிய முறையைக் கையாண்டால் பாரம் குறையுமென்பது அவனுக்குத் தெரியும். அவனுடைய பிரச்சினைகளெல்லாம் சிக்கலாக அடங்காத நிலைமையை அடையும்பொழுது "சரிதான், எல்லாம் அதனதன் இடத்தில்

வைத்து முன்பின் பாரம் சரியாக வைக்கக்கூடிய முறை தெரியாத கோளாறுதான் இவ்வளவுக்கும் காரணம்" என்று அறிவான். இந்த முறையைத் தேடியலேவதானது, உண்மையாக ஒற்றுமையை, ஒன்று படுத்துவதைத் தேடுவதேயாகும். வெளிப் பொருள்களின் வேற்றுமைகளேயும் அவைகளி டையே காணப்படும் சிக்கல்களேயும் இணக்கப்படுத் துவதற்காக உள்ளத்திலே நிகழும் முயற்சியாகும். இம்முயற்சியில்ஒரு விஷயத்தை மெதுவாக அறிந்து கொள்கிறோம். ஏகமாய் நிற்கும் பொருளேக் கண்டு பிடிப்பதன் மூலம் எல்லாவற்றையும் அடைதல் கூடும் என்பதை உணருகிறோம். அதுதான் உண் மையில் நமது கடைசியான, மிக மேலான உரிமை என்பதையும் அறிகிறோம். அந்த ஒன்று, ஒரு மைப்பாட்டை அடிப்படையாகக் கொண்டது. அதை நாம் தெரிந்துகொண்டோமானல் அதுவே நமக்கு நிலேத்த பலமாகும். வேற்றுமைகளேத் தன்னகத்தே கொண்ட ஒற்றுமையே அதனுண்மை. நிகழ்ச்சி கள் அநேகம். ஆனல் உண்மை ஒன்று. மிருக அறிவு நிகழ்ச்சிகளே மட்டும் அறியும். மனிதமனம் உண்மையை அறியும் சக்தியைப் பெற்றிருக்கிறது. ஆப்பிள். பழம் மரத்திலிருந்து விழுகிறது. மழை பூமிக்கு இறங்குகிறது. நம்முடைய மனத்தில் இத் தகைய நிகழ்ச்சிகளே அடுக்கிக்கொண்டே போக லாம். நிகழ்ச்சிகளுக்கு முடிவேயில்லே. ஈர்ப்புச் சக்தி என்ற விதியைப் பெற்றவுடன் கணக்கு வழக் கில்லாமல் நிகழ்ச்சிகளேச் சேகரிக்கவேண்டிய அவசி யத்தைக் கைவிடலாம். எண்ணற்ற நிகழ்ச்சிகளே ஆளுகின்ற ஒருண்மையை நாம் கைப்பற்றவேண்டி யிருக்கிறது. இந்த உண்மையைக் கண்டுபிடித்துவிட்

டால் அதுமனிதனுக்குத்தூய ஆனந்தத்தைத்தரும். அதுவே மனத்துக்கு விடுதலையளிக்கும். வெறும் நிகழ்ச்சி மட்டும், ஒரு பக்கம் அடைபட்ட சந்து போன்றது. அதன் வழியே போனால் அத்தோடு சரி, அப்பால் செல்ல முடியாது. ஆனால் உண்மையோ ஒரு புதிய உலகின் அடிவானத்தையே கண்முன் கொண்டுவந்து நிறுத்தி எல்லையற்ற பரம்பொருளிடம் நம்மைக் கொண்டு செல்கிறது. டார்வினைப் போன்றவர்கள் பிராணி வாழ்வைப் பற்றிய ஒரு சாதாரண உண்மையைக் கண்டுபிடித்து விட்டால் அந்த உண்மை அதனோடு நின்றுவிடவில்லை. ஏதோ ஒரு பொருளைக் காண்பதற்காக கொண்டுவந்த விளக்கு அப்பொருளின் மீது மட்டுமல்லாமல் அதற்கப்பாலும் ஒளி வீசுவதைப்போல, அந்த உண்மை தன்னுடைய முதல் நோக்கத்தைத் தெளிவுபடுத்துவதோடு, மனித வாழ்வையும் கருத்தையும் முழுதுமே ஒளி பெறச் செய்கிறது. ஒரு உண்மை, நிகழ்ச்சிகளை விளக்கிக் காட்டுகிறது. ஆனால் அதே சமயத்தில் அது வெறும் நிகழ்ச்சிகளின் தொகுப்பாக இல்லை. அவைகளை எவ்வளவோ தூரம் மிஞ்சிச் சென்று முடிவில் எல்லையற்ற உண்மையையும் சுட்டிக்காட்டுகிறது.

அறிவுத் துறையிலுள்ளதுபோல உணர்வுத் துறையிலும் எந்த நடுநாயகமான உண்மையை உணர்ந்தால் பரந்த அளவில் தெளிவான காட்சி கிட்டுமோ அந்த உண்மையை மனிதன் தெளிவாக அறிந்து கொள்ளவேண்டும். இது கருதியே 'உனது ஆத்மாவை உணர்ந்துகொள்' என்று உபநிஷதம் கூறுகிறது. அதாவது ஒவ்வொரு மனிதனிடமும்

உள்ள அந்தப் பெரிய ஒற்றுமைத் தத்துவத்தை உணர்ந்துகொள்ள வேண்டும் என்று கூறுகிறது.

நமது ஆணவத் தூண்டுதல்களும் சுயநல ஆசைகளும் நமது ஆன்மாவின் உண்மையான காட்சியை மறைக்கின்றன. இவைகள் உடலைப் பிரதானமாகக் கொண்ட குறுகிய ஆணவத்தையே காட்டுகின்றன. எப்பொழுது நமது ஆன்ம அறிவு தலையெடுக்கிறதோ அப்போது நமது ஆணவத்தைத் தாண்டி அப்பாலுள்ள எல்லாவற்றுடனும் ஆழ்ந்த உறவு கொண்ட நமது அந்தரங்க ஜீவனைக் காண்கிறோம்.

அ, ஆ, என்ற எழுத்துக்களைக் குழந்தைகள் கற்கத் தொடங்கும்போது அதில் இன்பத்தைக் காண்பதில்லை. ஏனென்றால் எழுத்துப் படிப்பின் உண்மை நோக்கம் அவர்களுக்குத் தெரியாது. உண்மையாக, எழுத்துக்கள் மட்டும் தனிப்பொருள்களாக நமது கவனத்தை இழுக்கும்போது அவைகள் நமக்குச் சலிப்பைக் கொடுக்கின்றன. அவ்வெழுத்துக்கள் சொற்களாகவும் பின்னர் வாக்கியங்களாகவும் சேர்ந்து பொருள் தரும்போது அவை ஆனந்தமளிக்கின்றன.

அதுபோல நமது ஆன்மாவையும், தனியாகப் பிரித்து உடலைச் சூழ்ந்து நிற்கும் உணர்ச்சியாக மாற்றிச் சிறைப்படுத்தும்போது, அது தனது அர்த்தத்தை இழந்துவிடுகிறது. ஏனெனில் அதன் உயிரே ஒற்றுமையிலிருக்கிறது. மற்றவைகளோடு ஒன்றுபடும்போது அது தன்னுடைய உண்மையை உணரும். அப்பொழுதுதான் அது ஆனந்தம்

அடையும். இயற்கையிலுள்ள இந்த ஒற்றுமை விதியை அறியாதவரையிலும் மனிதன் சங்கடப்பட்டான். அச்சங்கொண்ட நிலைமையிலே வாழ்ந்தான். அதுவரையும் உலகம் அவனுக்கு அன்னியமாக இருந்தது. இந்த விதிஎன்பது யாது?மனிதனுடைய ஆன்மாவாக இருக்கின்ற பகுத்தறிவுக்கும் உலகக் காரியங்களுக்கும் இடையே நிலவும் ஒற்றுமையை உணருவதே அவ்விதி. இதுவே மனிதனையும் அவன் வாழும் உலகத்தையும் உறவுபடுத்தும் பாசம். இதை உணரும்போது தன்னைச் சூழ்ந்திருக்கும் பொருள்களோடு தானும் ஒன்று சேர்ந்தவன் என்பதை அறிய அவனுக்கு அளவுகடந்த மகிழ்ச்சி உண்டாகிறது. எதாவதொன்றை அறிவதென்ருல் என்ன? அதனுள் நமக்குச் சொந்தமாக இருக்கும் ஒன்றைக் காண்பதுதான். நமக்கு வெளியிலும் நம்மைக் காணும்பொழுது அக்காரியம் நம்மை மகிழ்விக்கிறது. இவ்வாறு அறிவுத் துணை கொண்டு உறவு கொள்ளுதல்கூட அரைகுறை உறவே. ஆனுல் அன்பு மூலம் உறவு கொள்ளுவதோ முழு உறவை ஏற்படுத்துவதாகும். அன்பில் வேற்றுமை மனேபாவம் அடிபட்டுப்போகிறது. அப்போது மனித ஆன்மா தனது குறுகிய வரம்புகளை மீறி எல்லையற்ற தன்மையில் காலடி வைத்து பரிபூரணமாகித் தனது இலட்சியத்தை நிறைவேற்றுகிறது. ஆகையினுல் அன்பே மனிதன் எய்தக்கூடிய பேரானந்தம். சாதாரணமாகத் தென்படுவதைக் காட்டிலும், தான் எவ்வளவோ உயர்ந்தவன் என்பதை அன்பு செலுத்துவதின் மூலமாக மனிதன் அறிந்துகொள்ளுகிருன். எல்லாமாகி

இருக்கும் பொருளோடு தானும் ஒன்று என்பதைக் காண்கிறன்.

ஒன்றே பலவும் என்ற உண்மையை மனிதன் தன் ஆன்மாவில் பெற்றிருக்கிறன். அவ்வுண்மை சதா தன்னை நிலைநாட்டி, இலக்கியம், கலை, விஞ்ஞானம், சமூகம், அரசு நிர்வாகம், மதம் ஆகியவைகளின் மூலமாகத் தன்னைப் பரப்பி, எங்கும் உறவை ஏற்படுத்திக்கொண்டே யிருக்கிறது. மனித சமுதாயத்தின் மீது அன்பு பூண்ட காரணத்தினுல், உடலே 'நான்' என்ற குறுகிய உணர்ச்சியைக் கைவிட்டு ஆன்மாவின் உண்மையான தன்மையை உலகுக்கு எடுத்துக் காட்டியவர்களே நமது பெரிய தீர்க்கதரிசிகள். தங்களுடைய அன்புப் பணியிலீடுபட்டிருக்கும்போது இகழ்ச்சி, இடர், பறிமுதல், மரணம், ஆகியவைகளை அவர்கள் அடைகிறர்கள். அன்னர் ஆன்ம வாழ்வு வாழ்கிறர்களே யொழிய கேவலம் உடலையே பிரதானமாகக்கொண்ட வாழ்வை வாழவில்லை. இவ்வாறு அவர்கள் நமக்கு மனித ஜாதியின் இறுதியான உண்மையை எடுத்துக் காட்டுகிறர்கள். இத்தகையோரையே நாம் மகாத்மாக்கள், அதாவது பேரான்ம மனிதர்கள் என்கிறேம்.

உன் மகனிடம் உனக்குப் பிரியமிருப்பதால் நீ அவனிடம் அன்பு கொள்ளவில்லை. உன்னுடைய ஆன்மா மீது 'உனக்குப் பிரியமிருப்பதால் நீ உன் மகனிடம் அன்பு கொள்கிறய் என்று ஒரு உபநிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது. நாம் யாரையேனும் நேசிக்கிறேமென்றல்

நம்முடைய ஆழ்ந்த ஆன்ம அறிவின் துணை கொண்டு அம்மனிதனில் நம்முடைய ஆன்மாவையே காண்கிறோம் என்பதுதான் அவ்வாக்கியத்தின் பொருள். நம்முடைய வாழ்வைப்பற்றிய முடிவான உண்மை இதில்தானடங்கி யிருக்கிறது. பரமாத்மா அதாவது மேலான ஆத்மா என்னிலும் இருக்கிறது. என் மகனிலும் இருக்கிறது. இந்த உண்மையை அறிவதுதான் என் மகனிடத்தில் எனக்கு ஆனந்தத்தைக் கொடுக்கிறது. நமக்குப் பிரியமானவர்களுடைய இன்ப துன்பங்கள் நம்முடைய இன்ப துன்பங்களாக இருக்கின்றன. இல்லை, அதிகமாகவே யிருக்கின்றன என்பது சர்வசாதாரணமான விஷயம். சிறிது யோசித்தால் இது எவ்வளவு ஆச்சரியமாக இருக்கிறது. இது ஏன் இப்படி இருக்கவேண்டும்? நாம் அவர்களில் அவர்களாகவே பெரிதும் வளர்ச்சி பெற்றுவிடுகிறோம். பிரபஞ்ச முழுமையும் தன்னுளடக்கிய பேருண்மையை அவர்களுக்குள்ளே நாம் கண்டுகொண்டோம். அதுதான் காரணம்.

நமது குழந்தைகள், நமது நண்பர்கள் இன்னும் மற்றப் பிரியமானவர்களிடம் நாம் கொண்டுள்ள அன்பானது நம்முடைய ஆன்மாவை மேலும் நாம் அறியவிடாதபடி அடிக்கடி தடுத்துவிடுகிறது. அன்பு நமது உணர்வின் எல்லையை விரிவாக்குகிறது. இதற்குச் சந்தேகமில்லை. எனினும் நமது உணர்வு மிகுந்த சுதந்தரத்தோடு விரிவடையாதபடி இவ்வன்பு வரம்பு கட்டிவிடுகிறது. இருந்தாலும் அது முன்னேற்றத்தின் முதற்படி. எல்லா அற்புதமும் இந்த முதற்படியி

லேயே இருக்கிறது. ஆன்மாவின் உண்மையான தன்மையை இது காட்டுகிறது. யானெனதென்னும் உணர்வை இழப்பதிலும் பிறரோடு ஒன்றுபடுவதிலுமே உயர்ந்த இன்பம் இருக்கிறதென்பதை, நாம் இதிலிருந்து நிச்சயமாகத் தெரிந்துகொள்கிறோம். நம்முடைய அன்பை எந்த அளவுக்கு விரிவடையச் செய்கிறோமோ அவ்வளவுக்கு இவ்வன்பு நம் மனத்திற்குப் புதிய சக்தியையும் கூர்மையான நோக்கையும் அழகையும் கொடுக்கிறது. ஆனால் அந்த வட்டத்திற்கு அப்பால் தனது விரிவடையும் சுபாவத்தை யிழந்து அன்புக் குணத்திற்கே பகையாகவும் மாறிவிடுகிறது. அப்போது நமது நட்பு சிலரை ஒதுக்குகிறது. நமது குடும்பத்தினர் சுயநலமிகளாகவும் விருந்தோம்பும் பண்பில்லாதவர்களாகவும் மாறிவிடுகிறார்கள். நமது தேசங்கள் கிணற்றுத் தவளைகளாகவும், பிறநாடுகளின் மீது கொடும்பகைமை பாராட்டுபவைகளாகவும் மாறுகின்றன. இச்செய்கை, எரிகின்ற விளக்கினுள் காற்றுப் புகாதபடி மூடிவைப்பது போலாகும். விளக்கு சிறிது நேரம் பிரகாசமாக எரியும். பின்பு விஷப்புகைகள் திரண்டு கூடி ஒளியை அணைத்துவிடும். இருந்தாலும் அது இறப்பதற்கு முன்னால் தனது உண்மையான தன்மையை மெய்ப்பித்துவிடுகிறது. கண்ணவிந்த, வெறுமையான, குளிர்ந்துபோன இருளின் பிடிப்பிலிருந்து பெற்ற விடுதலை மகிழ்ச்சியைச் சிறிது அனுபவித்துவிடுகிறது.

உபநிஷதங்களின் சொற்படி எங்கும் பரவியுள்ள உணர்வை – அதாவது கடவுளுணர்வை

அடையும் வழி ஆன்ம அறிவில் இருக்கின்றது. நான், எனது, என்னும் பற்றுக்கப்பாலுள்ள நமது ஆன்மாவை அறிவதுவே மேலான விடுதலையைப் பெறும் முதற்படி. முக்கியமாக நாம் ஆன்மா என்பதை வெகுஉறுதியாக அறிந்துகொள்ளவேண்டும். எவ்வாறு அறிந்துகொள்வது? நானெனதென்ற உணர்வை வெல்லுவதன் மூலமும் செருக்கு, பேராசை, அச்சம் ஆகியவைகளை மீறுவதன் மூலமும் சொத்துக்களை இழந்தாலும், சாவு நேரிட்டாலும், அவை ஆன்மாவின் உண்மையையும் பெருமையையும் குலைத்துவிடுவதில்லை என்பதை அறிவதன் மூலமும் ஆன்மாவில் நாம் நிலைத்து நிற்க முடியும். தன் நன்மையொன்றைக் கருதியே, முட்டையானது, எதனோடும் ஒட்டாத—ஒதுங்கி நிற்கும் வாழ்வுடையதாக இருக்கிறது. முட்டையை உடைத்துக்கொண்டு குஞ்சு வெளிவரும் போது இதுவரை தன்னை மூடியிருந்த முட்டை ஓடு உண்மையில் தன் வாழ்வைச்சேர்ந்த ஒரு பகுதி யாகாது என்பதை நன்கறியும். முட்டை ஒரு உயிரற்ற பொருள். அதற்கு வளர்ச்சி கிடையாது. தனக்கப்பாலுள்ள அகண்டத்தைப் பற்றியும் அது தெரிவிக்காது. எவ்வளவுதான் பார்ப்பதற்கு ஆனந்த பூரணமாய், உருண்டையாய் இருந்தாலும் கூட அதையும் உடைத்தெறிய வேண்டும். அதைப் பிளந்தெறிந்தால் தான் அதன் மூலம் ஒளியையும் காற்றையும் அனுபவிக்கும் சுதந்தரம் குஞ்சுக்கு கிடைக்கும். பறந்து செல்லும் வாழ்க்கை பூரணமாகப் பறவைக்குக்கிட்டும். சமஸ்கிருதத்தில் பறவையை இருபிறவி என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதைப்போலவே குறைந்தது பன்னிரண்

டாண்டுகளாக, தன்னடக்கம், மேலான சிந்தனை ஆகிய பயிற்சிகளில் ஈடுபட்டவனையும், அப்பயிற்சி அனுபவத்தால் எளிமையுள்ளோனாகி, தூய உள்ளம் பெற்றோனாகி, வாழ்க்கைப் பொறுப்புகளைப் பற்றற்ற பெருந் தன்மையோடு மேற்கொள்ளும் தகுதிபெற்றோனையும் இரு பிறவியாளன் என்று கூறப்படுகிறது. தன்னை மூடியிருந்த பற்றாகிய இருட்போர்வையை விலக்கி மறு பிறவி எய்தி ஆன்ம வாழ்வாகிய சுதந்தரம் பெற்றவனென்று அவன் கருதப்படுகிறான். தன்னைச் சூழ்ந்துள்ள யாவற்றுடனும் உயிர்த்தொடர்பு கொண்டவனாகவும் யாதுமாகி நின்ற பொருளோடு ஒன்றானவனாகவும் அவன் கருதப்படுகிறான்.

மக்களுக்கு மெய்ந்நெறி காட்டிய இந்திய முனிவர்கள், முழுதும் பாழாகி முடிவிலொரு சூனியமாய்ப்போகும் துறவுமார்க்கத்தையும், உலகத்தையும், தன்னையும் துறக்கும் வழியையும் போதித்தார்கள் என்ற தவறான கருத்தில் இறங்கவேண்டாமென்று எனது வாசகர்களை எச்சரித்திருக்கிறேன். மீண்டு மொருமுறை எச்சரிக்கிறேன். ஆன்ம ஞானம் பெறுவதை அவர்கள் வாழ்க்கை லட்சியமாகக்கொண்டிருந்தார்கள். அதை வேறு வார்த்தைகளில் கூறப்புகுந்தால் உலகத்தை அதன் பூரணமான உண்மை உருவத்தில் காண்பதுவே அவர்களது இலட்சியம். 'தாழ்ந்து போகிறவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்களென்று இயேசுநாதர் கூறியதும் இதையே குறிக்கும். எப்பொழுது மனிதன் அகங்காரத்தை நீக்குகிறானோ அப்போது தன்னுடைய உண்மையான பிதுரார்ஜிதத்தை

அவன் அடைகிருன். உலகில் தன்னுடைய ஸ்தானத்தை அடைவதற்கு அவன் போராடத் தேவையில்லை. ஆன்மாவினுல் அளிக்கப்பட்ட உரிமை மூலம் அவனுடைய இடம் எங்கும் உறுதி யாக இருக்கிறது. உலகத்தோடும் உலகக்கடவு ளோடும் தன்னைப் பூரணமாக ஒன்றுபடுத்தி அதன் மூலம் தன்னை உணரும் வேலையை ஒழுங்காக நிறைவேற்ற விடாதபடி அகங்காரம் குறுக்கிடு கிறது.

சாதுசிம்மனுக்கு புத்தர் கூறிய அறிவுரை யாவது "சிம்மா, காரியங்களில் ஈடுபடுவதை நான் கண்டிக்கிறேன் என்பது உண்மை. ஆனுல் எக்காரியங்கள் சொற்களிலும், எண்ணங்களிலும் அல்லது செயல்களிலும் தீமைக்கு இட்டுச்செல் கின்றனவோ அவைகளையே கண்டிக்கிறேன். சிம்மா, அழிப்பதை நான் போதிக்கிறேன் என்பது உண்மை. ஆனுல், செருக்கு, காமம், கெட்ட எண் ணங்கள் அறிவின்மை ஆகியவைகளையே நான் அழிக்குமாறு சொல்லுகிறேன். மன்னித்தல், அன் புடைமை, ஈகை உண்மை ஆகியவைகளை நான் அழிக்குமாறு சொல்லவில்லை"

'அவித்தை'யிலிருந்து விடுபடுவதே முத்திநெறி என்பது புத்தர் பரப்பிய போதனை. அவித்தை யென்பது நமது உணர்வைக் கவிழ்ந்துகொண்டு இருளை உண்டாக்கும் அறியாமை. இது உடலாசை களைத் தாண்டிச் செல்லாதபடி நமது உணர்வைத் தடுத்துவைக்க முயல்கிறது. நமது உணர்வுக்கு வரம்புகட்டும் அறியாமையே ஆணவத் தடிப்பை உண்டாக்கி, செருக்கு, பேராசை, சுயநலத்தால்

உதிக்கும் கொடுமை ஆகியவைகளுக்குப் பிறப்பிட மாகிறது. தூங்கும்போது மனிதன் சுவாசித்தல் போன்ற உடலை யொட்டிய காரியங்களில் மட்டும் உயிருள்ளவனுக அடைபட்டுக்கிடக்கிருன். அவன் உயிரோடு தான் இருக்கிருன். எனினும் தன்னைச் சுற்றியுள்ளவைகளோடு தனக்குள்ள தொடர்பை அவன் அறியவில்லை. ஆகவே, அவன் தன்னை அறியாதிருக்கிருன். அதுபோல மனிதன் அவித்தையுடன் வாழும்போது அவன் உடற்பற்ருேடு அடைப்பட்டுக்கிடக்கிருன். அது அவனுடைய ஆன்மாவின் உறக்கமாகும். தன்னைச் சூழ்ந்துள்ள மேலான உண்மையை உணரத்தக்க நிலையில் அவனது உணர்வு விழிப்புறவில்லை. ஆகவே அவன் தனது ஆன்ம உண்மையையும் அறியாதிருக்கிருன். அவன் போதியை அடையும்போது, அதாவது உடற்பற்றென்னும் உறக்கத்திலிருந்து பூரண உணர்வை (ஞானத்தை) எய்தும்போது அவன் புத்தனுகிருன்.

ஒரு சமயம் ஏதோ ஒரு பிரிவைச் சேர்ந்த இரு துறவிகளை ஒரு வங்காளக் கிராமத்தில் சந்தித்தேன். "உங்களுடைய மதத்தின் விசேஷத் தன்மைகள் என்ன? எனக்குச் சொல்லமுடியுமா" என்று அவர்களைக் கேட்டேன். அவர்களிலொருவர் சிறிது தயங்கி 'அதை வரையறுத்துச் சொல்வது கஷ்டம்' என்ருர். மற்றவர் 'இல்லை அது மிக எளிது. முதன் முதலில் நமது குருவின் துணைகொண்டு நமது ஆன்மாவை அறியவேண்டும். ஆன்மாவை அறிந்த பிறகு நமக்குள்ளிருக்கும் பரமாத்மனை நாம் காண முடியும்!' என்ருர். 'உங்களுடைய கொள்கைகளை

நீங்கள் ஏன் உலகினருக்குப் போதிக்கக் கூடாது ?' என்றேன் "தாகமுள்ளவர்கள், தாங்களாகவே ஆற்றுக்கு வருவார்கள்" என்று அவர் கூறினர். 'சரி, அப்படியானல், யாரும் வருகிறதாகத் தெரிகிறதா? யாரேனும் வருகிருர்களா?' என்று வினவினேன். அம்மனிதர் மெல்லச் சிரித்தார். அச்சிரிப்பில் அமைதியின்மையோ, பரபரப்போ சிறிதும் காணப்படவில்லே. உறுதியே காணப்பட்டது. சிரித்துவிட்டு 'அவர்கள் எல்லோருமே ஒருநாள் ஆற்றுக்கு வந்தாகவேண்டும்' என்று கூறினர். ஆம், வங்காளக் கிராமத்தைச் சேர்ந்த இந்த எளிய துறவி சொன்னது சரி. மனிதனுடைய தேவை உணவையும் உடையையும் மீறியது. அதைத் தேடியே அவன் வெளியே சென்றிருக்கிருன். தன்னேத்தேடியே அவன் வெளியே போயிருக்கிருன். இறவாத தன்னே – தனது ஆன்மாவை உணருவதற்காக திக்குத் தெரியாத இடத்திற்கு அவன் பயணம் செய்யும் சரித்திரமே மனித சரித்திரமாகும். மனிதன் பேரரசுகளே எழுப்பி அவைகளே அழித்திருக்கிருன். செல்வத்தைக் குன்றுகளேப் போலக் குவித்துப் பின்னர் அவைகளேப் பொருட்படுத்தாமல் சூறையாடிப் புழுதியில் எறிந்திருக்கிருன். தனது கனவுகளேயும் ஆசைகளேயும் பிரமாண்டமாக நனவாக்கி, சிறு குழந்தைகள் வயது வந்தபின் தமது பொம்மைகளே வீசியெறிவது போல அவற்றை வீசியெறிந்திருக்கிருன் ; சிருஷ்டியாகிய இரகசியப் பெட்டகத்திற்கு மந்திரத் திறவுகோல்களே வார்த்திருக்கிருன் ; யுகம் யுகமாகத்தான் தொடர்ந்து பாடுபட்ட காரியங்களே உதறிவிட்டுப் புதுவடிவங்களே வடித்திருக்கிருன் ; இத்தனே

காரியங்களின் மூலமாகவும் மனிதன் அடையக் கருதிய குறிக்கோள் என்ன? தான் திரட்டும் பொருள்களுக்கு எல்லாம் மேலானதும், தான் செய்யும் செயல்களுக்கு எல்லாம் மேலானதும் தான் உருப்படுத்தும் சித்தாந்தங்கள் எல்லாவற்றிற்கும் மேலானதுமான தனது ஆன்மாவை, சாவும் சிதைவும் தடங்கல் செய்யமுடியாத ஆன்மாவை உணருவதற்காகவே மனிதன் பாடுபட்டு வந்திருக்கிருன். அதை நோக்கியே அவன் நடந்து கொண்டிருக்கிருன்.

மனிதனுடைய தவறுகளும் தோல்விகளும் அற்ப சொற்பமானவையல்ல. அவனுடைய தவறுகளாலும் தோல்விகளாலும் அடைந்த பெரும் அழிபாடுகளே அவன் சென்ற பாதையெல்லாம் பரக்கக் காணலாம். அவனடைந்த வேதனைகளோ ராட்சஸக் குழந்தையைப் பெறுவதற்குப்படும் பிரசவ வேதனையைப் போன்றவை. இவை யாவும் அவன் எல்லையற்ற நிறைவை எய்தப்போகிருன் என்பதைக் காட்டும் அறிகுறிகளாகும். மனிதன் எத்தனையோ வகைகளில் பலியாகியிருக்கிருன், பலியாகிக் கொண்டிருக்கிருன். அவனுடைய ஸ்தாபனங்களே அவனது பலிபீடங்கள். அப்பலி பீடத்திற்கு பிரமிக்கத்தக்க அளவில் அற்புதமான பொருள்களை நாள் தோறும் கொண்டு வந்து படைக்கிருன். மனிதனுக்குள்ளிருக்கும் ஆன்மா தன்னுடைய தெய்விக பலத்தை, துன்பங்களைச் சகிப்பதன் மூலமும், தனது வற்ருத நிதிகளைத் துறவுமூலமும் நிருபிக்கின்றது. ஆழ்ந்து நிற்கும் ஆன்ம இன்பத்தை நெடுகலும் மனிதன் உணராவிட்டால்,

இவ்வளவு கஷ்டங்களேயும் சகிப்பதற்குக் காரண மில்லே. சகிக்கவும் முடியாது. ஆம் அந்தத் தீர்த்த யாத்திரிகர்கள் யாவரும் வந்துகொண்டிருக்கிருர்கள். இவ்வுலகில் அவர்களுக்குரிய உண்மையான பிது ரார்ஜிதத்தை நாடிவந்து கொண்டிருக்கிருர்கள். தங்களது உணர்வு வட்டத்தை விரிவாக்கிக் கொண்டே யிருக்கிருர்கள். மேலும் மேலும் உன்னதமான ஒற்றுமையைத் தேடிக்கொண்டே யிருக்கிருர்கள். எல்லாவற்றையும் தன்னகத்தே கொண்ட நடுவான மெய்ப்பொருளே நெருங்கி வந்துகொண்டே யிருக்கிருர்கள்.

மனிதன் உண்மையாகத் தனது ஆன்மாவை உணரும் பரியந்தம் அவனது வறுமை பாதா ளத்தை எட்டி நிற்கும். தேவைகள் அனந்த மாகும். உலகம் சதா மாறிக்கொண்டே யிருக்கும். உண்மையுமாய் இன்மையுமாய்ப் பொய்த்தோற்ற மாக இருக்கும். தனது ஆன்மாவை உணர்ந்த மனிதன் இந்தப் பிரபஞ்சத்திற்கு நிச்சயமான நடு ஒன்று இருக்கிறதென்றும் அதைச்சுற்றி எல்லாப் பொருள்களும் தங்களுக்குரிய இடத்தைப் பெறு கின்றனவென்றும், அங்கிருந்துதான் மனிதனும் எல்லாவற்ருேடும் இணங்கிய வாழ்விஞல் அதையும் அடைந்து இன்பத்தைப் பெறமுடியும் என்பதையும் உணருகிருன்.

ஒரு காலத்தில் இம்மண்ணுலகம் உறுதியான உருவமில்லாதிருந்தது. வெங்கனலால் இதன் அணுக்கள் நாலாபக்கங்களிலும் சிதறிக்கிடந்தன. அப்பொழுது இதற்குக் குறிப்பிட்ட உருவமோ, அழகோ, நோக்கமோ கிடையாது. இதனிடம்

சூடும் வேகமும்தான் இருந்தன. நாளடைவில் ஒரு சக்தி, நாலாபக்கமும் சிதறிச்சென்ற பொருள் களை நடுமையத்தில் கட்டுப்படுத்தி ஒன்று கூட்டிற்று. பூமியின் ஆவிகள் இறுகி ஒன்றுசேர்ந்து உருண்டையாகி ஒரே மண்ணுலகமாயின. அதன் பிறகு, இந்தப் பூமி, சூரியனைச் சுற்றிவரும் கிரகங்களின் வரிசையில், கண்டசரத்தின் மத்தியிலமைந்த பச்சைக்கல்போல அமைந்திருக்கிறது. இது போலவேதான் நமது ஆன்மாவும். கண்ணற்ற காம இச்சைகளும், மனத்தின் பாய்ச்சல் களும் அதை நாலா மூலையாக இழுத்தடிக்கும்போது நம்மால் உண்மையாக எதையும் கொடுக்கவோ அடையவோ முடியாது. ஆனால் தன்னடக்கத்தின் வலிமையால் ஆன்மாவில் நமது இருப்பை நாம் காணும்போது, போராடிக் கொண்டிருக்கும் எல்லா இயல்புகளையும் இணங்கவைத்து, எட்டி நிற்பவைகளை ஒட்டிவைக்கும் சக்தியால் நாம் ஆன்மாவைக் காணும்பொழுது, நமது நெஞ்சில் குழம்பிக்கிடந்த மனப்பதிவுகள் அறிவாக மாறுகின்றன, இதயத் துடிப்புகள் அன்பில் பூரணம் பெறுகின்றன. நமது வாழ்வில் நிகழ்ந்த அற்ப விஷயங்களனைத்தும் எல்லையற்ற நோக்கத்தை வெளிப்படுத்துகின்றன. நமது எண்ணங்களும் செயல்களும் அந்தரங்கத்தில் இணைந்து பிரியாது கூடுகின்றன.

'ஒன்றை, ஆன்மாவை, உணர்ந்துகொள். நித்தியனிடம் இட்டுச்செல்லும் பாலம் அதுதான்' என்று உபநிஷதங்கள் வலியுறுத்திக் கூறுகின்றன.

இதுதான் மனிதனுடைய இறுதியான நோக்கம். மனிதனிடமுள்ள "ஒன்றைக்" காண்பது,

அதுவே அவனுடைய உண்மை, அதுவே அவனுடைய ஆன்மா. ஞான வாழ்வின் வாசலை-விண்ணக வாசலைத் திறக்கும் திறவுகோல் அதுவே. மனிதனுடைய ஆசைகள் அனேகம். அவ்வாசைகள், பல்வேறு உலகப் பொருள்களை நாடிப் பைத்தியங்கொண்டு அலைகின்றன. அவ்வாசைகளின் வாழ்வும் முடிவும் அப்பொருள்களிலிருக்கின்றன. ஆனுல் மனிதனுக்குள்ளே இருக்கும் ஒன்ரே சதா ஒற்றுமையை நாடிக்கொண்டே யிருக்கிறது. அறிவிலொற்றுமை, அன்பிலொற்றுமை, மன நோக்கங்களிலொற்றுமை. தன்னுடைய நித்திய ஒற்றுமைக்குள் எல்லையற்ற ஏகப்பொருளைக் காணும்போது அது மேலான இன்பத்தை எய்துகிறது. இது கருதியே உபநிஷதமும் உருவங்கள் பலவேறு வகைப்பட்டிருப்பினும் அவைகளிலுள்ள சத்து ஒன்ருக இருப்பதைக் காட்டுகிற இறைவனைத் தமது ஆன்மாவில் உணரப்பெற்றதனுல் அமைதி வாய்ந்த மனமுடையவர்களே நிலையான ஆனந்தத்தை அடைய முடியும். வேறு யாராலும் முடியாது என்று கூறுகிறது.

உலகிலுள்ள எல்லா வேற்றுமைகளினூடும் நம்மிடமுள்ள ஒன்று, எல்லாவற்றிலும் உள்ள ஒன்றை நோக்கிச் சிரமப்பட்டுச் சென்றுகொண்டிருந்தது. இதுவே அதன் இயற்கை, அதன் இன்பம். தான் தேடுகின்ற பொருளைப் பளிச்சென்று காட்டக்கூடிய விளக்கொன்று தன்னகத்தே இல்லாவிட்டால் இந்தச் சுற்றுப்பாதைவழிப் போவதால் மட்டும் தனது இலட்சியத்தை அது அடைந்துவிடாது. ஆன்மாவிலே பரமாத்மனைக் காணுவ

தென்பது உடனடியாக நேருக்கு நேர் காணக் கூடிய காட்சி அனுபவமாகும். தர்க்க வாதத் தையோ, கண்ணுக்கு முன்னே கொண்டுவந்து நிறுத்துவதையோ ஆதாரமாகக் கொண்டதல்ல. நம்முடைய கண்கள் ஒரு பொருளை அதன் முழு வடிவத்திலே காண்பது இயற்கை. அப்பொருளைப் பாகங்களாகப் பிரித்துப் பார்ப்பது கிடையாது. எல்லாப் பாகங்களையும் ஒன்று சேர்த்துக்கொண்டு வந்து நம்மோடு ஐக்கியப்படுத்திப் பார்க்கின்றன. அதுபோலவே ஆன்மாவை அறியும் அகக்காட்சி யும் பரம்பொருளான ஒன்ருேடு தனக்குள்ள ஒருமைப்பாட்டை இயல்பாகவும் முழுமையாகவும் அறிகிறது.

பிரபஞ்சக் காரியங்களின் மூலம் தன்னை வெளிப் படுத்திக்கொண்டிருக்கும் தெய்வம், மனிதர்களு டைய உள்ளத்தில் எப்போதும் பரமாத்மாவாக வாழ்கின்ருன். அகக் கண்ணுல் உடனே அவனை உணருகின்றவர்கள் இறவாமையை எய்துகிருர்க ளென்று ' உபநிஷதம்' கூறுகின்றது.

அவனே விஸ்வகர்மா; அதாவது அவனது வெளித் தோற்றம் பிரகிருதியில் பலவேறு வகை உருவங்களாகவும் சக்திகளாகவும் அமைந்திருக் கிறது. நமது ஆன்மாவில் அவனுடைய அகத் தோற்றம் ஐக்கியத்தில் அமைந்திருக்கிறது. பகுதி பகுதியாகப் பிரிக்கின்ற விஞ்ஞான முறையினுல் பிரகிருதி சம்பந்தமான உண்மையைக் காண்கிருேம். ஆன்மாவிலிருக்கின்ற உண்மையை உடனேயே நேரடியான அகக் காட்சி மூலம் காண்கிருேம். உல கப் பொருள்களைப்பற்றிய உண்மைகளைக் கொஞ்சம்

கொஞ்சமாக எண்ணிறந்த காலமாகச் சேகரித்து அறிகிறோமே, அதுபோல பரமாத்மனை அடைய முடியாது. ஏனெனில் பரமாத்மன் ஒருவன்; பிரிவுகளாக உள்ளவனல்லன். அவனை நமது உள்ளத்தினுள்ளமாகவும், ஆன்மாவின் ஆன்மாவாகவும் அறியலாம். ஆணவத்தை நீக்கி அவன் முன் நேருக்குநேர் நிற்கும்பொழுதுதான் அவனை அன்பினாலும் ஆனந்தத்தினாலும் உணரலாம்.

மனித உள்ளம் இறைவனிடம் குறையிரந்து கேட்கும் வேண்டுதல்கள் யாவற்றினும், உள்ளத்தினடியிலிருந்து தோன்றிய உருக்கமான வேண்டுகோள் எங்களது முதுமொழியில் சொல்லப்பட்டிருக்கிறது.

> 'தானாக வந்து தரிசனம் தருபவனே
> நீயே வந்தென்னுள் தோன்று'.

ஆணவத்தின் படைப்பாக இருப்பதால், நாம் துயருறுகிறோம். பிடிவாதமான ஆணவம் ஒளியைப் பிரதிபலிக்காது; எல்லையற்ற பரம்பொருளை அறியவியலாது. 'வேண்டும்' என்றும் 'வேண்டாம்' என்றும் சதா இரைச்சலிட்டுக்கொண்டேயிருக்கிறது. நித்திய கானத்தை எழுப்புதற்கேற்றவாறு அது இசை கூட்டப்படவில்லை. அதிருப்தியால் பெருமூச்செறிதலும் தோல்வியால் தளர்தலும், சென்றதுபற்றி வீணாக வருந்துதலும், நாளைச் சேர்வதுபற்றிக் கவலைப்படுதலும் ஆகிய காரியங்கள் நமது ஆழமற்ற மனத்தை அலட்டுகின்றன. ஏன்? நாம் நமது ஆன்மாவைக் காணவில்லை. தானே வந்து தலையளித்தாட்கொண்டருளும் இறைவன்

நம்முள் வெளிப்படவில்லை. ஆகவே "ஏ பயங்கரனே, உன்னுடைய அருள் கனிந்த நகைமுகங்காட்டி மேலும் மேலும் காத்தருள்' என்று கதறுகிறோம். இன்பத்தினவு, திருப்தியடையாத பேராசை, உடைமைச் செருக்கு, பிறரை இகழும் மனவேறுபாடு ஆகியவை யாவும் மூச்சுத்திணற மூட்டம் போட்டு நம்மைச் சாகடிக்கின்றன. "ஏ பயங்கரனே, இவ்விருள் மூட்டத்தை இரண்டாகக் கீறு. இத்துன்ப இருளைப்பிளந்து வந்து உன் அருளொளிக் கிரணங்கள் எனது ஆத்மாவை எழுப்புமாக"

'பொய்மையிலிருந்து மெய்மைக்கும், இருளிலிருந்து ஒளிக்கும், இறப்பிலிருந்து இறவாமைக்கும் என்னை அழைத்துச்செல்வாயாக'. இவ்வேண்டுகோள் தந்தருளப்படுமென்று நாம் எவ்வாறு எதிர்பார்க்கக்கூடும்? மெய்க்கும் பொய்க்கும், இறப்புக்கும் இறவாமைக்கும் இடையிலுள்ள தூரம் எல்லையற்றதாயிற்றே. இருப்பினும் தானே வந்து தரிசனம் காட்டும் இறைவன் ஆன்மாவில் தன்னை வெளிப்படுத்தும்போது அந்த அளவற்ற தூரம் அரை நொடியில் கடக்கப்பட்டு விடுகிறது. அங்கு அற்புதம் நிகழ்கிறது. எவ்வாறு? ஆங்கே வரம்புள்ளதும் வரம்பில்லாததும் சந்திக்கின்றன. 'எந்தையே' எனது எல்லாப் பாவங்களையும் அடியோடு துடைத்திடு' ஏன்? பாவம் புரியும்போது மனிதன் தன்னிடமுள்ள வரம்பிலிக்கு எதிராக வரம்புள்ளதனோடு சேர்ந்து கொள்கிறான். உடற்பற்று ஆன்ம அறிவைப் புறங்காட்டச் செய்து விடுகிறது. இந்த ஆபத்தான சூதாட்டத்தில் மனிதன் இம்மியளவு வெற்றி காணுவதற்காக,

தன்னிடமுள்ள அனைத்தையும் பணயம் வைக்கிருன். உண்மையைக் கலங்கலாக்கி நமது உணர்வின் தூயதன்மையைக் கவிழ்ந்து மூடுவதெதுவோ அதுவே பாவம். பாவ வசத்திலிருக்கும்போது இன்ப வேட்டையிலிறங்குகிறோம். இன்பங்கள் உண்மையில் விரும்பத்தக்கவை என்பதாலல்ல; ஆனால் ஆசையென்ற செக்கச்சிவப்பான ஒளி இன்பப்பொருள்களின் மீது படும்போது அவை விரும்பத்தக்க பொருள்களாகத் தோன்றுகின்றன. நாம் விரும்பும் பொருள்கள் உண்மையில் பெருமை வாய்ந்தன அல்ல. நமது பேராசை அவைகளை மிகைப்படுத்தி அவைகளுக்குப் பெருமைத் தோற்றமளிக்கின்றன. இவ்வாறு மிகைப்படுத்துதலும், பொய்த்தோற்றம் காட்டுவதுமாகிய காரியங்கள் நமது வாழ்வுப்பாதையில் ஒவ்வொரு அடியின் போதும் அமைதிக் குலைவை ஏற்படுத்துகிறது. பொருள்களை உண்மையாக மதிப்பிடும் திறமையை நாம் இழந்து விடுகிறோம். ஒன்றோடொன்று மோதி முண்டியடித்துக்கொண்டு நம்மைக் கவரும் வெளி மயக்குகளால் நாம் புலனழிகிறோம். தன்னுடைய இயல்புகளனைத்தையும் ஒன்று கூட்டிப் பரம்பொருளின் ஆணைவழி நில்லாததால் அவன் இறைவனைப் பிரிந்து ஏங்கிப் பரிதவிக்கிருன். 'ஆகவே எந்தாய், எமது பாவங்களனைத்தையும் துடைத்திடு. எது நல்லதோ அதை எங்களுக்கருள்'. அதாவது எமது ஆன்மாவுக்கு நன்மையானதை அருள்செய்; இன்பங்களை நாடும்போது உடற் சிறைக்குள் அடைபட்டு விடுகிறோம். பொது நன்மையை நாடும் போது விடுவிக்கப்பட்டு எல்லோருக்கும் உறவினர் ஆகிவிடுகிறோம் கருவிலிருக்கும்

குழந்தை தனது தாயின் பெரிய வாழ்வோடு தன் வாழ்வை ஒன்றுபடுத்துவதன் மூலம் தன் உணவைப் பெறுமாறுபோல, நமது ஆன்மாவும் பொது நலத்தால் செழிக்கிறது. உள்ளிருக்கும் பரமாத்மாவுடன் தனக்குள்ள உறவை உணருவதால் பொதுநல உணர்வு எழுகிறது. எந்த எல்லையற்ற பொருளால் ஆன்மா சூழப்பட்டு, ஊட்டப்பட்டு வருகிறதோ அந்தப்பரம்பொருளோடு உறவாடும் வழியே பொதுநல உணர்வாகும். ஆகையினால் தான் நீதியின் மீது பசி தாகமுள்ளவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். ஏனெனில் அவர்கள் நிறைவு பெறுவார்கள். நீதியே ஆன்மாவின் தெய்விக உணவு. இது வொழிந்த வேறெதுவும் மனிதனுக்கு நிறைவுதராது. வேறெதுவும் வரம்பற்ற வாழ்வை வாழும்படி செய்யாது. நித்தியத்தை எய்த உதவாது. "எங்கள் வாழ்வின் இன்பங்கள் உன்னிடமிருந்து வருகின்றன. உன்னை நாங்கள் வணங்குகிறோம். உன்னிடமிருந்து எங்களுக்கு ஆன்ம நன்மை கிடைக்கிறது. உன்னையும் நாங்கள் வணங்குகிறோம். நல்லவனே, மேலான நல்லவனே, உன்னை நாங்கள் வணங்குகிறோம். உன்னோடு நாங்கள் ஒவ்வொரு வகையிலும் அதாவது, அமைதி, இணக்கம், நன்மை, அன்பு ஆகியவற்றால் ஒன்றுக்கப்பட்டிருக்கிறோம்" என உபநிஷதங்கள் கூறுகின்றன.

மனிதன் கிடந்து அரற்றுவதெல்லாம் தனது பூரணத்தன்மையை வெளிப்படுத்துவதற்கே. தன்னை முழுதும் வெளிப்படுத்த வேண்டுமென்னும் ஆசையே அவனைப் பணத்தையும் அதிகாரத்தையும் தேடும்படி தூண்டுகிறது. பொருளைத்

திரட்டுகிற காரியமே தன்னை உணருங் காரியமன்று என்பதை அவன் தெரிந்துகொள்ள வேண்டும். உள்ளொளியே அவனை உணர்த்துகிறது, வெளிப் பொருள்களல்ல. மகோன்னத நிலையில் மனிதன் வெளிப்படுகிறானென்றால் அது கடவுள் தான் அவ்வாறு வெளிப்படுகிறாரென்பதை அவ்வொளி யேற்பட்ட அந்த நொடியிலேயே தெரிந்து கொள் கிறான். அவன் புலம்புவதெல்லாம் தனது ஆன்மா, அதாவது தனது ஆன்மாவிலுள்ள தெய்வம் வெளிப்படுவதற்கே. எல்லையற்ற இறைவன் ஆவி. தன்னை வெளிப்படுத்துவதே அவனது உயிர்த் தன்மை. அந்த எல்லையற்றவனில் மனிதனது ஆன்மா தன்னை உணரும்போது, மனிதன் தன் முழு வளர்ச்சியை அடைகிறான்; பூரணனாகிறான்.

மனிதன் முழுவதும் வெளிப்படவில்லை. தனது ஆசைகளுக்கிடையே தன்னை மூடிக்கொண்டிருக் கிறான். அதுதான் அவனுடைய உண்மையான சங்கடம். அவனைச் சூழ்ந்துள்ளவைகளுப் கப்பாலுள்ளவைகளை அவனால் உணரமுடியவில்லை. அவனுடைய பேரான்மா மறைக்கப்பட்டிருக்கிறது. அவனுடைய உண்மையான தன்மை உணரப்பட வில்லை. ஆகையால் அவனுடைய முழு உயிரிலிருந் தும் 'தோற்றத்தின் ஜீவனாக இருப்பவனே, என் னுள் தோன்று' என்ற வேண்டுகோள் உதிக்கிறது. தன்னை முழுதும் வெளிப்படுத்த வேண்டுமென்ற ஆசை மனிதனிடத்தில் ஆழமாக வேரூன்றி யிருக் கிறது. உடலை வாழ்விக்கவரும் பசி தாகங்களைக் காட்டிலும், பொருளாசை, புகழாசைகளைக், காட்டி லும் இவ்வாசை ஆழமானது. மனித உள்ளத்தில்

மாத்திரம் தோன்றிய ஆசையுமல்ல இது. எல்லாப் பொருள்களின் ஆழத்திலும் இந்த ஆசை இருக்கின்றது நித்தியமாய்த் தோன்றிக் கொண்டிருக்கும் ஆவியின் ஜீவனின் இடையருத் தூண்டுதலே இது. வரம்புள்ளதில் வரம்பற்றதை வெளிப்படுத்துவதே எல்லாப் படைப்பின் நோக்கமுமாகும். இவ்வரம்பிலியின் தோற்றம் முழுமையாகக்காணப்படுவது நட்சத்திரங்கள் நிறைந்த வானத்திலில்லை. மலர்களின் வனப்பிலில்லை. மனித ஆன்மாவில் தான் அது பூரணமாக விளங்குகிறது. ஏனெனில் இங்குதான் இச்சா சக்தி, இச்சா சக்தியாக வெளிப்பட முயல்கிறது. சுதந்திரமாகச் சரணடைந்து, தன் சுதந்திரத்தை இழந்து தனது இறுதியான வெகுமதியைப் பெறுகிறது.

இவ்வாருகப் பிரபஞ்சத்தை ஆளும் பேரரசன் மனித ஆன்மாவில் தனது சிம்மாசனத்தை வைக்கவில்லை. அதைச் சுதந்தரமாக விட்டு வைத்திருக்கிருன். மனிதன் தனது உடலமைப்பு மனவமைப்புக்களில் உலகப்பொருள்களோடு தொடர்பு கொண்டிருக்கிருன். அங்கே மனிதன் பிரபஞ்ச மன்னனது ஆட்சியை ஒப்புக்கொள்ளவேண்டியிருக்கிறது. ஆனுல் தனது உள்ளத்தில் அவனை மறுப்பதற்குச் சுதந்தரமுள்ளவனுக இருக்கிருன். அங்கு நமது இறைவன் வந்து 'கதவைத் திறவாய்' என்று கெஞ்ச வேண்டியிருக்கிறது. அங்கு அவன் அரசனுக வரமுடியாது. விருந்தாளியாக வருகிருன். ஆகவே அழைக்கப்படும் வரை காத்திருக்கிருன். மனிதனுடைய உள்ளத்தில் தான் கடவுள் தனது ஆணைகளைச் செலுத்தவில்லை. அங்கு நமது காதலை வேண்டி வருகிருன். அவனுடைய படைகள்

இயற்கையின் சட்டங்கள் எல்லாம் வாசலுக்கு வெளியே நிற்கின்றன. காதலின் தூதான அழகு தான் வீட்டிற்குள் நுழையலாம்.

இச்சையின் ஆட்சி நடைபெறுகின்ற இடத்தில் தான் அராஜகம் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. மனித உள்ளத்தில்தான் விபரீத மயமான பொய்யும் அநீதியும் ஆட்சி செலுத்துகின்றன. 'கடவுள் ஒருவர் இருந்தால் இப்படிப்பட்ட கொடிய அக்கிரமக் குழப்பம் நடக்குமா?' என்று மனம் நொந்து கூறும் படியாகவும் காரியங்கள் நிகழலாம். உண்மையில் கடவுள் நம்முள்ளத்தை விட்டு ஒதுங்கி நிற்கின்றார். மனித உள்ளத்தின் மீது அவர் காட்டும் கவனத்துக்கும் பொறுமைக்கும் எல்லையில்லை. அவருக்கெதிராகச் சாத்திய கதவுகளை உடைத்துக் கொண்டு அவர் நுழைவதில்லை. நம்முடைய ஜீவன் தனது இறுதித் தன்மையாகிய ஆன்மாவாக வேண்டியிருக்கிறது. கடவுளுடைய சக்தியால் கட்டாயப் படுத்தப்படாமல் அன்பின் மூலமாக சுதந்தரமாகக் கடவுளோடு கலக்கவேண்டும்.

எவனுடைய ஆன்மா கடவுளோடு ஒன்றுபட்டு விட்டதோ அவன் மனிதருக்குள்ளே ஒப்பற்ற மாணிக்கமாகத் திகழ்கிறான். அப்போது தான் மனிதன் தான் யார் என்பதை உண்மையாக உணர்கிறான். மனிதனுடைய ஆன்மாவில், ஆவியை, கடவுளின் மேலான பரிபூரணத் தோற்றத்தைக் காண்கிறான். நமது இச்சை கடவுளிச்சையோடு ஒன்று கூடியிருப்பதையும் நமது அன்பு நித்திய அன்போடு ஒன்றுகூடியிருப்பதையும் காண்கிறோம்.

கடவுளிடம் மெய்யன்பு செலுத்துபவர் மீது நமது நாட்டினர் காட்டும் மரியாதை அளவற்றது.

மேனுட்டார் கண்ணுக்கு 'இதென்ன அனுசாரம்' என்று தோன்றக்கூடிய அளவுக்குக்கூட நாம் அவர்களை வணங்குகிறோம். அவனிடத்தில் கடவுளுடைய விருப்பம் நிறைவேறி யிருப்பதையும் இறைவன் வெளிப்படாதவாறு குறுக்கிட்ட பெருந்தடைகள் அவன்பால் நீங்கி யிருப்பதையும் மனித சமுதாயத்தில் கடவுளுடைய பரிபூரணனந்தம் முழுவதும் பிரகாசிப்பதையும் காண்கிறோம். மனித உலகம் முழுவதும் அவனல்தெய்விக ஒளியோடு கூடியிருப்பதாகக் காண்கிறோம். கடவுளன்பால் சோதிமயமான அவனுடைய வாழ்வு நாம் பூவுலகத்தின்மீது கொண்டுள்ள அன்பையும் பிரகாசிக்கச் செய்கிறது. நமது வாழ்வில் நாம் கொண்ட நெருங்கிய தொடர்புகளும், அதனுடைய இன்ப துன்ப அனுபவங்களும், இந்தத் தெய்வக்காதலைச் சுற்றி நின்று அவனிடத்தில் நாம் காணும் நாடகமாகக் காட்சி தருகின்றன. அற்பப் பொருள்களையும், சாதாரணப் பொருள்களையும் எல்லையற்ற ரகசியம் தொட்டுவிடுகிறது. அதன்பின் அவை சொல்லுக்கடங்காத நாதமாக மாறிவிடுகின்றன. மரங்கள், நட்சத்திரங்கள், நீலக்குன்றுகள் இவைகள் யாவும் தம்மைப்பற்றிய உண்மையைச் சொல்லவியலாது துடித்துக்கொண்டிருப்பன போலத் தோன்றுகின்றன. மனிதனுடைய ஆன்மா தனது கனமான திரையை அகற்றும் பொழுது, ஆன்ம நங்கை தன்னுடைய முகமூடியை விலக்கிவிட்டுத் தனது நித்தியக் காதலனை நேருக்குநேர் காண்கிருள். அப்போது, உலகநாதனை, படைப்பாகிய தொழிலில் அவன் ஈடுபட்டிருக்கும் போதே நாம் காண்பதாகத் தோன்றுகிறது.

இந்நிலைமை எத்தகையது? வஸந்தகாலத்தின் காலைநேரம் போன்றது; வாழ்விலும் அழகிலும் பல வகைகளைக்கொண்டது. இருந்தாலும் ஒன்ருகவும் முழுமையாகவும் இருப்பது. எப்பொழுது மனித வாழ்வு வெளி மயக்குகளிலிருந்து விடுவிக்கப்பட்டு ஆன்மாவில் ஒற்றுமையைக் காண்கிறதோ, அப்பொழுது பரம்பொருளைப் பற்றிய உணர்வு, நெருப்புக்கு ஒளிபோல, இயல்பாகவும் நேரடியாகவும் அதற்கு ஏற்படுகிறது. வாழ்வின் போராட்டங்களும் மாறுபாடுகளும் ஒத்துப்போகின்றன. ஞானம், பக்தி, கருமம் இசைந்து கொள்கின்றன. இன்பமும், துன்பமும் ஒரேமாதிரி அழகைப் பெறுகின்றன. துய்ப்பதும் துறவும் சமநிலையில் நன்மையுள்ளனவாக இருக்கின்றன. வரம்புள்ளதற்கும் வரம்பற்றதற்கும் மத்தியிலுள்ள இடைவெளியில் அன்பு பொங்கிவழிகிறது. ஒவ்வொரு கணநேரமும் நித்தியப் பொருளைப்பற்றிய செய்தியைத் தாங்கி வருகின்றது. அருவமான பொருள் உருவமாகி, மலராக, கனியாகத் தோன்றுகிறது. கட்டற்ற பொருள் தந்தையாகி நம்மைத் தன் கைகளில் அணைத்துக் கொள்கிறது. தோழனுகி நமதருகில் நடந்து வருகிறது. மனிதனுள் இருக்கின்ற பொருளான ஆன்மாதான், தன்னுடைய இயல்பான தன்மையினுல் எல்லா வரம்புகளையும் மீறி பரம்பொருளோடு தன் உறவை அறிகிறது. இந்த உள்ளுறவை, நம் உயிரின் முழுமையை, நாம் காணுதவரை, நமது வாழ்வு வெறும் பழக்கங்களால் நிர்ணயிக்கப்பட்ட வாழ்வாகவே இருக்கும். அதுவரை உலகம் வெறும் இயந்திரமாக இருக்கும்.

# தீமை ஏன்?

வாழ்வில் ஏன் தீமை இருக்கிறது என்று கேட்பதும் ஒன்றுதான், ஏன் குறைபாடு இருக்கிறது என்று கேட்பதும் ஒன்றுதான். இன்னும் வேறு வார்த்தைகளில் கேட்கப் புகுந்தால், படைப்பே ஏன் இருக்கிறது என்று கேட்டுவிடலாம். உலகம் அப்படித்தானிருக்கும்; வேறு வகையாக இருக்க முடியாதென்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். படைப்பு குறைபாடு உள்ளதாகவும் படிப்படியாக முன்னேறுவதாகவும் இருக்கும். நாம் எதற்காக இருக்கிறோம் என்று கேட்பது வீணான காரியம்.

படைப்பில் காணப்படும் குறைபாடு முடிவான விஷயமா? தீமை முழுமையானதா? அது இறுதியானதா என்பனவே நாம் உண்மையாகக் கேட்க வேண்டிய கேள்விகளாக இருக்கவேண்டும். ஆற்றுக்கு வரம்புகளுண்டு. ஆனால் ஆறு முழுவதும் கரைகளாகவா இருக்கின்றது? அல்லது கரைகள் தான் ஆறுகளைப்பற்றிய முடிவான விஷயமா? இந்தத் தடைகளேயல்லவா ஆற்று நீருக்கு முன்னோக்கிப் பாயும் வேகத்தையளிக்கின்றன? சில படகுகளைக் கயிற்றால் கட்டி அக்கயிற்றைக் கரைவழியே யிழுத்துச் செல்கிறார்கள். அக்கயிறு படகைப் பிணிக்கிறது என்பது உண்மைதான். படகைப் பிணிப்பதென்பதோடு கயிற்றின் வேலை முடிந்து விட்டதா? அதைப் பிணிக்கும் கயிறே படகையும் முன்னோக்கியிழுத்துச் செல்கிறதல்லவா?

உலகமும் தனது போக்கினில் வரம்புகளேக் கொண்டிருக்கிறது. அவ்வாறு அது வரம்புகளேப் பெருதிருந்தால் அதற்கு வாழ்வே கிடையாது. ஆனுல் உலகத்தின் நோக்கத்தை, அதனேக் கட்டுப் படுத்துகின்ற வரம்புகளில் காண முடியாது. நிறைவை நோக்கி அது செல்கின்ற போக்கினில் தான் அதன் நோக்கத்தைக் காண இயலும். இந்த உலகினில் தடைகளும் துன்பங்களும் இருப்பது கண்டு நாம் ஆச்சரியப்படுவதற்கில்லே. இவ்வுல கில் ஒழுங்கு, அழகு, ஆனந்தம், நன்மை, அன்பு ஆகியவை இருப்பதைக் கண்டுதான் நாம் ஆச்சரி யப்படவேண்டும். கடவுள் என்ற கருத்து மனித னிடத்தில் குடிகொண்டிருப்பதுவே விந்தையிலும் விந்தை. சங்கீத ரசிகன் ஒருவன், அடுத்தடுத்து வெளிப்படுகிற பல ஸ்வரங்களேக் கேட்கும்போதே முழுப்பாட்டும் இன்னதென்று உணருவதைப் போல, குறைபாடு கொண்டதாகத் தோன்றுகிற பொருள் உண்மையில் குறைவிலா நிறைவான பொருள்தான் என்பதை மனிதன் எவ்வாறே தனது உயிரின் ஆழத்தில் உணர்ந்திருக்கிருன். எது வரம்புள்ளதோ அது தனது வரம்புக்குள் சிறைப்பட்டிருக்கவில்லே என்ற பெரிய அற்புத முரண்பாட்டை மனிதன் கண்டறிந்துவிட்டான். வரம்புள்ள அப்பொருள் முன்னேக்கிச் சென்று கொண்டேயிருக்கிறது. அவ்வாறு செல்லுகையில் தனது வரம்புகளே உதிர்த்துக்கொண்டே செல் கிறது. உண்மையாக குறைபாடு என்பது, பூர ணத் தன்மைக்கு மாருனதல்ல. வரம்புண்மை, வரம்பின்மைக்கு மாறுபட்டதல்ல. வரம்புள்ளவை யாவும் பூரணப் பொருளேயாகும். அவை வரம்

பற்றனவேயாம். பூரணப் பொருளே, அதன் முழு உருவத்தில் காண இயலாமல் அதைப் பாகங்கள் பாகங்களாகக் காண்கிறோம். வரம்பிலியை வரம்பிலியாகக் காணமாட்டாமல் வரம்புள்ளதாகக் காண்கிறோம்.

வேதனை, நாம் வரம்புள்ளவர்கள் என்பதை நமக்கு உணர்த்துகிறதெனினும், அது நமது வாழ்வில் நிலையான இடத்தைப் பெற்றிருக்கவில்லை. ஆனந்தத்தைப் போன்று அது இலட்சியப் பொருளில்லை. வேதனையடையும்போதே, நித்தியமான படைப்பில் அதற்கு நிரந்தரமான இடம் கிடையாது என்பதை அறிகிறோம். படிப்படியாக நமது அறிவு வளருகையில் நாம் இழைக்கும் தவறு போன்றது வேதனை. விஞ்ஞானம் வளர்ச்சிபெற்ற வரலாற்றை நாம் படித்தோமானால் வெவ்வேறு சமயங்களில் விஞ்ஞானம் பரப்பிய தவறுகளைக் காணலாம். அதைக்கொண்டு, உண்மையில் விஞ்ஞானம் என்பது தவறுகளைப் பரப்புவதற்கேற்ற செம்மையான முறை என்று அதை யாரும் கருதுவதில்லை. விஞ்ஞானம், மேலும் மேலும் முன்னேறி வளர்ந்து உண்மையை உறுதி செய்கிறது. விஞ்ஞானம் வளர்ந்த வரலாற்றைப் படிக்கும்போது அதைத்தான் நாம் நினைவுகொள்ள வேண்டுமேயல்லாது அது செய்த எண்ணற்ற தவறுகளையன்று. தவறு நிலைக்காது. நிலைத்திருப்பது அதன் இயற்கையல்ல. தவறு உண்மையோடு உறவு கொள்ளாது. வரி கொடுக்கமாட்டாது ஓடி ஒளியும் நாடோடியைப்போல தவறும் நிலைத்திருப்பதில்லை.

அறியாமையால் நிகழும் பிழை நிலைக்காதது போல எவ்விதத் தீமையும் நிலைக்காது. படைப் பாகிய மொத்த அமைப்போடு அது இணங்காது, பொருந்தாது. மொத்த அமைப்பு தீமையைத் திருத்திக்கொண்டு போகின்றது. ஆகவே தீமை தனது பாங்கை மாற்றிக்கொண்டே செல்கின்றது. அது நிலைத்திருப்பதாகக் கருதிக்கொண்டு அதைப் பெரிதுபடுத்துகிறோம். இந்த உலகில் ஒவ்வொரு நிமிஷமும் எவ்வளவு உயிர்கள் சாகின்றன, எவ் வளவு பொருள்கள் அழுகுகின்றன என்பதைக் கணக்கெடுத்துப் பார்த்தால் நாம் மலைத்துவிடு வோம். ஆனால் தீமை நின்று நிலைபெருது தள்ளி நகர்ந்துகொண்டே யிருக்கின்றது. எவ்வளவோ அதிகமாக இருந்தாலும் அது நமது வாழ்வின் ஓட்டத்திற்குத் தடங்கல் செய்யவில்லை. உலகில் தீமைகள் காணப்படினும் அவற்ருல் மண், நீர், காற்று ஆகியவை கெட்டுவிடவில்லை. மண், நீர், காற்று ஆகியவை உயிர்கட்கு வேண்டியவாறு இனிமையாகவும் தூய்மையாகவும் இருப்பதை நாம் காண்கிறோம். ஆகவே, புள்ளி விவரமெடுத்துக் கணக்குக்காட்டுகிற முயற்சியெல்லாம், நில்லாது செல்வனவற்றை நிலைத்து நிற்பனவாகக் காட்டு கிற முயற்சியேயாகும். இத்தகைய முயற்சியிலீடு பட்டுப் பார்க்கையில் சில விஷயங்கள் அளவுக்கு மிஞ்சிப் பெரிதாகத் தோன்றுகின்றன. இக் கார ணத்தால், வாழ்வில் ஏதாவது ஒரு துறையில் ஈடு பட்டவன் அத்துறையைப்பற்றிப் பிரமாதப்படுத்த முயலுவதைக் காண்கிறோம். செட்டாக அமைந் துள்ள சமுதாய அமைப்பினில் வெளிப்படைக் காட்சிகளுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் அளவுக்கு மிஞ்

சின முதன்மை கொடுப்பதன் மூலம், அம்மனிதன், அவைகளின் ஆதாரமான உண்மையைக் கைவிட்டு விடுகிருன். எடுத்துக்காட்டாக துப்பறிபவனுடைய வாழ்வை நோக்குவோம். தனது வாழ்நாள் முழுதும் குற்றவாளிகளுடைய கொலை பாதகச் செயல்களைப்பற்றிய ஆராய்ச்சியில் அவன் ஈடுபட்டிருக்கலாம். செட்டாக அமைந்துள்ள சமுதாய அமைப்பினில் அந்த ஆராய்ச்சிக்குரிய அளவென்ன என்பது அவனுக்குப் புலப்படவில்லை. மிருக உலகத்தில் வாழ்க்கைப் போராட்டம் எவ்வாறு நிகழ்கிறதென்பதை விஞ்ஞானப் போக்கில் ஆராய்வதற்கு உதாரணங்களைத் தொகுத்துப் பார்த்தால் "இரத்த வெறிபிடித்த நகமும் பற்களும் உள்ள'' இயற்கையே நம் கண் முன் காட்சியளிக்கும். இவ்விதமான மனச்சித்திரங்களில் நாம் வரைந்துகொள்ளும் உருவங்களும் வர்ணங்களும் நிலையற்றவை என்பதை மறந்துவிட்டு அவைகள் நிரந்தரமானவை என்று கருதுகிறோம். இவ்வாறு செய்வது, நமது உடல் பரப்பின் ஒவ்வொரு சதுர அங்குலத்திலும் விழும் காற்று நம்மை நொறுக்கி விடக்கூடிய அளவுக்குக் கனமாக இருக்கக்கூடும் என்பதைக் கணக்குப்போட்டு மெய்ப்பிக்க முயல்வது போன்றதாகும். ஒருபக்கம் சுமையிருக்குமானல் மறு பக்கம் அதை எளிதாக்குகிற மாற்று நிலையும் இருக்கிறது. ஆகையால் நாம் நமது சுமைகளை இலேசாகச் சுமக்க முடிகிறது. இயற்கையில் ஒரு பக்கம் வாழ்க்கைப் போராட்டம் என்பதிருக்குமானல் மறு பக்கம் பரஸ்பர உதவி என்பதும் இருக்கிறது. குழந்தைகளிடத்தும் தோழர்களிடத்தும் அன்பு செலுத்துதல் என்பதிருக்கிறது.

இந்த அன்புதான் வாழ்வில் ஆக்கமளிக்கும் சக்தி யாக விளங்குகிறது.

நமது கவனம் என்ற கூர்மையான ஒளியை, சாவு என்பதன் பக்கம் திருப்பினேமானால் அப் போது இவ்வுலகம் பெரிய சவக்குழியாகத் தோன் றும். ஆனால் வாழ்வின் நடுவில் சாக்காட்டைப் பற்றிய எண்ணம் சிறிதேனும் நமது மனத்தைப் பீடிப்பதாக இல்லை. அது என்ன அவ்வளவாகச் சிறிதும் தென்படாத விஷயமா? இல்லை. சாவு என்பது வாழ்வின் அழிவுத்தோற்றம். ஒவ்வொரு கணமும் கண்களை மூடுகிறோமென்றாலும், கண் களைத் திறக்கின்ற செயல்தான் முக்கியமானதே யொழிய கண்களை மூடுகின்ற காரியம் முக்கியமான தில்லை. வாழ்வை முழுதும் கவனித்தோமானால், அது, சாவை, அவ்வளவு பெரிதாக மதிப்பதில்லை. சாவின் முன்னிலையிலேயே வாழ்வு சிரிக்கிறது, நடனமாடுகிறது, விளையாடுகிறது, வீடுகட்டுகிறது, பணம் திரட்டுகிறது, காதல் புரிகிறது. வாழ்விலே எவ்வளவோ விஷயங்களிருக்கும்போது சாவை மாத் திரம் தனியாகப் பிரித்துக் கவனித்தால் அதன் வெறுமை நம்மை அச்சுறுத்துகிறது. சாவை மாத்திரம் கவனிக்கும்போது நாம் வாழ்வின் முழு மையைக் காணத் தவறிவிடுகிறோம். வாழ்வின் முழுமையில் சாவின் இடம் மிகச் சிறியதுதான். சாவை மாத்திரம் கவனிப்பது, ஒரு துணியை உருப் பெருக்கிக் கண்ணாடியின் அடியில் வைத்துப் பார்ப் பதுபோன்றதாகும். அப்போது, துணி. ஒரு வலை போலத் தோன்றும். அதிலுள்ள பெரிய துவாரங் களைக் கண்டு புத்தி மயங்கி நடுங்கி விடுகிறோம்.

சாவு என்பது இறுதியான உண்மையல்ல. வானம் நீல நிறமாகத் தோன்றுவதுபோல சாவும் கன்னங் கரேலென்று தோன்றுகிறது. ஆகாயத்தில் பறக் கும் பறவையின் இறக்கைகளை வானம் நீலநிற மாக்குவதில்லை. அதுபோல வாழ்வையும் சாவு கருமையாக்குவதில்லை.

குழந்தை நடக்கும்போது அதன் எண்ணற்ற தோல்விகளைப் பார்க்கிறோம். அதன் வெற்றி களோ மிக மிகக் குறைவு. ஏதோ ஒரு குறுகிய கால அளவுக்குள் நாம் கவனித்தால், அக்காட்சி பார்க்கச் சகிக்காது. திரும்பத் திரும்பத் தோல்வி களை அடைந்தாலும் குழந்தையினிடத்தில் மகிழ்ச் சியின் வேகத்தைக் காண்கிறோம். செய்யமுடியாத தாகத் தோன்றுகிற காரியத்தையும் செய்துமுடிக்க வல்ல ஊக்கத்தை அம் மகிழ்ச்சி உண்டாக்குகிறது. அக்குழந்தையினால் ஒரே ஒரு வினாடி நேரம் கீழே விழாமல் நிற்க முடியுமென்றாலும் அந்த ஒரு வினாடி நேரமாயினும் தன்னால் நிற்கமுடிகிறதே யென்பதைத்தான் அக்குழந்தை நினைக்கிறதாகத் தோன்றுகிறதே யொழிய தான் அடிக்கடி கீழே விழுவதை அக்குழந்தை நினைப்பதாகத் தோன்ற வில்லை.

நடக்க முயலும்போது சிறு குழந்தைகளுக்கு அடிகளும் காயங்களும் ஏற்படுவதைப் போலவே நாமும் அன்றாட வாழ்வில் பலவேறு விதமான இடர்களை அடைகிறோம். அவ்விடர்கள் நமது அறிவின் குறைவையும், நமது இயலாமையையும், கொண்ட கருத்தை நிறைவேற்றுவதில் நமக்குள்ள ஆற்றலின் குறைபாட்டையும் மட்டுமே எடுத்துக்

காட்டுமானால், அதனாலேயே நாம் மனம் குன்றி இறந்துவிடக் கூடும். ஏதோ ஒரு குறிப்பிட்ட கால வரம்புக்குள் நமது வாழ்வை ஆராய்ந்து பார்த்தோமானால், அக்கால வரம்புக்குள் நாம் அடைந்த தோல்விகளும் துன்பங்களும் அபரிமிதமாகத் தோன்றும். ஆனால் வாழ்வு, பரந்து கிடக்கும் தன் காட்சியைப் பார்க்குமாறு இயல்பாக நம்மை அழைத்துச் செல்கிறது. இப்போது நம்மிடம் குறைபாடுகளைத் தாண்டி முன்னேறச் செய்யக் கூடிய ஒரு இலட்சியத்தை வாழ்வு நமக்களிக்கிறது. நமக்குள்ளே ஒரு நம்பிக்கை இலங்குகிறது. இப்போது நாம் அடைந்துகொண்டிருக்கும் சிறு அனுபவத்தின் முன்னால் அது நடந்து சென்று கொண்டே யிருக்கிறது. அந்த நம்பிக்கையாவது யாது? நம்முள்ளிருக்கும் பரம்பொருள் மீது நாம் கொண்டுள்ள அழிவற்ற நம்பிக்கையாகும். அந்த நம்பிக்கை நமது குறைபாடுகள் எதனையும் நிலையானதாகக் கருதாது. தனது சக்தியை அதுவரை அறுத்துக்கொள்வதில்லை. கடவுளும் மனிதனும் ஒன்று என்று அது துணிந்து கூறு கிறது. அதனுடைய தாறுமாறான கனவுகள் ஒவ்வொரு நாளும் நனவாகிக்கொண்டிருக்கின்றன.

எப்பொழுதும் நாம், நமது மனத்தை எல்லையற்ற பொருளின்பால் திருப்புகிறோமோ அப்பொழுதுதான் நாம் உண்மையாகக் காண் கிறோம். உண்மையென்ற இலட்சியம் குறுகிய தற்சமய வாழ்வில் அடங்கி நிற்கவில்லை. அவ்வப் போதையப் புலனுணர்ச்சியிலில்லை. அது முழு மையை உணர்கிற உணர்வில்தான் இருக்கிறது.

இவ்வுணர்வு நாம் எதைப் பெற்றிருக்கிருேமோ அதிலிருந்து நாம் எதைப் பெறவேண்டுமோ அதைப்பற்றிச் சிறிது அறிவிக்கிறது. தெரிந்தோ தெரியாமலோ உண்மையைப்பற்றிய இந்த உணர்ச்சி நம்முள் இருக்கிறது. இந்த உண்மை வெளித்தோற்றத்தில் எவ்வளவு பெரிதாகத் தோன்றுகிறதோ அதைக்காட்டிலும் அதன் உண்மை உருவம் பெரிது. நமது வாழ்வு எல்லை யற்ற பரம்பொருளை நோக்கி முன்னேறிக்கொண்டி ருக்கிறது. ஆகவே நமது வாழ்வு இதுவரை அடைந்திருக்கிற பொருளைக்காட்டிலும் அது அடையவேண்டி ஆசைப்படுகிற பொருள் எவ்வ ளவோ பெரிது. உண்மையை அல்லது மெய்ப் பொருளைக் கண்டதாக வைத்துக்கொள்வோம். அப்போது நாம் அறிவின் எல்லைக்கு வந்துவிட்ட தாக நாம் எண்ண மாட்டோம். உண்மை, நம்மை இறுதி என்ற பாலைவனத்தில் கொண்டுபோய் விட்டுத் திண்டாடவைக்காமல் அப்பாலும் கொண்டு செல்லுகிறது. வாழ்க்கையானது அதன் பாதையில் சென்று கொண்டிருக்கும்போது, தீமை, அதை வழிமறித்து அதன் சொத்துக்களைப் பறித்துச் செல்ல முடியாது. தீமையும் நிலைத்து நிற்காமல் ஓடிக்கொண்டே யிருக்கிறது. அது நன்மையாக மாறித்தீரவேண்டும். தானே எல்லாமாகிய பொரு ளோடு அது நேருக்கு நேராக நின்று போரிட முடியாது. கடுகளவு தீமையானது எல்லையற்ற காலத்துக்கு எங்கேனும் தங்கிவிட முடியுமானல் அது வாழ்வின் ஆழத்துக்குப் பாய்ந்து சென்று அதன் வேர்களையே அரித்துவிடும். ஆனல் மனிதன் தீமையை ஒரு பொருட்டாகக் கொள்வ

தில்லை. சகிக்கமுடியாத ஒலிகளை உண்டாக்கி சித்திரவதை பண்ணுவதற்காகத்தான் 'வயலின்' என்ற வாத்தியத்தில் நரம்புகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன என்று அவன் நினைப்பதில்லை.'வயலின்' வாத்தியத்தில் இன்னிசை எழுப்பக் கூடியவன் ஒருவன் இருந்தால், அவ்வாறு இன்னிசை எழுப்ப இயலாதவர்கள் ஆயிரக் கணக்கிலிருக்கிறார்கள். ஆதலால் 'வயலினில்' வேதனை ஒலிகளைக் கிளப்புவதற்கே அதிக வாய்ப்புக்கள் இருக்கின்றனவெனக் கணக்குப்போட்டு மெய்ப்பிக்கலாம். பூரணத்துவம், தடைசெய்கிற எதிர்ப்புக்கள் யாவற்றையும் மீறி வளரும் சக்தியைப் பெற்றிருக்கிறது. வாழ்வு தீமை நிறைந்தது என்றும், தொல்லை நிறைந்த தென்றும் அறைந்தவர்கள் இருந்திருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. பொதுவாகப் பார்க்குமிடத்து யாரும் அம்மனிதர்களுடைய சொற்களை ஒரு பொருட்டாகக் கொள்வதில்லை. அவ்வாறு கூறுகிறவர்களுடைய அழுகணிப்பாட்டு வெறும் பாசாங்குத்தனமானது. அது அறிவுத் திறத்தாலோ மனஎழுச்சியாலோ எழுந்த பாசாங்கு ஆகும். வாழ்வோ நன்மையை நோக்கியே செல்கிறது. அது முன்னேற விரும்புகிறது. குடிப்பழக்கத்தில் முதிர்ந்தவர்கட்கு எந்நேரமும் குடிக்கவேண்டுமென்ற தாகம் ஏற்படுவதுண்டு. உலகம் துன்பமயம் என்பவர்களின் மனநிலையும் அத்தகையது. இவர்களுடைய மனம் ஆரோக்கியமான நல்ல உணவை வெறுத்து, குறை கூறுதல் என்னும் கொடிய போதையைக் குடிக்கிறது. பொய்யான மனத்தளர்ச்சியை உண்டாக்கி அதைத் தணிப்பதற்கு இன்னும் கொடுமையான போதையை நாடுகிறது. வாழ்வு தீமையாகு

மென்றல் அதை நிரூபிப்பதற்கு யாராவது தத்துவ ஞானி வரட்டும் என்று வாழ்வு காத்துக்கொண்டிராது. வாழ்வு தீமைதான் என்று கூறுவது கண்ணெதிரே கல்லுப்போல நிற்கிற மனிதனை, தற்கொலை செய்ததாகக் குற்றம் சாட்டுவது போலாகும். வாழ்க்கை தீமையாக இருக்க முடியாது என்பதை நிரூபிக்கவே இங்கு வாழ்வு இருக்கின்றது.

முழுதும் குறைபாடு என்று சொல்லமுடியாத ஒரு குறைபாடு, பூரணத்தைத்தனதுஇலட்சியமாகக் கொண்டிருக்கும்போது, ஒவ்வொரு நிமிஷமும் பூரணத்தை உணர்ந்துகொண்டே அது செல்ல வேண்டும். பொய்களுக்கிடையே மெய்யைக் கண்டு பிடிப்பதே நமது அறிவின் வேலையாக இருக்கிறது. உண்மையொளிக்கு விடுதலையளிப்பதற்காக, இடைவிடாது தவறுகளை எரிப்பதே ஞானம் எனப்படுகிறது நமது துணிவும் நமது தன்மையும், உள்ளும் புறமுமுள்ள தீமைகளை இடைவிடாமல் வென்று பூரணத்துவம் அடைய வேண்டியிருக்கிறது. வாழ்வு எனப்படும் நெருப்பு எரிந்துகொண்டிருப்பதற்காக, உடல் வாழ்வு, உடலிலுள்ள பொருள்களை ஒவ்வொரு வினடியும் எரித்துக் கொண்டிருக்கிறது. அதேபோன்று அகவாழ்வும் தனக்குரிய விறகை எரித்துத் தன் வாழ்வை நிலை நிறுத்த வேண்டியிருக்கிறது. நமக்கு இது தெரியும். நாம் இதை உணர்ந்திருக்கிறோம். மனித சமுதாயம் தீமையிலிருந்து நன்மையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது என்ற நம்பிக்கை நமக்குள் இருக்கிறது. இதற்கு மாறான உண்மைகள் ஆங்காங்கு தோன்றினாலும் அந்த நம்பிக்கையை

உலைத்துவிட முடியாது. மனித இயல்பில் நன்மை என்பது ஆக்கமான அம்சம் என்பதை நாம் உணரு கிறோம். எல்லாக் காலத்திலும் எல்லா நாட்டிலும் மனிதன் மிக உயர்வாக மதிப்பது நன்மையென் னும் இலட்சியத்தைத்தான். நன்மையைத் தெரிந் திருக்கிறோம். அதை விரும்பியிருக்கிறோம். நன்மை எது என்பதைத் தங்கள் வாழ்க்கையின் மூலம் காட்டிய மேலோருக்கு நாம் உயர்ந்த மரியாதை செலுத்தியிருக்கிறோம்.

இப்போது நன்மையென்றால் என்ன? அற வியல்பு என்றால் என்ன? என்ற கேள்விகள் இருக் கின்றன. எப்பொழுது மனிதன் தனது உண்மை யான ஆன்மாவின் விரிவான காட்சியைப் பெறு கிறானோ. தற்சமயம் தான் வெளிப்பார்வைக்குத் தோன்றுவதைக் காட்டிலும் இன்னும் அதிகமான வன் என்பதை எப்போது உணருகிறானோ அப் போது தனது அறவியல்பை மனிதன் உணர ஆரம்பிக்கிறான்; தான் இனிமேல் எவ்வாறு வளரப் போகிறோம் என்பதைத் தெரிந்துகொள்கிறான். இப்பொழுது அவனுக்கு நேரடியாக அனுபவத்தில் இருக்கும் நிலையைக் காட்டிலும் இனிமேல் அடை யப்போகிற அனுபவநிலைமை அதிக உண்மையான தாக இருக்கிறது. ஆகவே அவனுக்கு வாழ்வைப் பற்றிய தோற்றம் மாறிவிடுகிறது. அவனுடைய ஆசைகளிருந்த இடத்தில் இலட்சியத் துணிவு வந்து சேருகிறது. இலட்சியத் துணிவு என்பது பெருவாழ்வுபெற வேண்டுமென்ற உன்னத ஆசை. அப் பெருவாழ்வின் பெரும்பகுதி இப்போது நமது கைக்கு எட்டக்கூடியதில்லை. அவ் வாழ்வின்

பொருள்கள் பெரும்பாலும் நமது கண்முன் காணப் பட மாட்டா. நாம் நமது அறவியல்பை உணரத் தலைப்படும்பொழுது, நம்முள்ளிருக்கும் தாழ்ந்த மனிதன், நம்முள்ளிருக்கும் உயர்ந்த மனிதனோடு போராடத்தொடங்குகிறான். நமது ஆசைகள் இலட் சியத் துணிவோடு போராடத் தொடங்குகின்றன. புலனுகர்ச்சிப் பொருள்களை அடைய வேண்டுமென் னும் விருப்பம் நமது இதயத்திலுள்ள உயர்ந்த நோக்கத்தோடு போராடத் தொடங்குகிறது. நாம் இந்தக் கணத்தில் விரும்புவதென்ன, நமக்கு எது நன்மை என்ற இரண்டையும் பிரித்துணர ஆரம் பிக்கிறோம். நன்மையென்பது நமது பெருவாழ்வுக் கும் பேரான்மாவுக்கும் உகந்தது. வாழ்வின் முழுப் பகுதியையும் உண்மையாகக் காண்பதனால் நன்மை யைப் பற்றிய உணர்வு தோன்றுகிறது. வாழ்வின் முழுப்பகுதி என்பது, இப்போது நமது பார்வையிலி ருப்பதும், நமது பார்வையில் இல்லாததும், ஒருகால் மனிதப் பார்வைக்கு தோன்ற முடியாததுமாகிய யாவும் சேர்ந்தது ஆகும். மனிதன் வருங்காலத் தைப்பற்றிச் சிந்திக்கிறவன். இதுவரை நிகழாத வாழ்வுக்காகச் சிந்திக்கிறான். இப்போது நிகழ்ந்து கொண்டிருக்கிற வாழ்வைக் காட்டிலும் நிகழ இருக் கின்ற வாழ்வுக்காக அதிகம் சிந்திக்கிறான். ஆகை யால்தான் இன்னும் அடையப்பெறாத அவ் வாழ் வுக்காக இம்மை விருப்பங்களைக் கைவிடத் தயாராக இருக்கிறான். இக்காரியத்தினாலே அவன் பெரியோ னாகிறான். ஏன்? உண்மையை அவன் அறிவ தனால், தன்னுடைய சுயநலமும் வலுவுள்ளதாக இருக்க வேண்டுமானால் அப்பொழுதும் மனிதன் இந்த உண்மையை அறிந்துகொள்ள வேண்டி

யிருக்கிறது. அவ்வப்பொழுது தலைதூக்கும் ஆசைகளை அடக்கவேண்டியிருக்கிறது. அதை வேறு வார்த்தைகளிற் கூறப்புகுந்தால், அவன் அறவொழுக்கம் உள்ளவனாக இருக்க வேண்டும். நன்மை தீமையை அறியக்கூடிய சக்தி என்பது என்ன? நமது வாழ்வு, நோக்கமெதுவுமில்லாமல் தொடர்ச்சியற்றுத் துண்டுதுண்டாக இருக்கவில்லையென்பதை உணர்வதே அச்சக்தி. தனது ஆன்மா, எக்காலத்திலும் இடையறாது நிற்பதென்பதை அவனது அறவொழுக்க அறிவு உணர்த்துகிறது. தன் ஆன்மாவோடு மட்டும் தன்னைச் சுருக்கிக் கட்டுப்படுத்திக்கொண்டால் அப்பொழுது அவன் உண்மையற்றுவிடுகிறான் என்பதையும் அது அறிவுறுத்துகிறது. பொறி வாயிலாகக் காண்பனவற்றுள் மனிதன் சார்ந்திருப்பதைக் காட்டிலும் மெய்ப்பொருளில்தான் அவன் அதிகம் சார்ந்திருக்கிறான். தான் தனக்கே சொந்தமானவன் என்றல்லவா நினைக்கிறான். ஆனால் உண்மை அப்படி இல்லை. அவனுடைய 'நான்' என்பதனுள் சேர்க்கப்படாத எத்தனையோ மனிதர்களுக்கு அவன் சொந்தமானவன். அவர்களை அவன் நேரில் அறியக்கூடிய சந்தர்ப்பமில்லாமலே போகலாம். தற்போதைய அறிவுக்குள் அகப்படாத தனது வருங்காலத்தைப்பற்றிய சிந்தனை அவனுக்கிருப்பதுபோல 'நான்' 'எனது' என்ற சிறுவட்டத்தைத் தாண்டிநிற்கும் அவனது பேரான்மாவைப் பற்றிய சிந்தனையும் அவனுக்கு உண்டு. எல்லா மனிதனுக்கும் ஏதோ ஒவ்வோரளவில் இச்சிந்தனை இருக்கும்; இச்சிந்தனை இல்லாதவன் இல்லை. யாரோ ஒருவருக்காக தன்னுடைய சுயநல ஆசையைக் கைவிடாதவனும்,

யாரோ ஒருவர் மகிழ்ச்சி அடைவதற்காக நஷ்டத்தையோ, துன்பத்தையோ சகித்துக்கொண்டு, அவ்வாறு சகிப்பதில் இன்பம் காணுத மனிதனும் இருக்க மாட்டான். மனிதன் எதிலும் ஒட்டாத வாழ்வுடையவன் அல்லன். அனைத்துப் பிரபஞ்சத்தோடும் ஒட்டுறவு உடையவன் என்பது உண்மை. இதை உணரும்போது அவன் பெரியோன் ஆகிருன். மிக மிகக் கொடுமையாளனுன சுயநலக்காரன்கூட தீமை செய்வதற்குரிய சக்தியை நாடும்பொழுது இந்த உண்மையை ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது. இந்த உண்மையைப் புறக்கணித்துவிட்டு அவன் வலுப்பெற முடியாது. உண்மையான உதவியை நாடுவதற்காக சுயநலமும் ஓரளவு சுயநலமின்றியிருக்க வேண்டியிருக்கிறது. கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள், ஒரு கூட்டமாகக் கூடியிருப்பதற்கும் அறவொழுக்கமுள்ளவர்களாக இருக்கவேண்டும்; அவர்கள் உலக முழுவதையும் களவாடலாம்; ஆனுல் தமக்குள் களவாடக்கூடாது. ஒரு தீய கருத்தை நிறைவேற்றுவதற்கு அதனுடைய ஆயுதங்களுட் சில நன்மை சேர்ந்தனவாக இருக்கவேண்டும். உண்மையாகப் பெரும்பாலும் நமது அறவொழுக்கத்தின் பலமே தீமையைத் திறம்படச் செய்வதற்கும் நம்முடைய நன்மைக்காகப் பிற மனிதர்களைச் சுரண்டுவதற்கும், பிறருடைய நியாயமான உரிமைகளைக் கவருவதற்கும் நமக்குச் சக்தியளிக்கிறது. மிருகத்தின் வாழ்வு நன்மை தீமை யிரண்டுமற்றது. அந்தந்த நிமிஷத் தேவையைத்தான் அது அறியும்; மனிதனுடைய வாழ்வு ஒழுக்கங்கெட்டிருக்கலாம், ஆனுல் அந்த வாழ்வும் ஒரு அறவொழுக்க அடிப்படையைக்

கொண்டிருக்கும். ஒழுக்கக்கேடு என்பது, குறைபாடுள்ள அறவொழுக்கத் தோடிருப்பதாகும். பொய், ஓரளவுக்கு உண்மையாக இருக்கிறது. இல்லாவிட்டால் அது பொய்யாகவும் இருக்க முடியாது. கண் தெரியவில்லை என்ருல் குருடு என்று அர்த்தம். பார்த்ததில் தவறு என்ருல் நன்ருகப் பார்க்கவில்லை என்று அர்த்தம். மனிதன் சுயநலமாக இருக்கிருன் என்ருல் வாழ்வில் ஏதோ ஒரு தொடர்பை, ஒரு நோக்கத்தைக் கண்டுகொண்டான் என்பதாகிறது; அந்தச் சுயநலத்தின்படி நடப்பதற்கும், நடத்தையில் கட்டுப்பாடும் தன்னடக்கமும் அவசியமாகிறது. சுயநல முள்ளவன் தனது நன்மைக்காக மகிழ்ச்சியுடன் கஷ்டங்களை மேற்கொள்ளுகிருன். வறுமையையும் துன்பத்தையும் முணு முணுக்காமல் அனுபவிக்கிருன். குறுகிய காலத்துக்குள் நோவும் கஷ்டமுமாகத் தோன்றுவனவற்றைப் பரந்த பெருவாழ்வில் பொருத்திப் பார்க்கையில் அவை இன்பமும் சுகமுமாகின்றன என்பதை அவன் அறிவான். இவ்விதமாகச் சின்ன மனிதர்களுக்கு நஷ்டமாக இருப்பவை பெரிய மனிதர்களுக்கு இலாபமாக இருக்கின்றன. பெரிய மனிதர்களுக்கு நஷ்டமாக இருப்பவை சின்ன மனிதர்களுக்கு இலாபமாக இருக்கின்றன.

ஒரு கருத்துக்காக, தனது நாட்டுக்காக, மனித சமுதாய நன்மைக்காக வாழ்கிறவனுக்கு வாழ்வு மிகப்பரந்த விரிவுடையதாகி அவ்வளவிற்கு நோவு என்பதும் ஒரு பெரிதாகத் தோன்ருமற்போகிறது. நன்மைசார்ந்த வாழ்வு வாழ்தல் என்பது எல்லோருடைய, எல்லாவற்றினுடைய, வாழ்வையும் வாழ்

தலாகும். இன்பம் என்பது தன் சொந்த உடல் வாழ்வைப் பொருத்த விஷயம். ஆனல் நன்மை யென்பது எல்லாக் காலத்துக்கும் மனித சமுதாயத் தின் ஆனந்தத்தைப் பொருத்த விஷயம். நன்மை என்ற நோக்கில் பார்க்கும்போது இன்பமும் நோவும் வேறு வகையாகக் காட்சியளிக்கின்றன. இன்பத்தை விலக்கி துன்பத்தை விரும்பிநாடலாம் என்ற அளவிற்கு யாவும் மாறிவிடுகின்றன. வாழ் வுக்கு உயர்ந்த மதிப்பைக் கொடுக்கக்கூடிய பொரு ளாகச் சாவையும் விரும்பி வரவேற்கும்படியாகிவிடு கிறது. மனித வாழ்வை, உயர்ந்த இலட்சியங்கள் என்ற படிகளிலிருந்து பார்க்கும்போது, நன்மை, இன்பம், துன்பம் ஆகியவைகளைப் பற்றிய கருத்துக் கள் தங்களது முழுமதிப்பையும் இழந்து விடு கின்றன. உன்னதக் கருத்துக்களுக்காக உயிரைத் தியாகம் செய்தவர்கள் இதை நிரூபிக்கின்ருர்கள் என்பதைச் சரித்திரத்தில் காணலாம். நாமும் நம்மு டைய வாழ்வில் சின்னஞ்சிறு தியாகங்கள் மூலமாக இதை நிரூபிக்கிரும். கடலிலிருந்து ஒரு குடம் தண்ணீரை எடுக்கும்போது அதுகனமாக இருக் கிறது. நாமே கடலில் மூழ்கிக் குளிக்கும்போது நமது தலைக்குமேலே எத்தனையோ ஆயிரம் குடம் தண்ணீர் ஆடியலைகிறது. இருப்பினும் அந்தத் தண்ணீரின் கனம் நம்மை அமுக்குவதில்லை. நான் என்ற குடத்தை நமது பலத்தோடு சுமக்க வேண்டியிருக்கிறது. சுயநலம் என்ற படியிலிருக்கும் போது இன்பமும் துன்பமும் தமது முழுக் கனத் தைக் கொண்டிருக்கின்றன. அறவொழுக்கப் படியி லிருக்கும் பொழுது அவை சிறிதும் கனமில்லாமல் போய்விடுகின்றன. அந் நிலையை அடைந்த

மனிதன் கசக்கிப் பிழிவது போன்ற சோதனைகள் நேர்ந்தபோது காட்டும் பொறுமையையும், கொடியோர் அவனை அரக்க மனங்கொண்டு அல்லற் படுத்தும்போது அவன் காட்டும் சகிப்பையும் பார்த்தால், அவன் மனித வரம்புக்குமீறிய ஆற்ற லுள்ளவனுகத் தோன்றுகிருன்.

முழுக்க முழுக்க நன்மையில் தோய்ந்து வாழ்வ தென்ருல், அது, தனது வாழ்வு எல்லையற்ற பரம் பொருளிடத்திருப்பதை உணருதலாகும். இதுதான் வாழ்வைப்பற்றிய மிகமிக விரிவான காட்சி. நமக் குள்ளே நாம் பெற்றுள்ள அறவொழுக்கப் பார்வை யினுல் வாழ்வின் முழுக்காட்சியைக் காணமுடியும். அறவொழுக்கத்தினுலெய்தும் இந்த ஆற்றலை மிக உயர்ந்த அளவுக்கு விருத்தி செய்யுமாறு புத்தர் உபதேசம் செய்தார். நமது தொழில்கள், அகப் பற்று புறப்பற்றுக்களைச் சுற்றி நின்றுவிடவில்லை யென்பதை அறிந்துகொள்ள வேண்டுமென்றும் கூறினுர். கிறிஸ்துநாதர், விண்ணுலக ராஜ்ஜியத் தைக்கண்ட காட்சியும் இதுவேயாம். அற வொழுக்க வாழ்வு, பிரபஞ்சமுழுதும் பரவிநிற்கும். நாம் அத்தகைய விரிந்த வாழ்வை அடையும்போது இன்ப துன்பத் தளைகளிலிருந்து விடுதலை பெறு கிருேம். 'யான்' 'எனது' என்னும் செருக்கு அறு பட்டு, விரிந்த வாழ்வு எய்தி, எல்லையற்ற இன்பம் அடைகிறது. இந்த நிலைமையில் ஆன்மாவின் வேலை உயர்ந்த தரத்தை எட்டுகிறது. அதை வேலையில் தூண்டுவது ஆசைகளல்ல; தன்னகத்தே பொங்கும் ஆனந்தம் அதை வேலை களில் ஈடுபடுத்துகிறது. கீதையில் கூறப்பட்ட கர்ம யோகமும் இதுவே. பற்றற்ற நல்லதொழிலைச்

செய்வதன் மூலம் எல்லையற்ற பரம்பொருளின் தொழிலோடு இணைந்துவிடுவதே கர்மயோகம்.

எங்கும் நிறைபொருளோடு தன்னையும் ஒன்று படுத்துவதனுல் மனிதன் தனது உயர்ந்த இலட்சியத்தை அடைகிருன். அப்போது துன்பத்தளைகளிலிருந்து விடுதலைபெறுகிருன். இதுவே, மனிதக் குலத்தைத் துயரப் படுகுழியிலிருந்து விடுவிக்க வேண்டி ஆழ்ந்த சிந்தனையிலிருக்கும் போது புத்தன் கண்டுபிடித்த உண்மை. இதை இன்னும் விரிவாகக் காண்போம்.

என்னுடைய மாணுக்கர் ஒருவர், ஒருசமயம், தான் புயலில் அகப்பட்டுக்கொண்டதைப் பற்றிச் சொன்னுர். அப்போது "இந்தப் புயல் நம்மை ஒரு கைப்பிடிப் புழுதியைப் போலல்லவா படுத்தி வைக்கிறது' என்ற எண்ணம் தன்னெஞ்சை வாட்டியதாகக் கூறினுர். அவர் ஒரு தனி மனிதர் என்பதும் அவரால் சுயேச்சையாக நினைக்கவும் துணியவும்கூடும் என்பதும் அப்புயலின் போக்கைச் சிறிதும் மாற்றவில்லை.

"அவர்களும் தனி உயிர்களல்லவா" என்ற எண்ணம் இயற்கையின் போக்கை மாற்றுமேயானுல் அப்பொழுது மனிதர்கள் தான் அதிகம் அவதிப்படுவார்கள்" என்று நான் கூறினேன்.

"அப்படியானுல் நான் இருக்கிறேன் என்ற உணர்ச்சி நம்முள் இருக்கிறதே, அதைப் புறக்கணிக்க முடியாதல்லவா" என்று கூறி அவர் தனது சந்தேகம் நீங்காதிருந்தார். நம்முள்ளிருக்கும்

அந்த 'நான்' தனக்குச் சொந்தமான உறவு ஒன்றை நாடுகிறது.

'நான்' என்பது 'நானற்றதோடு' உறவு கொண்டிருக்கிறது என்றேன். அப்படியானால் அவ் விரண்டுக்கும் பொதுவான பொருள் ஒன்று இருக்க வேண்டும். அம்மத்தியப் பொருள் 'நான்' என்ப தோடு என்ன உறவு நிலையில் இருக்கிறதோ அதே உறவு நிலையில்தான் 'நான் அற்றதோடும்' இருக்க வேண்டும். இதை இங்கு திரும்பவும் சொல்லி விளக்குகிறேன். நமது தனித்தன்மை இயற்கை யாகவே எங்கும் நிறைபொருளை நாடவேண்டி யிருக்கிறது. நமது உடல், தன்னையே தின்ன ஆரம்பித்தால் அது இறந்து தீரும். கண்ணுக்கும், தன்னைப் பார்த்துக் கொண்டிருப்பதுதான் வேலை யென்றால் அது வேலையற்றதாகி விடுகிறது.

எவ்வளவுக் கெவ்வளவு நமது கற்பனை வலு வானதாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது வெறும் மனத்தோற்றமாக இல்லாமல் உண்மை யோடு மிகவும் ஒன்றுபட்டதாக இருக்கக் காண்கி றோம். அதேபோல எவ்வளவுக்கெவ்வளவு நமது தனித்தன்மை வீறுள்ளதாக இருக்கிறதோ அவ் வளவுக்கவ்வளவு அது எங்குமுள்ள பொருளை நோக்கி விரிவடைகிறது. மனிதனது பெருமை வெறும் மனிதனாக இருப்பதில் இல்லை. அவன் நிறை பொருளில் எவ்வளவைத் தனதாக்கிக் கொண்டிருக்கிறான். என்பதில் அவன் பெருமை இருக்கிறது. குளத்தின் ஆழத்தை அதன் பள்ளத் தைக் கொண்டு மதிப்பிடுவதில்லை. அங்குள்ள

தண்ணீரின் ஆழத்தைக்கொண்டு குளத்தின் ஆழம் மதிப்பிடப்படும்.

நமது இயற்கை மெய்யை நாடுகிறதென்பதும் நமது இயல்பு வெறும் கற்பனையுலகிலேயே களிப் படையமுடியாதென்பதும் உண்மை. அப்படியானல் உலகப் பொருள்களை அறிந்து, அவைகளது, தன்மையை உணர்ந்து அவைகளைக் கையாளுவது நல்லதே தவிர, அவைகளை நம் இஷ்டப்படி ஒன்றும் செய்யமுடியாதிருப்பது நல்லதென்பது தெளிவா கிறது. மெய்ப்பொருளின் இந்த உறுதி - சிறிதும் விட்டுக் கொடுக்காத இந்த உறுதி, சிலசமயம் நமது துணிவுக்குக் குறுக்கே நிற்கிறது. நடக்கப் பழகுகிற குழந்தை கீழே விழும்போதெல்லாம் தரையின் இறுக்கம் அதற்குக் காயத்தை உண்டாக்குகிறது. ஆனல் அதே இறுகிய பூமிதான் குழந்தையின் நடைப்பழக்கத்தையும் சாத்தியமாக்குகிறது. அவ் வாறு தரை காயம் உண்டாக்குவதைப்போல மெய்ப் பொருளின் உறுதி நமது துணிவுக்குக் குறுக்கே நின்று நம்மை அநேகந்தடவை ஆபத்தில் இறக்கி விடுகிறது. ஒருசமயம் நான் படகில் செல்லும்போது பாய்மரம் ஒருபாலத்தின் அடிப் பக்கத்திலுள்ள 'கர்டரில்' சிக்கிக்கொண்டது. ஒருகண நேரத்துக்கு என்னுடைய பாய்மரம் ஒரு அங்குலம் அல்லது இரண்டு அங்குலம் வளைந்து கொடுத்திருந்தால் அல்லது கொட்டாவி விடும் பூனையைப் போலப் பாலம் சிறிதுமுதுகைநெளித்துக்கொடுத்திருந்தால், அல்லது ஆறு சிறிது பள்ளமாகிப்போயிருந்தால், சங்கடமில்லாதிருந்திருக்கும். ஆனல் இவைகள் ஒன்ருவது என்னுடைய சங்கடத்தைக் கவனிக்க

வில்லை. ஆனால் அதே காரணத்தினால்தான் நான் ஆற்றைப் பயன்படுத்த முடிந்தது. பாய்மரத்தின் உதவியால் படகோட்ட முடிந்தது. ஆற்றில் வெள்ளம் அதிகமானால் பாலத்தின்மீது நடக்கவும் கூடும். பொருள்கள் தத்தம் குணத்தோடிருக் கின்றன. நாம் அவைகளைக் கையாளவேண்டு மென்றால், அவைகளை நாம் அறிந்துகொள்ள வேண்டும். நம்முடைய விருப்பம் அப்பொருள்களை ஆளவில்லையாதலால் அவைகளின் தன்மையை அறிவதும் நமக்குச் சாத்தியமாகிறது. பொருள் களைப் பற்றிய அறிவு நமக்கு ஆனந்தத்தையளிக் கிறது. ஏனெனில் இந்த அறிவே நம்மைப் புறப் பொருள்களோடு உறவு படுத்துகிறது. அறிவு புறப்பொருள்களை நமதாக்குகிறது; நமது வரம்பை விரிவாக்குகிறது.

வாழ்வில் நாம் ஒவ்வொரு அடியெடுத்து வைக் கும்போதும், நம்மைக் காட்டிலும் நாம் பிறரைத் தான் கவனிக்க வேண்டியிருக்கிறது. சாவில்தான் நாம் தன்னந்தனியாக இருக்கிறோம். ஒரு கவிஞன் தன் மனத்தில் உதித்த கருத்தைப் பிறர் மனம் மகிழச் சொன்னால் அவனே உண்மையான கவிஞன். எல்லோருக்கும் பொதுவான மொழியில் சொன்னால் அவனால் எல்லோருக்கும் தன் கருத்தை உணர்த்த முடியும். இந்தப் பொதுமொழிக்கென்று சில சட்டங்கள் உண்டு. அதைக் கவிஞன் அறிந்து கையாளவேண்டும். அப்படிச் செய்தால் அவன் உண்மைக் கவிஞன் ஆகி இறவாத புகழடைகிறான்.

(ஆகவே மனிதனுடைய தனித்த இயல்பு அல்ல, அவனிடமுள்ள உயர்ந்த உண்மை. அவ

னிடம் எங்கும் நிறை பொருள் இருக்கிறது) அதுவே அவனிடம் உள்ள உயர்ந்த உண்மை. மனிதன், தன்னைத் தவிர வேறொன்றும் நினைப்ப தற்கில்லாத உலகில் வாழ நேரிட்டால் அவனுக்கு அதைக் காட்டிலும் கொடிய சிறை வேறொன் றிருக்காது. எல்லாரோடும், எல்லாவற்றோடும் அதிகமாகக் கலந்துகொள்வதற்குத் தக்கபடி அதிக மான ஆனந்தத்தை மனிதன் அடைகிறான். புறப் பொருள்களின் சட்டத்தை யறிந்து, அதைக் கையாண்டு நாம் உயர்வடைகிறோம். எங்கும் நிறை பொருளை உணர்கிறோம். எங்கும் நிறை இயற்கை விதியோடு எப்போது நமது சொந்த ஆசைகள் போராடுகின்றனவோ அப்போது நாம் நோகி றோம், வீண் பாடுபடுகிறோம்.

நமக்குத் தனிச் சலுகைகள் காட்டப்படவேண்டு மென்று ஒரு காலத்தில் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தோம். நமது சௌகரியத்துக்காக இயற்கையின் விதிகளைச் சிறிது நிறுத்திவைக்கப் படவேண்டுமென்று எதிர்பார்த்தோம். நாம் முன்பு போல இப்போது இல்லை. இப்போது நமக்கு விஷ யங்கள் நன்றாகத் தெரியும். நமக்காக விதியை நிறுத்தி வைக்க முடியாதென்று தெரிந்துகொண் டோம். இந்த அறிவின் மூலம் நாம் வலுப்பெற்று விட்டோம். இந்த விதி நமக்கு அப்பாற்பட்டதல்ல; அது நம்முடையதே. எங்கும் இயங்குகின்ற சட் டத்தின்மூலம் நாம் காணுகிற அந்தப் பராசக்தியும் நமது சக்தியும் ஒன்று. நாம் சின்னத்தனமாகப் போகும்போதும் இயற்கையை எதிர்த்துப் பாயும் போதும் அது நம்மைச் சிதறடிக்கிறது. நாம் உயர்

வாக நடக்கும்போதும், எல்லாவற்றோடும் ஒன்றிப் போகும்போதும் அது நமக்கு உதவி செய்கிறது. இவ்விதம் விஞ்ஞானத்தின்மூலம் இயற்கை விதிகளை அதிகமாக அறிவதற்குத் தக்கபடி நாம் அதிகமான சக்தியைப் பெறுகிறோம். இச் சிறு உடலேயன்றி ஒரு பிரபஞ்ச உடலைப் பெற முயல்கிறோம். நமது கண்கள், கால்கள், உடற்பலம் ஆகியவை உலக எல்லை வரை எட்டுகின்றன. நீராவியும் மின்சாரமும் நமது நரம்பும் தசையுமாகின்றன. நமது உடலுறுப்புகளுக்கிடையே உறவும், உறவை நடத்தும் விதியும் இருப்பதனால், இவ்வுடலை நம்முடையது என்று கூறமுடிகிறது. அதைப்போல உலக முழுவதும் பரவி இயக்குகிற உறவொன்று இருக்கிறது. அதைக்கொண்டு உலக முழுதும் நமது உடலென்று கூறி அவ்வாறே நாம் அதைப் பயன்படுத்திக்கொள்ளவும் கூடும். விஞ்ஞான யுகமாயிருக்கிற இக்காலத்திலே உலக முழுவதையும் நம்முடைய உலகுடல் என்பதை உறுதி செய்ய முயன்று வருகிறோம். சட்டபூர்வமான நமது இந்த உடைமைகளைச் சொந்தமாக்கும் திறனில்லாத காரணத்தினால் தான், வறுமையையும் துன்பங்களையும் கொண்டுள்ளோம் என்பதை நாம் அறிவோம். உண்மையில் நமது சக்திகளுக்கு எல்லை கிடையாது. பிரபஞ்சத்தை இயக்குகிற சட்டத்தின் வெளித்தோற்றமாக எங்கும் நிறை சக்தியிருக்கிறது. அச்சக்திக்கு நாம் அப்பாற்பட்டவர்களில்லை. ஆகவே நமது சக்திகளுக்கு எல்லையில்லை. நோவையும் சாவையும் வெல்லப்போகிறோம். வேதனையையும் வறுமையையும் வீழ்த்தப்போகிறோம். விஞ்ஞான அறிவின் ஒத்தாசையால் எங்கும் நிறை பொருளை அதன்

ஸ்தூல உருவத்தில் காணப்போகிறோம். நாம் முன்னேற முன்னேற வலியும் நோயும் சக்தியின் மையும் நிலைத்தவை அல்ல என்பதைக் காண்கி ரோம். நமது தனி உயிரை நமது பிரபஞ்ச உயி ரோடு சரியாக இணைக்காத காரணத்தினால் அவை முளைக்கின்றன என்பதைக் காண்கிறோம்.

இதே போலத்தான் ஆன்ம வாழ்வும். நம்முள் ளிருக்கும் தனி மனிதன், பிரபஞ்ச மனிதனின் சட்டபூர்வமான ஆட்சியை வெறுக்கும்போது நாம் அறவொழுக்கத்தில் தாழ்ந்து விடுகிறோம். அப் போது நாம் நோகவேண்டியதுதான். இத்தகைய நிலைமையில் நாம் அடையும் வெற்றிகள் நமது பெருந்தோல்விகள் ஆகும். நமது ஆசைகள் நிறைவேறுமானால் அப்பொழுது நாம்பரம ஏழையா கிறோம். நமக்கென்று தனி ஊதியங்கள் வேண்டி ஆசைப்பட்டு நிற்கிறோம். வேறு யாரும் நம்மோடு பங்குக்கு வராத சலுகைகளை அனுபவிக்க விரும்பு கிறோம். ஆனால் எது தனி உரிமையாக இருக் கிறதோ அது பொது உரிமையாக இருப்பதோடு எந்நேரமும் போராடவேண்டியிருக்கும். இத் தகைய சமுதாயப் போராட்ட நிலைமையில், தன்னை யாரும் நெருங்கமுடியாதபடி பெருந்தடைச் சுவர் களை எழுப்பிக்கொண்டு அதன்பின் மறைந்து வாழ்கிறான் மனிதன். தன்னலம் பரவிய எந்த நாகரிகமும் நிலவும்போது நமது வீடுகளை உண்மை யான வீடுகள் என்று கூறுவதற்கில்லை. அவை நம்மைச்சுற்றி நாம் எழுப்பிக்கொண்ட செயற்கைத் தடைச் சுவர்கள் ஆகும். மேலும், நாம் ஆனந்த மாக வாழவில்லை என்றுவேறு மனம் நொந்து

கொள்கிறோம். உலகப்பொருள்களில் நம்மைத் துன்புறுத்தக்கூடிய சக்தி ஏதோ இருப்பதுபோல அவலப்படுகிறோம். எங்கும் நிறை ஆன்மா நம்மை ஆனந்தத்தில் மூழ்குவிக்கக் காத்துக் கொண்டிருக்கிறது. ஆனால் நமது சொந்த ஆன்மா அதை ஏற்க மறுக்கிறது. நமது சுயநல வாழ்வே எங்கும் தகராறுகளையும் சிக்கல்களையும் உண்டாக்குகிறது. சமூகத்தில் சாதாரணமாக நிலவும் சாந்த நிலைமையைக் கவிழ்த்து, எல்லா விதமான துன்பங்களுக்கும் இது இடமளிக்கிறது. இச் சுயநல வாழ்வு காரியங்களை ஒரேயடியாகக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி விடுகிறது. இதன் காரணமாகவே சமூகத்தில் ஒழுங்கை நிலைநாட்டு வதற்காகச் செயற்கையான நிர்ப்பந்தங்களையும் கட்டுப்பாடுடைய கொடுங்கோன்மையையும் உண் டாக்க வேண்டியிருக்கிறது. சமூகத்தில் நரக ஸ்தாபனங்களைச் சகித்துக்கொள்ள வேண்டியிருக் கிறது. இவைகளால் மனித வர்க்கம் ஒவ்வொரு கணமும் அவமானம் அடைகிறது.

நாம் வலுவுள்ளவர்களாக இருக்க வேண்டு மானால் எங்கு நிறை இயற்கைச் சக்திகளின் விதிகளுக்குக் கட்டுப்பட வேண்டுமென்பதையும் நடைமுறையில் அவ்வியற்கைச் சக்திகள் நம்மவை என்று உணர வேண்டுமென்பதையும் கண்டோம். ஆகவே ஆனந்தமாக இருப்பதற்கு நமது துணிவை எங்கும் நிறைபொருளின் துணிவான ஆளுகைக்கு உட்படுத்தி அப்பொருளின் துணிவே உண்மையில் நமது துணிவு என்பதை உணர வேண்டும். நம் மிடமுள்ள எல்லையுற்ற பொருள், எங்கும் நிறைந்த

எல்லையற்ற பொருளோடு இணைந்து ஒன்ருகி நிறை வெய்தியபோது நோவும் வலியும் விலையற்ற பொருளாகின்றன. அவை நமது ஆனந்தத்தின் மதிப்பை அளக்கும் அளவு கோலாகின்றன.

ஒருவன் தன் வாழ்வில் படிக்கக்கூடிய மிக முக்கியமான பாடம், இவ்வுலகத்தில் நோவு இருக்கிறது என்பதல்ல. அதை நல்ல பயனளிக்கும் வகையில் அதை மாற்றுவது தன்னைப்பொறுத்திருக்கிறதென்பதையும் அதை ஆனந்தமாகத் தன்னுல் மாற்ற முடியும் என்பதையும் அவன் அறிந்துகொள்ள வேண்டும். அந்தப் பாடத்தை நாம் முழுவதும் அறியாமல் போகவில்லை. எந்த மனிதனும் துன்பமனுபவிக்கும் தனது உரிமையை மனப்பூர்வமாக விட்டுக்கொடுக்க மாட்டான். மனிதனை மனிதனுகச் செய்வது அந்த உரிமையல்லவா? ஒருநாள் ஒரு கூலிக்காரனின் மனைவி தன்னுடைய மூத்த பையனை அயலூரில் இருக்கிற பணக்கார உறவினர் வீட்டுக்கு அனுப்ப வேண்டுமே என்று கூறி வருத்தப் பட்டாள். அவளுடைய பிள்ளையைக் கூட்டிக் கொண்டு போவதன் மூலம் அவளுடைய சிரமத்தைக் குறைக்க வேண்டுமென்ற நல்லெண்ணம் அவளுக்குப் பெரிய அதிர்ச்சியை உண்டாக்கி விட்டது. தாயின் துன்பம் அவளுக்கே உரியது. பராதீனம் பண்ண முடியாத அவளது சொந்த உரிமை அது. துன்பத்தை நீக்குவதற்காகச் செய்யப்படும் எந்தப் பரிகாரங்களுக்கும் அவள் இணங்கப் போவதில்லை. துன்பங்களிலிருந்து காப்பாற்றப் படுவதில் அவளுக்கு விடுதலை கிடையாது. துன்பங்களைத் தனது நன்மைக்காக மேற்கொள்ளுவ

திலும் தனது ஆனந்தத்தில் அதையும் ஒரு அம்சமாகக் கொள்ளுவதிலும் மனிதனுக்கு விடுதலை இருக்கிறது. நமது சொந்த இன்ப துன்பமே நமது வாழ்வின் உயர்ந்த பொருளல்ல என்பதை உணரும் போதும், சாவுக்கும் இன்னல்களுக்கும் அஞ்சாதவனும், நோவை ஆனந்தத்தின் மறுபக்கமாகக் காண்பவனும், அழிவற்றவனுமாகிய உலக மனிதன் நம்முள் இருக்கிறான் என்பதை உணரும்போதும், அவ் விடுதலை சாத்தியமாகிறது. இதை உணர்ந்தவன், குறைபாடுள்ளவர்களாகிய நமக்கு நோவே உண்மையான செல்வம் என்பதையும், பெரியோர்களோடும் நிறைவு பெற்றவர்களோடும் சரியாசனத்தில் அமருவதற்குரிய தகுதியை அது நமக்களிக்கிறதென்பதையும் நன்கு அறிவான். நாம் பிச்சைக்காரர்களல்லர். வாழ்வில் விலைமதிக்க ஒண்ணாத சக்தி, அறிவு, அன்பு ஆகிய எவற்றையும் நோவு என்ற ரொக்கம் கொடுத்தே பெறமுடியும். நிறைவு எய்துவதற்கு எல்லையில்லை என்பதைக் காட்டும் அறிகுறியாகவும், ஆனந்தம் என்னும் மலர் இதழ் அமைந்து விரித்துக் கொண்டிருப்பதற்கு அறிகுறியாகவும் நோவு அமைந்து இருக்கிறது. இதை அவன் நன்கறிவான். எவன் நோவை ஏற்றுக்கொள்ளுதலாகிய இன்பத்தைஇழக்கிறானோ அவன்வறுமையின் ஆழத்திற்கும் அவமானத்தின் ஆழத்திற்கும் அமிழ்ந்து கொண்டேபோகிறான். நோவு என்பவள் ஒரு தூய இளங்கன்னி. கேவலம் தினவைத் தணிப்பதற்காக நாம் நோவின் உதவியை நாடும்போது, நோவு தீமையாக மாறி, நாம் அவளைக்கேவலம் செய்ததற்காக நம்மை வறுமையுளாழ்த்தித் தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்கிறாள். அவள், அழிவற்ற நிறை

வின் திருப்பணியில் ஈடுபடுத்தப்பட்டிருக்கிருள். எல்லையற்ற பொருளின் பீடத்தின்முன் அவள் தனக்கேற்பட்ட உண்மையான இடத்தில் அமரும் போது இருள் வடிவமான தன் முகமூடியைத் தூர எறிந்து விடுகிருள். தன்னை அணுகிக் காண்பவனுக்குப் பரமானந்தப் பொருளாகத் தோற்றமளிக்கிருள்.

# “ நான் ”

எனது வாழ்வில் ஒரு கோடியில் நான் உயி ரற்ற பொருள்களோடு ஒன்ருகச் சேர்ந்திருக் கிறேன். அங்கே நான் பொதுவான இயற்கை விதியின் ஆளுகையை ஒப்புக்கொள்ளவேண்டும். என்னுடைய வாழ்வின் அடிப்படை அங்குதான் வெகு ஆழத்தில் பதிந்திருக்கிறது. பரந்த உலகம் என்னை இறுகப்பிடித்திருப்பதும் எல்லாப் பொருள் களோடு நான் இணைந்து ஒன்ருகி இருப்பதும் எனது வாழ்வுக்கு வலுவைக் கொடுக்கின்றன.

எனது வாழ்வின் மற்ருெரு கோடியில் நான் எதனேடும் சேராமல் தனித்திருக்கிறேன். எல்லா வற்ருேடும் நானும் ஒன்று என்ற சமத்துவத்தை உடைத்தெறிந்துவிட்டு ஒரு தனி மனிதனுக நான் இருக்கிறேன். என்னைப்போல வேறெங்கும் கிடையாது; நான் நானே; எனக்கு ஈடு இணை யில்லை. உலக முழுதும் திரண்டு வந்து என்னைக் கசக்கிப் பிழிந்தாலும் எனது தனித்தன்மையை அழிக்கமுடியாது. உலகப் பொருள்கள் யாவும் எவ்வளவோ பலம் கொண்டு எனது தனித்தன் மையைக் கவர முயன்ருலும் நான் அதைக் கைவிடாது நிலைநிறுத்திக் கொண்டிருக்கிறேன். எனது தனித்தன்மை தோற்றத்தில் சிறியது. ஆனல் உண்மையில் பெரியது. தன்னை உருச் சிதைத்து மண்ணேடு மண்ணுக்குவதற்கு முயலும்

எத்தனையோ சக்திகளுக்கு இடங்கொடாமல் அது சமாளித்துக்கொண்டிருக்கிறது.

இதுதான் எனது உயிரின் மேல்கட்டுக் கோப்பு. இதன் அடிப்படை அளவிடமுடியாத ஆழத்திலும் இருளிலும் இருக்கிறது. ஒரு சிற்பியின் மனத்திலுதித்த கருத்துக்கு உருவமாய் அமைந்திருக்கிறோம் என்கின்ற பெருமையோடும், ஈடு இணையற்றுத் தனித்திருக்கிறோம் என்கிற பெருமையோடும் இந்த மேல்கட்டுக்கோப்பு வெட்ட வெளியில் நிற்கிறது. இஃது அழிக்கப்பட்டுவிட்டால் ஒன்றும் நஷ்டமில்லை. அதனால் ஒரு அணுக் கூட அழிந்துபோகாது. ஆனாலும் அதில் உறைந்துள்ள படைப்பின்பம் நீங்கிவிடுறது. " நான் " எனும் இத் தனித்தன்மைதான், நம்முடையது என்று நாம் சொல்லக்கூடிய ஒரே ஒரு பொருள். இதைப் பறித்துவிட்டால் நாம் ஒன்றுமற்ற வறிஞராகிவிடுகிறோம். அதை நாம் இழந்தால் உலகத்துக்கே அது ஒரு நஷ்டம். இதைப்போன்ற பொருள் வேறெங்குமில்லாததால் இது மிகவும் மதிப்புள்ளது. நாமும்' நமது தனித்தன்மையை உணராது இந்தப்பிரபஞ்சத்தின் வயிற்றிலேயே கிடந்தோமானால் இந்தப்பிரபஞ்சத்தை அவ்வளவு நன்றாக அடையமுடியாது. பிரபஞ்சத்தை விட்டு வெளியேறி தனிப்பட்ட நிலைமையை அடைந்த போதே அதை நன்கு அடைய முடியும். பொதுப் பொருள் தனிப்பொருள் ஆகித் தன் நிறைவை அடைய முயன்றுகொண்டே யிருக்கிறது. நம்முடையதனிப்பண்பை இம்மியும் உருச் சிதையாமல் நிலைநிறுத்த வேண்டுமென்று ஆசைப்படுகிறோம்.

உண்மையில் பிரபஞ்சத்தின் ஆசையே அவ்வாறு நம்முள் இயங்குகிறது. நம்மில் நாம் மகிழ்கிறோம். இம்மகிழ்ச்சி, நம்மிடமுள்ள எல்லையற்ற பரம் பொருளை நாம் அனுபவிக்கும் மகிழ்ச்சியே யாகும். தன்னிடமிருக்கும் "நான்" எனும் தனியுணர்ச் சியை மனிதன் எவ்வளவோ உயர்ந்த உடைமை யாக மதிக்கிறான். அதற்காக அவன் படும் கஷ்டங் களும் இழைக்கும் பாவங்களும் இதை நன்கு நிரூபிக்கின்றன. என்னைப்போல் இன்னொருவன் கிடையாது. நான் நானே என்ற உணர்வு, அறிவு என்ற கனியைத் தின்றதால் வந்தவினையாகும். இந்த அறிவு அவனை வெட்கம் கெட்ட நிலைக்கும் பாதகச் செயல்களுக்கும் சாவுக்கும் கொண்டு சென் றிருக்கிறது. நான் என்ற தனி யுணர்ச்சியும் தனி வாழ்வுமே இத் துன்ப துயரங்களுக்குக் காரண மென்பதை அறிந்து, அதனால் இப்பிறவியே வேண்டாமென்று இயற்கை அன்னையின் வயிற் றிலேயே பத்திரமாகப் படுத்துறங்கிக் கிடக்கலா மல்லவா? 'நான்' எனும் தனியுணர்ச்சியும் தனி வாழ்வும் இல்லாமல் விண்ணுலக இன்பம் எய்து வதைக் காட்டிலும், அவ்வுணர்ச்சியும் அவ் வாழ்வும் கொண்டு துன்ப வாழ்க்கை வாழ்வதே மேலான் தாக இருக்கிறது.

நானெனும் ஆணவத்தை நிலைநிறுத்துவது எந்நேரமும் நமக்குத் தொல்லையையும் துயரத்தை யும் தருகிறது. உண்மையில் இந்தத் துன்பமே அதன் மதிப்பை எடுத்துக் காட்டுகிற நாணய மாகும். நாம் அடைந்த கஷ்டங்களும் நாம் செய்த தியாகங்களும் அந்த நாணயத்தின் ஒரு பக்கத்தில் காணப்படுகிறது. மறு பக்கம் நாம் பட்ட கஷ்டங்

களினுலடைந்த நன்மையும் இலாபமும் எவ்வளவு என்பது காணப்படுகிறது. நானென்னும் தனிப் பட்ட உணர்ச்சியும், வாழ்வும் தமக்கு வருத்தத்தை யும் தியாகத்தையும் தவிர வேருென்றையும் அளிக்க வில்லையென்ருல் அதற்கு ஒரு மதிப்பும் இல்லாமல் போய்விடும். நாமும் எக்காரணத்தைக் கொண்டும் தியாகம் செய்ய முன்வரமாட்டோம். இப்படிப்பட்ட நிலைமையில் நானெனும் உயிர்த்துடிப்பை ஒழித்துக் கட்டுவதே உயர்ந்த நோக்கமாகக் கொள்ளலா மென்பதிலும் சந்தேகமில்லை.

ஆனுல் கஷ்டங்களுக்குத் தக்கபடி இலாபம் இருக்குமானுல் எல்லாம் வெறுமையாய் முடிவுருமல் பூரண நிறைவில் முடிவடையுமானுல், துன்பங்களும் தியாகங்களும் அதன் மதிப்பைப் பெரிதும் உயர்த்து கின்றன. நானெனும் உயிர்த்துடிப்பின் உண்மை யான நிலை இதுதான். அதன் ஆக்கத் தன்மையை உற்றுணர்ந்தவர்கள் இந்த உண்மையை மெய்ப்பித் திருக்கிருர்கள். உயிரின் பொறுப்புக்களை ஆவலோடு ஏற்றுக்கொண்டு, சிறிதும் தயக்கமின்றி அவர்கள் தியாகங்களைச் செய்திருக்கிருர்கள்.

ஒருசமயம் சபையிலிருந்த ஒருவர் என்னை ஒரு கேள்வி கேட்டார். 'நான்' எனும் உயிர்த்துடிப்பை யொழிப்பதே மனித வர்க்கத்தின் உயர்ந்த இலட்சி யம் என்று இந்தியா கருதுகிறதல்லவா என்று அவர் வினவினுர். மேலே இவ்வளவு தூரம் முன்னுரை கூறிய பிறகு இங்கே அதற்குப் விடையளிப்பது எளிது.

முதலில் ஒரு விஷயத்தை நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். மனிதன் தன்

கருத்துக்களைத் தெளிவாகக் கூறியதே கிடையாது. ஒருகால் மிகச் சாதாரணமான விஷயங்களை மட்டும் சரியாகச் சொல்லியிருக்கிறான் என்று வைத்துக் கொள்ளலாம். பெரும்பாலும் ஒரு மனிதனுடைய சொற்களை ஒரு மொழியென்று கூடச் சொல்வதற் கில்லை. ஊமையன் எப்படிச் சில ஒலிக் குறிப்பு களைக் கொண்டு தனது கருத்தைத் தெரிவிக் கிறானோ அதே போன்று மனிதனுடைய மொழியும் அவனுடைய கருத்தைத் தெளிவாக எடுத்துக் கூறாமல், நமது ஊகத்துக்கு இடமளிக்கின்றன. மனிதனுடைய கருத்துக்கள் உயர்ந்தனவாவதற் குத் தக்கபடி அவனுடைய சொற்களின் பொருளை, அவனுடைய வாழ்க்கையை அறிந்தே உணர வேண்டும். அவனுடைய கருத்துக்களை அகராதி யின் துணைகொண்டு அறிய முயல்பவர்கள், வீடு வரைக்கும் வந்திருக்கிறார்கள். அவ்வளவுதான். அவர்களால் வீட்டினுள் செல்ல இயலாது. ஏனெ னில் வீட்டினுடைய வாயில் தெரியாது திண்டாடு வார்கள். நமது மிகப்பெரிய தீர்க்கதரிசிகளின் வார்த் தைகளின்மீது முடிவில்லாத சச்சரவுகள் கிளம்புவ தன் காரணம் இதுதான். அவர்களுடைய வாழ்க்கை யினைப் பின்பற்றி வாழ முயன்றால் அவர்களுடைய போதனைகளை உணர முடியும். அவர்களுடைய வாழ்க்கையைப் பின்பற்றாது அவர்களுடைய சொற் களை மட்டும் ஆராய முற்பட்டால் சச்சரவுகள்தான் மிஞ்சும். சொற்களை மட்டும் க்சக்கிப் பிழிந்துகொண் டிருப்பவர்கள் சாபக்கேட்டுக்குள்ளானவர்கள். அவர் கள் மும்முரமாகச் சருகரித்துக் கொண்டிருப்பார் களேயொழிய ஒருகாலும் அவர்கள் குளிர் காயப் போவதில்லை.

புத்தமதமும் இதர இந்திய மதங்களுமன்றி கிறிஸ்துவமதமும்கூட தன்னலமின்மை எனும் இலட்சியத்தைப் பெரிதும் பாராட்டுகின்றது. பொய்யான வாழ்க்கையிலிருந்து விடுதலை பெறுவதைத் தான் சிலுவையிலறைபட்டு இறப்பதாகக் கிறிஸ்தவமதம் கூறுகிறது. நிர்வாணம் என்பதும் இதுவே! நிர்வாணம் என்றால் விளக்கு அணைதல் என்று பொருள்படும். இதுவும் பொய்யான வாழ்க்கையிலிருந்து விடுபடுதலையே குறிக்கிறது.

மனிதனுடைய உண்மையான முத்தி எனப்படுவது, அவித்தை அல்லது அறியாமையிலிருந்து விடுதலை பெறுவதாகும். இதுவே இந்தியாவில் ஊறிக்கிடக்கும் கருத்து. ஆக்கமும் உண்மையுமாக இருக்கின்ற எப்பொருளையும் அழிப்பதில் முத்தி கிடைத்துவிடாது. அத்தகைய பொருளை அழிப்பதும் இயலாது. எது பொய்யானதோ, எது நாம் மெய்யினைக் காணமுடியாதவாறு நம்மைத் தடுக்கிறதோ அதை அழிப்பதில் விடுதலை இருக்கிறது. எப்பொழுது இந்தத் தடை நீக்கப்படுகிறதோ அப்பொழுதுதான் மூடியிருந்த கண்ணிமை திறக்கிறது. கண்ணிமை திறப்பதனால் கண்ணுக்கு ஒன்றும் நஷ்டமில்லையே.

நானெனும் உயிர்த்துடிப்பே மெய்ப்பொருள் என்றும் அதுவே முழுமுதல் என்றும் நாம் நினைப்பது அறியாமையாகும். 'நான்' என்பதைப்பற்றித் தவறான கருத்தைக் கொள்ளும்போது தன்னலமே நமது இறுதிக் குறிக்கோளாகிறது. அதன்படியே நமது வாழ்க்கையையும் நாம் அமைத்துக்கொள்கிறோம். தெருவழியே நடந்து செல்வதைத்

தவிர்த்து, தெருமண்ணை இறுகப்பிடித்துக்கொள்வ தனுல் போய்ச்சேரவேண்டிய இடத்திற்குப் போய் விடலாம் என்று நினைப்பவனைப்போலக் கடைசியில் ஏமாற்றமே நமக்குக் கிடைக்கும் கதியாகும். நம்முள்ளிருக்கும் ‘நான்’ எனும் துடிப்பு நம்மைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் பெற்றதல்ல. அது நிலைபேறுபெற்ற பொருளல்ல. நகர்ந்து சென்று கொண்டிருப்பதுவே அதன் இயற்கை. வாழ்வு என்பது தறி, நானெனும் துடிப்பு ஒருநூல். இந்த நூலைக்கொண்டு துணி நெசவு செய்யப்படு கிறது. ஆனுல் நூலே துணியாகுமா? ஆகாது. நான் எனும் உயிர்த்துடிப்பை முழுதும் அனுபவிப் பதற்காக ஒருவன் மிகவும் விரிவான ஏற்பாடுகளைச் செய்கிருன் என்று வைத்துக்கொள்வோம். அவ னுடைய அச்செயல், உலையில் இடுவதற்கு அரிசி இல்லாதபோது, அடுப்பில் தீயைமட்டும் மூட்டுவது போலாகும். தான் ஈன்ற குட்டி அல்லது குஞ்சைத் தானே தின்றுவிட்டு அதன் பிறகு சாகின்ற பிராணி போல அந்த நெருப்பும் பெரிதாகப் பரவிப் பின்பு தன்னையே கொன்றழிக்கும்.

நன்கு கற்றறியாத மொழியில் உள்ள சொற் கள் அம்மொழியைக் கற்க முயலும்போது கொடு மையாகத் தலைதூக்கிக் கொண்டிருக்கின்றன. நாம் மேலும் வாசிப்பதை அவை தடுக்கின்றனவே ஒழிய அவை நமக்கு எந்த விஷயங்களையும் சொல் வது கிடையாது. புரியாத அச்சொற்களின் தளை யிலிருந்து விடுதலை பெறவேண்டுமென்ருல் அஞ் ஞானத்திலிருந்து அதாவது அறியாமையிலிருந்து நாம் விடுபடவேண்டும். அப்போது அம்மொழி

யின் உட்கருத்துப் புலனுகி நம் மனம் விடுதலை பெறும். சொற்களின் கொடுமையிலிருந்து விடு படுவதற்காகச் சொற்களேயே அழித்துவிட்டால் நமது அறியாமையும் அத்துடன் ஒழிந்துவிடும் என்று நினைப்பது மடத்தனம். மொழியறிவு முற் றிலும் கைவந்த பின்பு, அம்மொழியிலுள்ள சொற் கள் அவையவை தாம் இருக்கவேண்டிய இடத்தி லேயே இருப்பதையும், நம்முடைய படிப்பை அவை தடுத்து நிறுத்தாதிருப்பதையும் காண்கிருேம். அதுமட்டுமா? நாம் அவற்றினிடையே கூடி மேற் செல்ல நமக்கு வழி காட்டுகின்றன. சொற்களில் பொதிந்துள்ள கருத்து என்ன என்பதையுணர்ந்து நாம் விடுதலை பெறுகிருேம்.

அதுபோன்று, அவித்தையின் பாற்பட்ட காரணத்தால் நான் எனும் உயிர்த்துடிப்பே இறுதி யான பொருள் என்று கருதிவிடுகிருேம். அதைத் தாண்டி அப்பாற் செல்லவிடாது நம்மைத் தளைப் படுத்துவதும் அவ் அவித்தையே. நான் எனும் உயிர்த்துடிப்பைக் கடந்த பொருள், அத்துடிப்பி னுள்ளே அடங்கிக்கிடக்கிற தென்பதை நாம் காணமுடியாதவாறு தடுப்பதும் அவ் அவித்தையே. இது கருதியே அவ்வப்போது அறிஞர்கள் தோன்றி "அவித்தையிலிருந்து உன்னை விடுவித்துக் கொள். உன்னைச் சிறைப்படுத்தி யிருக்கும் நான் எனும் உயிர்த்துடிப்பிலிருந்து தப்பித்துக்கொண்டு உன்னுடைய உண்மையான ஆன்மாவைக் கண்டு கொள்," எனக் கூறிப் போந்தனர். நம்முடைய உண்மையான இயல்பை நாம் எய்தும் போது நாம் விடுதலை பெறுகிருேம். தனது கலையின் இலட்

சியத்தை உணர்ந்துகொண்ட கலைஞன் தனது கலையில் சுதந்தரத்தைக் கண்டு கொள்கிறான். மிக வும் கஷ்டப்பட்டுப் போலித்தனத்தைக் கையாண்டு கொண்டிருந்தவன் தனது இலட்சியத்தை எய்திய பின், அப்போலித்தனத்திலிருந்து விடுதலை பெறு கிறான். பொது மக்களின் ஆரவாரத்தால் ஊக்கம் அளிக்கிறது. மதத்தின் வேலை நமது உள் இயல்பை அழிப்பதன்று. மதம் நமது இயல்பை நிறைவு செய்தல்வேண்டும்.

தர்மம் என்ற வடமொழிச் சொல்லை வழக்கமாக மதம் என்று ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதுண்டு. ஆனால் எங்கள் மொழியில் அச்சொல்லுக்கு ஆழ்ந்த பொருளிருக்கின்றது. தர்மம் என்பது எல்லாப் பொருள்களின் அந்தரங்கத் தன்மையையும், அவற் றின் சத்தையும், உள்ளடங்கிய உண்மையினையும் குறிக்கின்றது. நமக்குள் இயங்கிக் கொண்டிருக் கும் முடிவான இலட்சியம் எதுவோ அதுதான் தர்மம். ஏதாவது தவறு நேர்ந்துவிட்டால் தர்மம் மீறப்பட்டு விட்டதாகக் கூறுகிறோம். அதன் பொருள் என்ன? நாம், நமது உண்மையான தன் மையைப் பொய்ப்பிக்கிறோம் என்பதுவே அதன் பொருள்.

ஆயின், இந்த தர்மம் இருக்கிறதே, நம்முள் இருக்கும் மெய்ப்பொருள், அது உள்ளமைந்திருக் கிறது; அது வெளிப்படையாகக் காணக்கூடியதல்ல. மனிதன் பாவம் நிறைந்தவன் என்றும், கடவு ளுடைய அருளினால்தான் அவன் உய்ய முடியும் என்றும் பொதுவாக எல்லோரும் கருதுகிற அள வுக்குக்கூட நமது உண்மைத் தன்மை வெளிப்படா

மல் உள்ளடங்கிக் கிடக்கிறது. நமது உண்மை யான இயல்பைப்பற்றி அவ்வாறு கருதுவது சரி யன்று. விதையினுடைய இயல்பு விதையைச் சூழ்ந்திருக்கும் ஓட்டுக்குள் அடங்கிக் கிடப்பது என் றும் ஏதேனும் அதிசயம் நிகழ்ந்துதான் அவ்விதை மரமாக வளரவேண்டும் என்றும் நினைப்பதைப் போன்றே இருக்கிறது. வெளிப்பார்வைக்கு விதை யின் தோற்றம் அதனுடைய உண்மையான இயல் புக்கு விரோதமாக இருக்கிற தென்பது நாம் அறி யாத விஷயமா? விதையை ரசாயன ஆராய்ச்சிக்கு உட்படுத்தினால் அதில் கரியும் பிசிதமும் இன்னும் சில பொருள்களும் இருப்பதாகக் காணலாமே தவிர கிளைத்தோங்கும் மரத்தைப்பற்றிய விஷயமொன் றும் அதில் காணக்கிடையாது. மரம் முளைக்க ஆரம்பிக்கும் போதுதான் அதன் தர்மத்தை நம் மால் காணமுடிகிறது. முளையைக் காக்கவேண் டியது மேல் ஓட்டின் தர்மம். விதையை மண்ணில் புதைத்து அதன் மேல்ஓடு வீணாகுமாறு செய்வதும் அது மக்கிப் போகுமாறு செய்வதும், விதையின் உண்மையான நோக்கம் அல்லது இயல்பு நிறை வேற வேண்டுமென்பதற்காகத்தான். மனித சமு தாய வரலாற்றிலும் உயிருள்ள விதைகள் முளை விட்டிருப்பதைக் கண்டிருக்கிறோம். நம்முள் மறைந்து அடங்கிக் கிடக்கும் அந்தப் பெரிய இலட் சியம், பெரிய மகாத்மாக்களின் மூலமாக வெளிப் பட்டுச் செயல்பட்டிருப்பதை நாம் கண்டிருக்கிறோம். உலகில் எத்தனையோ மனிதர்கள் வேடிக்கை மனி தர்களாக வாழுவதை நாம் பார்க்கிறோமென்றாலும், பயனற்றுப் போவதுதான் அவர்களுடைய தர்மம் அல்ல. தங்களை மூடிக்கொண்டிருக்கும் மேல் ஓட்

டைப் பிளந்தெறிந்து ஆற்றல் மிக்க ஆன்மஞான முளையாகக் கிளம்பி, காற்றும் ஒளியும் படும்படியாக நன்கு வளர்ந்து நாலாதிசைகளிலும் கிளைத்துப் பரவுவது அவர்களது கடமையாகும்.

தன்னுடைய தர்மத்தை அடைவதன் மூலம் விதையானது விடுதலை பெறுகிறது. விதையின் இயல்பும் விதியும் மரமாவதில் சென்றுமுடிகின்றது. மரமாகின்ற நோக்கத்தை எய்தாதிருப்பதுவே அதன் சிறையாகும். தனது இலட்சியத்தை அல்லது இயல்பை நிறைவேற்றுவதற்காகச் செய்த தியாகம், அழிவு, அல்லது சாவில் முடிகிற தியாக மல்ல, அந்தத் தியாகம் விடுதலையைப் பெறுவதற் காகத் தளைகளை உதறி எறிவதாகும்.

மனிதன் தனது விடுதலையைப்பற்றிக் கொண் டுள்ள மிக உயர்ந்த இலட்சியம் எது என்பதை அறியும் போதுதான், அவனுடைய தர்மத்தை அறி கிறோம். அதாவது அவனுடைய உண்மையான இயல்பையும், அவனுடைய உயிர்த் துடிப்பின் பொருளையும் அறிகிறோம். தனது புலன் ஆசை களை நிறைவேற்றுவதற்கும், தனது ஆதிக்கத்தைப் பெருக்குவதற்கும் எது எண்ணற்ற சந்தர்ப்பங் களைத் திறந்து விடுகிறதோ அதையே மனிதன் தனது சுதந்தரம் என்று நினைப்பதுபோலத் தோன்றுகிறது. ஆனால் மனித வரலாற்றில் அதற் குச்சான்று கிடையாது. தியாக வாழ்வை மேற் கொண்டவர்கள்தான் நமக்கு தீர்க்கதரிசிகளாக இருந்துவந்திருக்கிறார்கள். தன்னை மிஞ்சியதும், ஆனால் தன்னுள்ளேயே வெகு ஆழத்திலிருப்பது மான தனது உண்மையை, மனிதனுடைய மேலான

இயல்பு எப்போதுமே நாடுகிறது. அந்த மேலான இயல்பு அவன் எல்லாத் தியாகங்களையும் மேற்கொள்ளுமாறு செய்கிறது. அத்தியாகங்களையே, அத்தியாகங்களின் பயனாகவும் செய்கிறது. இதுவே மனிதனுடைய தர்மம்; மனிதனுடைய மதம். நமக்குள்ளேயிருக்கும் 'நான்' எனும் உயிர்த்துடிப்பு, இத்தியாகத்தை பலிபீடத்திற்கு ஏந்திச் செல்கின்ற கிண்ணம் ஆகும்.

நம்முடைய 'நான்' எனும் உயிர்த்துடிப்புக்கு இரண்டு தோற்றங்கள் உண்டு. ஒன்று தனது பெருமையைப் பகட்டுகிற ஆணவம். மற்றொன்று தனது குறுகிய வரம்புகளை மீறிச்சென்று, தனது உண்மையான நோக்கத்தை வெளிப்படுத்துகிற ஆன்மீகம். ஆணவம் தன் பெருமையைப் பகட்டுவதற்காக மிகப் பருமனாகப் பார்க்கிறது. உடைமைகளைப் பெருக்கிக் குவித்து அதன்மேல் ஓங்கிநிற்க முயலுகிறது. எல்லாவற்றையும் தனதுரிமையாக்கிக்கொள்ளப் பாடுபடுகிறது. தனது உண்மையான தன்மையை வெளிப்படுத்துகையில், தனது உடைமைகள் யாவற்றையும் அது துறந்துவிடுகிறது. இதழ் விரிந்த மலர், தனது எழிற் கிண்ணத்திலிருந்து, தனது இனிமை யாவற்றையும் சொரிவது போன்று, தனது ஆன்ம சொரூபத்தை எய்திய 'நான்' எனும் உயிர்த்துடிப்பும் பூரணம் அடைகிறது.

விளக்கு தன்னுள் எண்ணெயை வைத்துக் கொண்டிருக்கிறது. எண்ணெயை இறுகப் பற்றிப் பத்திரமாக வைத்துக்கொண்டு சிறிதும் நஷ்டம் வராமல் பார்த்துக்கொள்கிறது. இவ்விதமாக,

சூழ்ந்துள்ள பிறபொருள்களிலிருந்து தன்னை அலாதியாகப் பிரித்து வைத்துக்கொள்கிறது. அது கருமித்தனம் செய்கிறது. ஆனால் விளக்கேற்றிய உடனே அது தனது கடமையை உணர்கிறது. அதற்கும் அதைச்சுற்றிப் பக்கத்திலோ தூரத்திலோ உள்ள பொருள்களுக்கும் உறவுண்டாகி விடுகிறது. விளக்கு கொழுந்துவிட்டெரிவதற்காகத் தன்னிடமுள்ள எண்ணெயைத் தாராளமாகத் தியாகம் பண்ணுகிறது.

நம்முடைய "நான்" இதைப்போன்ற ஒரு விளக்கு ஆகும். எவ்வளவு காலம் இது தனது உடைமைகளை விடாது பற்றிக்கொண்டிருக்கிறதோ அவ்வளவு காலம் அது இருளிலிருக்கிறது. தனது உண்மையான நோக்கத்திற்கு மாருக அதன் நடத்தையிருக்கின்றது. அந்த விளக்கு ஒளியைக் கண்டவுடன், அந்த நொடியிலேயே தன்னை மறந்து ஒளியை உயரத் தூக்கிப் பிடித்துத் தன்னிடமுள்ள யாவற்றையும் அதற்கே ஈந்து பணி செய்கிறது. இக்காரியத்தின் மூலமாகவே அது தன் உண்மைச் சொருபத்தை வெளிப்படுத்துகிறது. புத்தன் கூறிய சுதந்தரமும் இதுவேயாம்.

தன்னிடமுள்ள எண்ணெய் முழுவதையும் துறந்துவிடுமாறு விளக்குக்குக் கூறினன் புத்தன். உயர்ந்த நோக்கத்திற்காகவே யன்றி ஊதாரித்தனமாகத் தன் உடைமைகளைத் துறக்கும்படி அவன் கூறியிருக்க முடியாது. அப்படிச் செய்தால் அது மேலும் அவனை அதிக இருளில் புகுத்திவிடும். விளக்கு தன்னிடமுள்ள எண்ணெயை, ஒளியை உண்டாக்குவதற்காகக் கொடுக்க வேண்டும்.

இதுவே விடுதலை; இதுவே முத்தி. தன்னல மறுப்பைக் கடைப்பிடிப்பது மட்டுமின்றி அன்பை விரிவாக்க வேண்டுமென்பதுவே புத்தன் காட்டிய வழி. புத்த போதனையின் உண்மையான அர்த்தம் இதுவேதான்.

அன்பு மூலமாக நிர்வாண நிலையை அடையச் சொன்னான் புத்தன். அப்படியானால் அன்புகனிந்த நிலையைத்தான் அவன் நிர்வாணம் என்று கூறியிருக்க வேண்டுமென்பது தெளிவு. அன்பின் பயன் அன்பே. பிற காரியங்களெல்லாம் நம் மனத்தில் "ஏன்" என்ற கேள்வியை எழுப்புகின்றன. அக்காரியங்களைச் செய்யவேண்டிய காரணம் என்ன என்பதை அறிய முற்படுகிறோம். ஆனால் "நான் அன்பு கொள்கிறேன்" என்றால் அங்கே "ஏன்" என்ற கேள்விக்கு இடமில்லை. அதுவே அதற்கு இறுதியான விடையாக இருக்கிறது.

தனது பொருள்களைத் துறக்கும்படியாகச் சுய நலமும் கூடத் தூண்டுகிறது. இதில் சந்தேக மில்லை. ஆனால் சுயநலமியோ கட்டாயத்தின்பேரில் துறக்கிறான். அது மரத்திலிருந்து காயைப் பறிப்பதுபோலாகும். மரத்தை வளைத்துக் கிளையை ஒடிக்க வேண்டும். ஆனால் மனிதன் அன்பு கொள்ளும்போது, ஈவது உவகையளிக்கிறது; இது, மரம் கனிதருவதைப் போன்றது. நம்மிடமுள்ள பொருள்களை நாம் இடைவிடாது விரும்புகிறோம். நாம் விரும்ப விரும்ப அவை கனத்து நமக்குச் சுமையாகி விடுகின்றன. பிறகு அவைகளைத் தூர எறிவது நமக்கு கஷ்டமாகிவிடுகிறது. அப்பொருள்கள் நம்மோடு ஒட்டியவையோ என்று நினைக்கும்

படியாகி நம்மோடு சேர்ந்து விடுகின்றன. அவை நம்முடைய தோலோடு தோலாய் ஒட்டிக்கொள் கின்றன. அவைகளைப் பிரிக்கும்போது நம்முடலி லிருந்து இரத்தம் சொட்டுகிறது. ஆனால் நாம் அன்பின் வசமானபோது அதன் சக்தி எதிர்த் திசையில் இயங்க ஆரம்பிக்கிறது. நம்மோடு ஒட் டிக்கொண்டிருந்த பொருள்களின் பிடிப்பு தளர் கின்றது. அவை தம் கனத்தை இழக்கின்றன. அவை நமதல்ல என்பதைக் காண்கிறோம். பொருள் களைக் கொடுப்பதால் நஷ்டமில்லை யென்பதுமட்டு மின்றி, நம்முடைய உண்மையான இயல்பு அப் பொழுதுதான் நிறைவெய்துகிற தென்பதையும் காண்கிறோம்.

பூரண அன்பில்தான் நமது உயிர் சுதந்தரம் அடைகிறது. அன்பினால் செய்யப்பட்ட காரியம் எவ்வளவு வருத்தத்தைக் கொடுத்தாலும், அதுவே சுதந்தரமாகச் செய்யப்பட்டதாகும். அன்போடு உழைப்பதே, சுதந்தரமாக உழைப்பதாகும். கீதை யில் கூறப்பட்ட பற்றற்ற கர்மம் என்பதன் பொரு ளும் இதுதான்.

நமக்குத் தொழில் வேண்டும்; தொழிலில்தான் நாம் நமது இயற்கையை வெளிப்படுத்த முடியு மென்று கீதை கூறுகிறது. நம்முடைய தொழில் சுதந்தரமாக இல்லாதபோது அத்தொழிலில் நமது உண்மையான இயல்பு வெளிப்படாது. உண்மை யாக, கட்டாயத்தினாலோ, பயத்தினாலோ செய்யப் படும் வேலையினால் நமது உண்மையியல்பு மேலும் இருளடைகிறது. தன்னுடைய குழந்தைகளுக்குச் சேவை செய்கிற தாய், தன் சேவையின் மூலம் தன்

இயல்பை வெளிப்படுத்துகிருள். ஆகவே நமது உண்மையான விடுதலே தொழிலிலிருந்து விடுபடுவதல்ல; சுதந்தரமாகத் தொழில் செய்வதே உண்மையான விடுதலே. அன்போடு செய்யும் தொழிலாலே இவ் விடுதலேயைப் பெறலாம்.

கடவுள், படைப்பின் மூலம் தன்னே வெளிப்படுத்துகிருன். "அறிவு, ஆற்றல், தொழில் ஆகியவை அவனது தன்மை" என்று உபநிஷதம் கூறுகிறது. எங்கோ வெளியிலிருந்து அவன்மீது இவை சுமத்தப்படவில்லே. ஆகவே அவனுடைய தொழிலே அவனது விடுதலே ஆகும். தன் படைப்பில் அவன் தன்னே உணர்கிருன். இதையே வேருேர் இடத்தில் வேறுவகையில் சொல்லப்பட்டிருக்கிறது. "ஆனந்தத்திலிருந்து எல்லாப் படைப்பும் தோன்றியிருக்கிறது. ஆனந்தத்திஞல் நிலே நிறுத்தப் பட்டிருக்கிறது. ஆனந்தத்தை நோக்கிச் செல்கிறது; ஆனந்தத்தில் புகுகிறது." கடவுளின் படைப்பு எந்த அவசியத்திலிருந்தும் தோன்றவில்லே. அவனது ஆனந்த நிறைவிலிருந்து அது வெளிப்படுகிறது. அவனுடைய அன்பே படைக்கிறது. அவனுடைய படைப்பே, அவனே வெளிப்படுத்துகிறது.

ஒரு கலேஞனிடத்தில் பூரணமான ஒரு கருத்து தோன்றிவிட்டால் அவன் மகிழ்ச்சி பொங்குவான். பொங்கிய மகிழ்ச்சியில் அக்கருத்துக்கு உருவம் கொடுத்து தன்னிடமிருந்து அதை அப்புறப்படுத்தி வைப்பான். இதன் மூலம் அவன் தன் கருத்தை மேலும் பன்மடங்கு முழுமையுறப் பெறுகிருன். ஆனந்தம் நம்மிலிருந்து நம்மைப் பிட்டுவைக்கிறது.

அதற்கு அன்பினுல் உருவங்களைப் படைக்கின்றது. அதை முழுவதையும் நமதாக்குவதற்கே இவ்வளவும் செய்கின்றது. ஆகையினுல் இந்தப் பிரிவு தேவை. இது வெறுப்பினுல் ஏற்பட்ட பிரிவு அல்ல; அன்பினுல் ஏற்பட்ட பிரிவு. வெறுப்புக்கு ஒரு அம்சம்தானுண்டு. அது பிரிதல். அன்பில் இரண்டு அம்சங்களிருக்கின்றன. ஒன்று பிரிதல். இது வெறும் தோற்றம் மாத்திரம். மற்ருெரு அம்சம் கூடுதல்: இது அதன் இறுதியான உண்மை. தகப்பன் தன் பிள்ளையைப் பந்துபோல மேலே தூக்கியெறிந்து பிடிக்கிறதுபோது, வேண்டாமென்று எறிவதுபோலத் தோன்றும். ஆனுல் உண்மை அதற்கு நேர்மாறல்லவா?

நானென்னும் உயிர்த் துடிப்பின் இலட்சியம், கடவுளிடத்திலிருந்தோ அல்லது பிறரிடமிருந்தோ பிரிந்து நீங்குவதில் இல்லை. இடையருது யோகத்தை உணருவதில் அதாவது ஒன்றுபடுவதில் அதன் இலட்சியம் நிறைவேறுகிறது. திரையின் இலட்சியம், திரையில் படம் வரையப்பட்ட பக்கத்திலிருக்கிறதே யொழிய வரையப்படாத பக்கத்தில் இல்லை.

நமது "நான்" பிற யாவற்றிலிருந்தும் பிரிந்திருப்பது போன்றதோர் தோற்றம் கொண்டிருக்கிறதே, அத்தோற்றத்தை 'மாயை' என்று நமது தத்துவ ஞானிகள் வருணித்தார்கள். அது வெறும் தோற்றம். அதற்கு உண்மையான தன்மை யாதொன்றுங் கிடையாது. மாயையான பிரிவு பார்ப்பதற்கு ஆபத்து நிறைந்ததாக இருக்கிறது. எதிலும் ஒட்டாத தன்மையையும் தனது பிரிவை

யும், தலை கிறுகிறுக்கும்படியான உயரத்திற்குக் கொண்டு சென்று வாழ்வில் கரிய இருளை அது பரப்புகிறது. வெளியிலிருந்து பார்த்தால் படைப் பின் முழுமையிலிருந்து பெரிய கலக நாசங்களைச் செய்துவிட்டுப் பிரிந்து கொண்டதுபோன்று தென் படுகிறது. அது அகம்பாவமாக அதிகாரம் பண் ணிக்கொண்டு மனம் போனபடி நடந்துகொள் கின்றது. அது தன்னுடைய நொடிப்பொழுது இன்ப சுகத்திற்காக உலகச் செல்வத்தையே கொள்ளையடிக்கத் தயாராக இருக்கின்றது. அது அழகு என்னும் தெய்வப் பறவையின் இறகுகளை தனது மூர்க்கக் கைகளினால் பிடுங்கி ஒருநாட்பொழு துக்குத் தன்னை யலங்காரம் பண்ணத் தயாராக இருக்கிறது. மாயை, கீழ்ப்படியாமை என்ற நெற் றிப் பட்டத்தை என்றென்றும் அணிந்துகொண் டிருக்கிறதென்று மனிதனின் கதை கூறுகின்றது. இருந்தாலும் இது எல்லாம் வெறும் மாயை, அறி யாமையின் போர்வை. இது மூடுபனி, சூரியனல்ல; அன்பெனும் அக்கினிக்கு முன்னே புறப்படுகின்ற கரும்புகை.

ரூபாய் நோட்டில் ஏதோ மாயமந்திரம் இருக் கிறது. நோட்டு வைத்திருப்பவன் அந்த மந்திரம் வழியாகத் தனக்கு வேண்டியவற்றை யெல்லாம் பெற்றுக்கொள்கிறான் என்று ஒரு காட்டுமிராண்டி நினைக்கிறதாக வைத்துக்கொள்வோம். உடனே நோட்டுக்களைச் சேகரிக்கிறான்; ஒளித்து வைக்கிறான். பிறகு இப்படியும் அப்படியுமாக மடித்து, விரித்து, சுருட்டிக் கசக்கிப் பார்க்கிறான்; ஒன்றும் பலனில்லை. கடைசியில் சலிப்படைந்து,

"சரி இவைகள் ஒன்றுக்கும் உதவா; அடுப்பிலே போடுவதற்குத்தான் தகுதி' என்ற துக்ககரமான முடிவுக்கு வருகிருன். ஆனுல் அறிவுள்ளவன்; பாங்கி நோட்டு என்பது மாயை என்றும் அதைப் பாங்கியில் கொடுத்து மாற்றும் வரை அது மதிப் பற்றது என்றும் நன்கு அறிவான். உலகத்தி லுள்ள யாவற்றினின்றும் பிரிந்து " நான் " என்று தனியாகப் பிரிந்துநிற்பதுவே மிக உயர்ந்தது என்று நினைக்கும்படி செய்வது நமது அறியாமை. இந்த நம்பிக்கையில் காரியங்களை நடத்துவதால் நமது ' நான் ' எனும் உயிர்த்துடிப்புப் பயனற்று விடுகிறது. வெறும் பாங்கி நோட்டே எல்லாம் வல்லது என்று நினைப்பதைப் போன்றது இது. நமது 'அவித்தை' நீங்கியபொழுது நமது "நான்" விலைமதிப்பற்ற செல்வத்துடன் நம்மிடம் திரும்பி வருகிறது. "அழிவற்ற உருவங்களாக அவன் தோன்றுகிருன். அவனுடைய மகிழ்ச்சி இவ்வுரு வங்களாக உருவெடுத்தது." இந்த உருவங்கள் அவனிடமிருந்து பிரிந்திருக்கின்றன. அவனது மகிழ்ச்சி இவ்வுருவங்களிலும் மகிழ்ச்சியைக் கொடுத்து வைத்திருக்கின்றன. இதுவே அவை களின் மதிப்பு. பாங்கி நோட்டை பாங்கியில் மீண்டும் செலுத்தி மாற்றுவது போல இவ்வுருவங் களை அவைகளின் பூர்வீக மகிழ்ச்சியாக அதாவது அன்புமயமாக மாற்றவேண்டும். அப்போதுதான் நாம் அவைகளைப் பாங்கியில் மாற்றி அவைகளின் உண்மையான மதிப்பைக் காண முடியும்.

வெறும் அவசியம் காரணமாக ஒரு மனிதன் ஒரு காரியத்தைச் செய்கிருன் என்று வைத்துக்

கொள்வோம். அது காரணமற்றதாகவும் ஏதோ தற்சமயத்துக்குச் செய்துதீர வேண்டியதாகவும் தோன்றுகிறது. அது வெறும் சந்தர்ப்ப ஏற்பாடு. அவனுடைய அவசியம் வேறு திசையில் திரும்பி விட்டால் முந்திய காரியத்தை அப்படியப்படியே போட்டுவிட்டுப் போய்விடுவான். அப்படியில்லாமல் அவனுடைய காரியம் ஆனந்தப் பெருக்கில் உதிக்கு மானல், அது அமரத்துவம் பெற்றிருக்கும். ஆனந் தப்பெருக்கிலிருந்து தோன்றிய உருவங்கள் சாகாவரம் பெற்றவை. மனிதனிடமுள்ள சாகாப் பொருள் அவ்வுருவங்களுக்கும் நித்தியத்தைக் கொடுக்கின்றது.

நமது 'நானெ'னும் துடிப்பு இறைவனது மகிழ்ச்சியின் ஒரு அம்சம். ஆகவே அது இறப் பற்றது. இறைவனது மகிழ்ச்சி அமிருதமானது; அதாவது நித்தியமானது. சாவு என்பது நிச்சய மான விஷயமென்ருலும் அது உண்மைதான என்று சந்தேகிக்கும்படி செய்வது நம்முள்ளிருக்கும் இறைவன் மகிழ்ச்சி. சாவு உண்டு; ஆனுல் இல்லே யென்று நம்முள் உள்ள ஒன்று கூறுகிறது. நம்முள் இருக்கும் இம்முரண்பாட்டை நீக்க முயலு கையில் சாவுக்கும் வாழ்வுக்கும் இடையில் இணக்கம் உண்டு என்ற உண்மையைக் கண்டு கொள்கிருேம்.

ஆன்மவாழ்வு எல்லேயற்ற பொருளிலிருந்து தொடங்கிய தென்பதும், ஆனுல் அது வாழும் போது முடிவுள்ளதாகத் தோன்றுகிற தென்பதும் நாம் அறிவோம். இந்த ஆன்மவாழ்வு எல்லேயற்ற பொருளேப் போய்ச்சேருவதற்காக அது செய்யும் பிரயாணத்தில் சாவு என்ற வாசல்களேத் தாண்டிப்

போகவேண்டி யிருக்கிறது. சாவில் சாவு மட்டும் இருக்கிறது ; அதில் வாழ்வு இல்லை. ஆனால் வாழ்விலே வாழ்வும் இருக்கிறது. சாவும் இருக்கிறது. வாழ்வு என்பது உண்மையான விஷயம். சாவு அல்லது அழிவு என்பது வெறும் தோற்ற அளவிலுள்ள விஷயம். வெறும் தோற்ற அளவிலுள்ள அழிவு, வாழ்வின் இணைபிரியாத் தோழனாக இருக்கிறது. இதுவே மாயை. நமது 'நான்' உயிர் வாழவேண்டு மென்றால் இடைவிடாது மாறுதல் களைப்பெற வேண்டும். புதிய உருவங்களைப் பெற வேண்டும். இதையே வேறு வார்த்தைகளில் கூறினால் அது ஒரே சமயத்தில் தொடர்ச்சியாக வாழவும் வேண்டும், தொடர்ச்சியாகச் சாகவும் வேண்டும். உண்மையாக நாம் சாவை ஏற்றுக் கொள்ள மறுக்கும்போது அதே சாவைத்தான் நாடுகிறோம். நமது 'நானெ'னும் உணர்வுக்கு மாறுதலற்ற திட உருவத்தைத் தர முயலும் போதும், நமதுயிர் தன்னையுமீறி வளரவேண்டு மென்ற உணர்ச்சியற்றபோதும், நமது வரம்புகளே முடிவானவை அவைகளைவேறொன்றும் செய்வதற்கு இல்லை என்று கருதி நடக்கும்போதும், உண்மையில் நாம் சாவைத்தான் நாடிச்செல்கிறோம். அத்தகைய தருணத்தில் அச் சாவை மேற்கொள்ளுமாறு நமது தீர்க்கதரிசி நம்மைக் கூவி யழைக்கிறார். அழிவுக்கு அழைக்கவில்லை, நித்தியவாழ்வுக்கு அழைக்கிறார். விடியற்காலம் வந்ததும் விளக்கணைக்கிறோம். ஆனால் சூரியனை விலக்கமாட்டோம். நமது உள்ளத்தின் வெகு ஆழத்திலே உள்ள மேலான ஆசையை உணராது இருக்கிறோம். அதை அறிந்து

அதற்காகப் பாடுபடும்படி அழைக்கிருர் நமது தீர்க்கதரிசி.

நம்முள் இருக்கும் ஆசைகள் இரண்டு வரிசைகளாக இருக்கின்றன. அந்த இரண்டு வரிசைகளையும் நாம் சமரசப்படுத்தவேண்டும். ஒரு வரிசை நமது உடல் வாழ்வைப் பொறுத்தவை. இவைகள் யாவை என்பதை நாம் எப்போதும் தெரிந்திருக்கிருேம். நன்ருக உண்ணவேண்டும், குடிக்கவேண்டும் என்று ஆசைப்படுகிருேம். உடல் இன்பத்தையும் சுகத்தையும் கொள்ளையாக விரும்புகிருேம். இவ்வாசைகள் உடல் வாழ்வை வட்டமிடுபவை, உடலுறுப்புகளின் நுகர்ச்சிகளால் ஏற்படுபவை. நாக்கின் ஆசையைப் பெரும்பாலும் வயிறு அனுமதிக்கிறதில்லை. நாக்கின் ஆசைக்கு எதிரிடையாக இருக்கும் வயிற்றின் ஆசை. இன்னெரு வகை ஆசைகள் நம்முள் இருக்கின்றன. இவை நமது உடலின் மொத்த சுகத்தைப் பொறுத்தவை. இந்த ஆசைகளும் தம் காரியத்தைப் பார்த்துக் கொண்டேயிருக்கின்றன. அங்கங்கே ஏற்பட்ட குறைகளை நீக்குகின்றன. எதிர்பாராத புதிய விபத்து நேர்ந்தால் அதற்குரிய புது ஏற்பாடுகளைச் செய்கின்றன. எங்கெங்கே உடலில் கோளாறு ஏற்பட்டு மொத்த உடல் நலத்துக்குக் குந்தகம் உண்டாயிற்ருே அங்கங்கே சென்று திறமையாக நிலைமையைச் சீர்படுத்துகின்றன். அந்தந்த நிமிஷத்தில் தோன்றும் உடலாசைகளைப் பூர்த்தி செய்வதைப்பற்றி இவைகட்கு அக்கரையில்லை. இவை தற்சமயத்தைத் தாண்டிச் செல்லுகின்றன. நமது முழு உடல் வாழ்வைப்பற்றிய இந்த நிமிஷ

வாழ்வோடு, சென்ற காலத்தையும் வருங்காலத்தையும் இணைக்கின்றன. இவை வாழ்வின் பல பாகங்களுக்கிடையே ஒற்றுமையை நிலை நிறுத்துகின்றன. அறிஞன் இதை நன்கு அறிவான். தனது உடலாசைகள், இவ்வாசைகளோடு இணங்கிப் போகும்படி செய்வான்.

நமக்கு ஒரு பெரிய உடலிருக்கின்றது. அது சமுதாய உடல். சமுதாயம் ஒரு உடல். நாம் அதன் அங்கங்கள். நமது உடலுறுப்புகளுக்குத் தனி ஆசைகளிருப்பதுபோல சமுதாயத்தின் உறுப்புகளாயுள்ள நமக்கும் தனியாசைகளுண்டு. நாம் நம்முடைய இன்பத்தை அடைய விரும்புகிறோம். இஷ்டப்பட்டதைச் செய்ய விரும்புகிறோம். மற்றவர்களைக் காட்டிலும் குறையக் கொடுத்து நிறையப் பெற விரும்புகிறோம். இதனால் போட்டாபோட்டிகளும், சண்டைகளும் உண்டாகின்றன. ஆனால் அதே சமயத்தில் நமது சமுதாய வாழ்வின் ஆழத்தில் கிடக்கும் மற்றொரு ஆசையும் தன் வேலையைத் தொடங்குகிறது. அது என்ன? சமுதாயம் நன்றாக இருக்கவேண்டுமென்ற ஆசை. இந்த ஆசை இந்த நிமிஷத்தையும் தனி நபரையும் தாண்டிச் செல்லுகிறது. அது எல்லையற்ற பொருளைச் சேர்ந்த ஆசை.

அறிவுள்ளவன் தன் உடலின்ப ஆசைகள், சமுதாய நன்மையைக்கோரும் ஆசைகளை மீறாத வண்ணம் பார்த்துக்கொள்கிறான். இவ்விதமாக அவன் தனது உயர்ந்த தன்மையை உணர்கிறான்.

நமது உயிர் வரம்புள்ள தோற்றத்தைக் கொள்ளும்போது தான் 'தனி' என்றுணர்கிறது.

மற்ற எல்லோரைக் காட்டிலும் தனக்குத் தனிச் சிறப்பு வேண்டுமென்பதற்காக ஈவிரக்கமற்று முயன்று திரிகிறது. வரம்பற்ற தோற்றத்தை உணரும்போது, தன்னை, நிறைவுக்கு இட்டுச் செல்கிற இணக்கத்தை விரும்புகிறதே யொழிய தன் சொந்த இன்பங்களைப் பெருக்கிக்கொள்ள அது ஆசைப்படவில்லை.

நமது உடல் வாழ்க்கைக்கு விடுதலை யளிப்பது நோயற்ற நிலைமை. நமது சமுதாய வாழ்வுக்கு விடுதலை யளிப்பது நன்மை. 'நான்' எனும் துடிப் புக்கு விடுதலையளிப்பது அன்பு. கடைசியில் குறிப் பிட்டதைத்தான் புத்தன் 'அணைத்துவிடுதல் - சுய நலத்தை அணைத்து விடுதல்'என்று கூறியுள்ளான். இது அன்பினுடைய வேலை. இது நம்மை இருளுக்கு இட்டுச் செல்லவில்லை. ஒளிக்கு அழைத்துச் செல்கிறது. இதுதான் போதி அல்லது உண்மையான விழிப்பை அடைதல் எனப்படும். அன்பெனும் ஒளியின் உதவியால் நம்முள் இருக்கும் எல்லையற்ற ஆனந்தத்தைக் காண்பிப்பது இதுவே. நமதுயிர் தனித்த வாழ்க்கையோடு கூடிய தனது உயிர்ப் பருவத்தை வாழ்ந்து சென்று, ஒருமைப் பாடுள்ள ஆன்ம நிலையை அடையவேண்டும். இந்த ஒருமைப்பாட்டை வலுக்கட்டாயத்தினுல் எய்த முடியாது. அதே போன்றுதான் நமது இச் சையும். அது முதலில் சுதந்தரம் பெறும்; கலகம் பண்ணும்; இறுதியில் நிறைவைப் பெறும். நமக்கு அழிவுப் பக்கத்தைச் சேர்ந்த சுதந்தரம் அதாவது தீங்கு செய்துகொள்ளக்கூடிய சுதந்தரம் இருக்க வேண்டும்: அதற்கப்புறம்தான் ஆக்கவழியைச் சேர்ந்த சுதந்தரத்தை நாம் பெறமுடியும்.

சுதந்தரத்தின் அழிவுப்பக்கம், அதாவது தன் னிச்சைபோல நடக்கும் துணிவு இருக்கிறதே, இது நிறைவைப்பற்றிக் கவலைப்படாதிருக்கலாம். ஆனால் அது நிறைவோடு தனக்குள்ள தொடர்பை அறுத்துக்கொண்டு போய்விட முடியாது. அப் படிச் செய்தால் அது தன் வாழ்வுக்கு உலை வைத் துக்கொள்ளும். நம்முடைய சுயேச்சைக்கு ஓரளவுதான் சுதந்தரம் உண்டு; பாதையைவிட்டு விலகிப்போவது என்றால் என்ன என்பது அதற் குத் தெரியும். ஆனால் எப்பொழுதுமே அப்படிப் போய்க்கொண்டிருக்க முடியாதென்பதையும் அது அறியும். அழிவுப்பக்கத்தில் நாம் வரம்புள்ளவர் கள். தீமை செய்யும்போதும், அமைதிக்குலைவான காரியம் செய்யும்போதும் நாம் ஒரு முடிவை அடைகிறோம். தீமை எல்லையற்றதல்ல. அமைதிக் குலைவு ஒரு இலட்சியம் அல்ல. நமது இச்சைக்கு சுதந்தரம் உண்டு. நன்மையையும் அன்பையும் நாடிச் செல்வதே தன்னுடைய வழி என்பதை உணருவதற்காகவே அது சுதந்தரம் பெற்றிருக் கிறது. நன்மையும் அன்பும் எல்லையற்றவை. எல்லையற்ற பொருளில்தான் சுதந்தரத்தைப் பூரணமாக உணர முடியும். நமது இச்சை, நமது உயிரின் வரம்புகளுக்குள் தன் சுதந்தரத்தைக் காணமுடியாது. எங்கே நமது உயிர் மாயை யாகவும் இன்மையாகவும் இருக்கிறதோ அங்கு அது தன் சுதந்தரத்தைக் காணமுடியாது. ஆனால் எங்கே அது வரம்பற்று இருக்கிறதோ எங்கே உண்மையும் அன்பும் இருக்கிறதோ அங்கு அது தன் சுதந்தரத்தை அடைய முடியும். நமது சுதந்தரமும் சுதந்தரவிதிகளை மீறிச் செல்ல முடி

யாது. சென்றால் பிறகு அது சுதந்தரமாக இருக்க முடியாது. தற்கொலை செய்துகொண்டு உயிரோடிருக்க முடியாது. நம்மைத் தளைப்படுத்துவதற்கு நமக்கு எல்லையற்ற சுதந்தரம் இருக்க வேண்டுமென்று சொல்ல முடியாது. எப்போது தளைப்படுத்திக்கொண்டோமோ அப்போதே சுதந்தரம் முடிவடைந்துவிட்டது.

நமது இச்சைக்குள்ள சுதந்தரமும் இதைப் போன்றது. இதில் தோற்றமும் உண்மையும் இருக்கின்றன. நம்முடைய இச்சை சுதந்தரத்தின் தோற்றத்தைக் கொண்டிருக்கிறது. அன்பு அதன் உண்மை. உண்மையிலிருந்து தோற்றத்தைப் பிரிக்க முயலும்போது நம்முடைய முயற்சி துன்பத்திலும் தோல்வியிலும் முடிகிறது. எல்லாப் பொருளும், மாயை சத்தியம், தோற்றம் உண்மை, என்ற இருமையைப் பெற்றிருக்கின்றன. வெறும் ஒலிகளாகவும், வரம்புள்ளனவாகவும் இருக்கும்போது சொற்கள் மாயையாக இருக்கின்றன. அவைகள் கருத்துக்களாகவும் வரம்பிலிகளாகவும் இருக்கும் போது அவை உண்மையாகின்றன. நம்முயிர் 'நானெ'ன்ற தனிப் பண்போடு வரம்புள்ளதாய் இருக்கும்போது அது மாயையாகிறது. எங்கும் நிறைந்த எல்லையற்ற பொருளில் தன்னைக் காணும் போது-பரமாத்மனில் தன்னைக்காணும்போது, அது உண்மைப் பொருளாகிறது. " ஆபிரகாமுக்கு முன்னால் நானிருந்தேன் " என்று கிறிஸ்துநாதர் கூறுவதும் இதைத்தான். இப்பொழுது என்னுளிருக்கும் " நான் " என்பதன் மூலமாக நித்தியமான "நான்" இவ்வாறு கூறுகிறது. தனி நபராக இருக்கிற

"நான்" நித்தியமாக இருக்கிற "நானோடு" தன்னுடைய ஒருமைப்பாட்டையும் தன் சுதந்தரத்தையும் உணரும்போது அது தனது நிறைவைப் பெறுகிறது. இதுவே முத்தி· அவித்தை அல்லது அறியாமை காரணமாக எழுந்த மாயை அல்லது வெறும் தோற்றத்தின் தளையிலிருந்து விடுதலை கிடைக்கிறது. சாந்தம், சிவம், அத்வைதத்தில் தன் சுதந்தரத்தை அடைகிறது. உண்மையில் முழு அமைதியையும், நன்மையில் முழுத் தொழிலையும், அன்பில் முழு ஒற்றுமையையும் காண்கிறது.

கடவுளிடமிருந்து பிரிந்து நிற்கும் தன்மையை, மாயை என்று நமது தத்துவ ஞானிகள் கூறிய நிலைமையை, நமதுயிர்மட்டும் கொண்டிருக்கவில்லை. இயற்கையிலும் இது காணப்படுகிறது. இந்தப்பிரிவு தனியான உண்மையல்ல; புறத்தே நின்று கடவுளுடைய எல்லையின்மையை இது கட்டுப்படுத்தி விடவில்லை. கடவுளது இச்சையும்கூட தன் மீது வரம்புகளைப் ஏற்படுத்திக்கொண்டிருக்கிறது. சொக்கட்டான் ஆடுகிறவன், காய்களை நகர்த்தும் போது தனது இச்சையைக் கட்டுப்படுத்திக் கொள்வது போல, ஒவ்வொரு காயையும் ஒவ்வொரு இடத்தில் வைத்திருப்பதற்கு இணங்குகிறான். இந்தக்கட்டுப்பாட்டினால் ஆனந்தமடைகிறான். தன்னிஷ்டம் போல அவனால் காய்களை நகர்த்தமுடியாதென்று கூறமுடியாது; நகர்த்தலாம். ஆனால் அதில் விளையாட்டில்லாமல் போகிறது. கடவுள் தனது சர்வ வல்லமையைக் காட்ட முயன்றால் அவனுடைய படைப்புக்கு முடிவு வந்துவிடுகிறது. அவனுடைய சக்திக்கு அர்த்தமில்லாமல் போகிறது. சக்தியும்

சக்தியாக இயங்குவதற்குச் சில வரம்புகள் இருக்க வேண்டும். அவனுடைய மண் மண்ணற்ற வேறு பொருளாகப் போய்விடக்கூடாது. நீரையும் மண்ணையும் உண்டாக்கிய சட்டம் அவனுடைய சட்டம். அவன் தன்னுடைய சட்டத்தினுல் விளையாடுபவனையும் விளையாட்டையும் பிரித்துவைத்திருக்கிருன். அந்தப்பிரிவில்தான் ஆட்டக்காரனின் மகிழ்ச்சி நிலவுகிறது.

சட்டத்தின் வரம்புகளால் கடவுளிடமிருந்து இயற்கை பிரிக்கப்பட்டிருப்பதைப்போல, ஆணவத்தின் எல்லைகள் உயிரைக் கடவுளிடமிருந்து பிரிக்கின்றன. இறைவன் தனது இச்சையை வரம்புக்குட்படுத்தி நம்முடைய சின்ன உலகத்திலே நமக்கு முழு அதிகாரம் கொடுத்திருக்கிருன். தகப்பன் தன் சொத்திலே ஒரு பகுதியை மகனுக்கொதுக்கி வைத்து அதற்குள் அவன் என்ன வேண்டுமென்ருலும் செய்யும்படி விட்டு விடுவதைப் போன்றது. இதுவும் தன்னுடைய சொத்தில் ஒரு பகுதியாக இருப்பினும் அதைத் தன்னுடைய அதிகாரத்திலிருந்து விடுபடச்செய்கிருன். இவனுடைய இச்சை அன்பினுலெழுந்த இச்சை; ஆகவே சுதந்தரமானது. ஒரு சுதந்தர இச்சை இன்னெரு சுதந்தர இச்சையோடு ஒன்று படுவதன் வழியாகவே ஆனந்தம் கொள்ளமுடியும். கொடுங்கோலனுக்கு அடிமைகள் வேண்டும். தனது நோக்கங்களை நிறைவேற்றும் கருவிகளாக அவர்களைக் கருதுகிருன். அடிமைகள் சுதந்தரமாகத் தம்மிச்சைப்படி நடப்பதை ஒடுக்குவது தனக்கவசியமென்று நினைக்கிருன். அப்பொழுதுதான் தன்னுடைய நன்மை

களுக்கு ஆபத்திராது என்றும் நினைக்கிறான். கொடுங்கோலனுடைய சுயநலம் பிறரிடம் சுதந்தரம் இருப்பதைக்காணச் சிறிதும் சகிக்காது. ஏனெனில் அவனுடைய சுயநலமும் சுதந்தரமாக இல்லை. உண்மையில் கொடுங்கோலன் தனது அடிமைகளை நம்பிக்கொண்டிருக்கிறான். அவர்களைத் தனது இச்சைக்கு அடிமையாக்கி தனக்கு முழுதும் உபயோகமுள்ளவர்களாக்க முயலுகிறான். ஆனால் அன்பன், தனது அன்பை உணருவதற்கு இரண்டு வித இச்சைகள் உள்ளவனாக இருக்கவேண்டி யிருக்கிறது. அன்பு இணக்கத்தில் நிறைவு பெறுகிறது. சுதந்தரத்துக்கும் சுதந்திரத்துக்கும் இடையிலுள்ள இணக்கத்தில் அன்பு பூரண மடைகிறது. கடவுளின் அன்பிலிருந்து நமது உயிர் உருப்பெற்றிருக்கிறது. அவ்வன்பே நம் உயிரைக் கடவுளிடமிருந்து பிரித்து வைத்திருக்கிறது. கடவுளின் அன்பே பிரிவின் மூலம் நம்முயிருக்கும் கடவுளுக்கும் இடையில் சமாதானத்தையும் ஒற்றுமையையும் உண்டாக்கு கிறது. இதனால்தான் நமதுயிர் எண்ணற்ற தடவைகள் புதுப்பிக்கப்பட வேண்டியிருக்கிறது. அதனுடைய பிரிவு நெடுநாள் நீடிக்கமுடியாது. பிரிவு முடிவுடையது. பிரிவுப்பாதையில் சென்ற உயிர் அப்பாதையிலுள்ள தடைச்சுவர்கள் வரை சென்று மீண்டும் மீண்டும் தனது எல்லையற்ற பிறப்பிடத்துக்குச் செல்கிறது. நமது உயிர் தனது அழியாத இளமையை அடைவதற்காக இடை விடாது தனது முதுமையை உதறித்தள்ள வேண்டி யிருக்கிறது. மறதியிலும் சாவிலும் தன் வரம்புகளை விட்டொழிக்க வேண்டியிருக்கிறது. தனது தனித் தன்மையையும் தனி வாழ்வையும் புதுப்பித்துக்

கொள்வதற்காக மீண்டும் மீண்டும் எங்கு நிறை பொருளில் கலக்கவேண்டியிருக்கிறது. நித்திய மான சந்தவின்பத்தைப் பின்பற்றி அடிப்படையிலி ருக்கிற ஒற்றுமையை ஒவ்வொரு விஞடியும் தொட் டுக்கொண்டு தன்னுடைய பிரிவை அழகிலும் பலத் திலும் நிலை நிறுத்திச்செல்ல வேண்டியிருக்கிறது.

வாழ்வு சாவு எனும் இவ்விரண்டின் பழைமை யைப் புதுமையாக்கும் விளையாட்டை நாம் எங்கும் காண்கிறோம். ஒவ்வொரு காலையிலும் பகல் வரு கிறது. அம் மணமாகவும், வெண்மையாகவும், புது மலர் போல வருகிறது. ஆனால் அது கிழட்டுத் தனமான நாள் என்பது நமக்குத் தெரியும். கிழட் டுத்தனமேதான் அது. இந்த உலகம் பிறந்த புத்தடியில் அதைத் தன் கைகளில் வாரியெடுத்து ஒளியென்ற வெள்ளையாடையை அதற்குப்போர்த்தி நட்சத்திரங்களுக்கிடையே புண்ணிய யாத்திரை செய்யும்படி அனுப்பிவைத்த அந்தப் பழமையான நாள்தான் இது என்பது நமக்குத் தெரியும்.

இருப்பினும் அதன் கால்கள் களைப்படைய வில்லை. கண்கள் மங்கிவிடவில்லை. முதுமையற்ற நித்தியம் என்ற தங்கக் கவசத்தை அது அணிந் திருக்கிறது. அந்தக் கவசத்தைத் தொட்டவுடன் படைப்பின் முகத்திலுள்ள சுருக்கங்கள் மறைந்து விடுகின்றன. இவ்வுலக இதயத்தின் நடுவில் அழி விலா இளமை எழுந்தருளியிருக்கிறது. சாவும் வீழ்ச்சியும் ஒருகணம் அதன்மீது தம் நிழலை வீசி விட்டு அப்பால் செல்லுகின்றன. போகும் பாதை யில் அவை தம் அடிச்சுவட்டைப் பதிப்பதில்லை,

உண்மை யென்றென்றும் புதுமை எழிலோடும் இளமையோடும் இருக்கின்றது.

நமது பூமியைச் சேர்ந்த இந்தப் படுகிழட்டு நாள், திரும்பத்திரும்ப ஒவ்வொரு விடியற்காலமும் பிறக்கிறது. மீண்டும் பாட்டின் பல்லவிபோலத் திரும்புகிறது. அதன் பிரயாணம் முடிவற்ற நேர் கோடு போலச் சென்றுகொண்டேயிருக்குமானல், கும்மிருட்டில் மூழ்கிப்பயங்கரமான இளைப்பாறுதலைக் கொள்ளாவிட்டால், முடிவற்ற ஆரம்பமுடைய தன் வாழ்வில் திரும்பத்திரும்ப மறு பிறப்பை அடையா விட்டால், அது மெதுவாக உண்மையை மண்ணுக் கிக் குழிதோண்டிப் புதைத்துவிடும். தனது கன மான மிதியினால் மண்ணுலகமீதில் தொலையாத வேதனையை எங்கும் பரப்பிவிடும். அப்போது ஒவ் வொருவினாடியும் அலுப்பு என்ற சுமையை வைத்து விட்டுச் செல்லும். நித்தியக்குப்பை என்ற அதன் சிம்மாசனத்தில் குடுகுடு கிழட்டுத்தனம் அரசாட்சி செய்யும்.

ஆனால் ஒவ்வொரு விடியற்காலத்திலும் பகல் மீண்டும் பிறக்கிறது. புது மலர்களுக்கிடையே பழைய செய்தியைக் கொண்டுவருகிறது. சாவு நாள் தோறும் செத்துக்கொண்டே யிருக்கிறதென்றும், இரைச்சலிடும் அலைகள் மேற்பரப்பில் தானிருக்கிற தென்றும், அமைதியெனும் கடலின் ஆழத்தை அளவிட முடியாதென்றும் நமக்கு உறுதி கூறிக் கொண்டே வருகிறது. இரவென்ற திரை அகற் றப்படுகிறது. தனது ஆடையில் துளியளவுகூட தூசி இல்லாமலும் முகத்தில் சிறிதும் சுருக்கம் விழாமலும் உண்மை வெளிக்கிளம்புகிறது.

எல்லாவற்றுக்கும் முதலில் தோன்றியவன் என்றும்போல இன்றும் இருக்கிருன். படைப்பு என்ற பாட்டின் ஒவ்வொரு ஸ்வரமும் அவனது குரலிலிருந்து புதிதாகவே வருகிறது. வீடு வாச லற்ற நாடோடி போல ஆகாய வட்டத்தில் ஒரு மூலேயிலிருந்து மற்ருெரு மூலேக்கு எதிரொலித்துக் கொண்டிருக்கும் எதிரொலியல்ல நமது பிரபஞ்சம். உலகமும் பொருள்களும் பிறந்த அந்த மங்கலான ஆதி காலத்திலே பாடப்பட்டு பின்பு அநாதையாகக் கைவிடப்பட்ட பாட்டின் எதிரொலியல்ல இப்பிரபஞ் சம். ஒவ்வொரு விளுடியும் இது தலேவனுடைய இதயத்திலிருந்து வெளிவருகிறது; அவனது மூச்சி லிருந்து பிறக்கிறது.

ஒரு கருத்து கவிதையாக உருக்கொள்வது போலப் பிரபஞ்சம் ஆகாய முழுதும் பரவியிருக் கிறது. அதிகமாகிக்கொண்டிருக்கிற தன் கனத்தி ஞல் அது துண்டு துண்டாகச் சிதறிவிடாது ஆகையினுல்தான் முடிவற்ற வேறுபாடுகள் தோன்றி நம்மை வியக்கச் செய்வதையும், விளக்க முடியாதவைகள் தோன்றுவதையும், மனிதர்களின் இடையருத ஊர்வலத்தையும் பார்க்கிருேம். இவர் களில் ஒவ்வொருவருக்கும் படைப்பில் இணே கிடை யாது. இவ்வாறு ஆதி முதலிலிருந்து கடைசி வரையும் ஆரம்பம் முடிவின்றி வருகின்றது. இவ் வுலகம் எப்பொழுதும் முன்னேப் பழம்பொருளாக வும் பின்னேப் புதுப் பொருளாகவும் இருந்து கொண்டேயிருக்கிறது.

வாழ்வின் ஒவ்வொரு கணமும் தான் புதிதாகப் பிறக்கவேண்டுமென்பதை நமது உயிர் அறிந்து

கொள்ள வேண்டும். அதைக் கூட்டுக்குள் அடைத்து அதைக் கிழடாக்க முயலுகிற மாயை களேயும், சாவு என்னும் சுமைமையை அதன் மீது ஏற்றுகிற மாயைகளேயும் நம்முயிர் உடைத்தெரிய வேண்டும்.

வாழ்வு இறவாத இளமையுடையது. தன் போக்கைத் தடைப் படுத்துகின்ற கிழட்டுத் தனத்தை அற வெறுக்கிறது. உண்மையில் முதுமை என்பது வாழ்வைச் சேர்ந்ததல்ல. விளக் கைப் பின்தொடர்ந்து வரும் நிழலேப்போல முது மையும் வாழ்வைப் பின் தொடர்ந்து வருகிறது. ஆற்றைப்போல நமது வாழ்வும் கரைமோதுகிறது. கரைகளால் கட்டுண்டிருக்கிருேம் என்பதை அறி வதற்காகவல்ல. கடலே நோக்கிச் செல்ல நமக்குப் பாதை யிருக்கிறது என்பதைத் தெரிந்துகொள் வதற்கு வாழ்வாகிய ஆறு, கரைகளே முட்டுகிறது. பாட்டு, சீர்கள் உள்ளதாக இருக்கவேண்டுமென்ற நியதியினுல் அதன் போக்குத் தடைப்படவில்லே. இணக்கத்தின் இனிமையினுல் ஏற்பட்ட அந்தரங்க சுதந்தரத்தை ஒவ்வொரு கணமும் வெளியிடுவ தற்கு அச்சீர்கள் உதவுகின்றன.

ஒருபக்கம் ‘நான்’ தனி நபர் என்ற எண் ணத்தின் சுற்றுச் சுவர்கள் நம்மை நமது எல்லேக் குள் பிடித்துத் தள்ளுகின்றன. மற்ருெரு பக்கம் அவை நம்மை எல்லேயற்ற பொருளுக்கு இட்டுச் செல்லுகின்றன. இந்த எல்லேச் சுவர்கள் எல்லே யற்றவை என்று கருதும்போதுதான் உண்மை யில்லாத முரண்பாட்டுக்குள் தூக்கி யெறியப்படு

கிறேம், படுதோல்வியை எதிர்கொண்டு அழைக்கிறேம்.

மனித வரலாற்றில் பெரிய புரட்சிகள் ஏற்பட்டதற்குக் காரணம் இதுவே. எங்கெங்கு ஒரு அவசியம், முழுஉடலை வெறுத்து எதிர்த்து தனக்கென்று தனிப்பாதையை வகுத்துச் செல்ல முயலுகிறதோ அப்பொழுது உடலைச் சேர்ந்த பிற யாவும் சேர்ந்து அந்த உறுப்பைத் திடீரென்று திருகிப் பிரித்து அது மண்ணேடு மண்ணுகும்படி செய்துவிடுகின்றன. என்றென்றும் பாய்ந்து கொண்டிருக்கிற உலக சக்தியின் ஓட்டத்தை அணைபோட்டு நிறுத்தித் தன் சொந்தக் காரியத்துக்குத் திருப்பலாமென்று மனிதன் முயன்ருல் அது பெருந்துன்பத்தை விளைவிக்கிறது. ஒரு அரசன் எவ்வளவுதான் பலம் வாய்ந்தவனுக இருந்தாலும் சரி, வலிமை ஊற்ருன ஒற்றுமையை எதிர்த்துப் போராடமுடியாது. எதிர்த்தபின் வலுவுள்ளவனுக இருக்கமுடியாது.

"அநீதியால் மனிதர்கள் செழிப்படைகிருர்கள், விரும்பியதை அடைகிருர்கள், எதிரிகளை வெல்கிருர்கள், ஆனுல் முடிவில் அவர்கள் வாழ்வின் வேர் அறுக்கப்பட்டு நாசமாகிருர்கள்" என்று சொல்லப்பட்டிகிறது. மகாத்மா என்ற பெருமையை நாம் அடையவேண்டுமென்ருல் நமது வேர்கள் ஆழத்தில் சென்று எங்கும் நிறைபொருளோடு ஊன்றவேண்டும்.

எங்கும் நிறைபொருளோடு ஒன்றுபடுவதே நமது 'நானி'ன் முடிவு. அன்போடும், பணி

வோடும் தலைவணங்கி, பெரியோரும் சிறியோரும் ஒன்று சேருகிற இடத்தை அது சேரவேண்டும். அது தனது நஷ்டத்தினுல் இலாபத்தையும், சரணத்தினுல் உயர்வையும் பெறவேண்டும். குழந்தை விளையாடிக் கொண்டிருக்கிறது. விளையாட்டு முடிந்தவுடன் தாயினிடம் ஓடுகிறது. தாயினிடம் திரும்பப் போகவிடாத விளையாட்டு ஏதாவது ஒன்று இருக்குமானுல் அது குழந்தைக்குப் பயங்கரமான விளையாட்டாகத் தோன்றும். 'நான்' என்ற ஆணவத்தையும் அன்புக்காகத் துறக்க நாம் தயாராக இல்லாவிட்டால் அந்த ஆணவம் நம்மைச் சூழ்ந்த சாபம்தான். எல்லையற்ற பரம்பொருள் முடிவற்றுப் புதுமையோடும் நித்திய அழகோடும் நம்முள் விளங்குகிறது. அதுவே நமது 'நான்'; இதை நாம் அறிந்துகொள்ளவேண்டும்.

# அன்பு

ஒரே பொருள் எல்லையற்றதும் எல்லையுள்ளது மாக எப்படி ஒரே சமயத்தில் இருக்க முடியும்? அப்பொருள் இறைவனாகிய பரமாத்மாவாகவும் நம் முடைய ஜீவாத்மாவாகவும் ஒரே சமயத்தில் எப்படி யிருக்க முடியும்? என்ற நித்தியமான கேள்விகளைச் சற்றுக் கவனிப்போம். இக்கேள்வியிலுள்ள முரண் பாடு எல்லாவற்றையும் மிஞ்சியதாக இருக்கிறது. இது நமது வாழ்வின் அடிப்படையிலேயே இருப்ப தால் நாம் இதைமுழுவதும் சுற்றி ஆராயமுடியாது. வாழ்விலமைந்த இந்த முரண்பாட்டில் சிக்கியுள்ள நாம், இதைத் தாண்டிக் குதித்து வெளியிலிருந்து கொண்டு இது இப்படியிருக்குமா? அல்லது அப்படி யிருக்குமா? என்று சீர்தூக்கிப் பார்ப்பது எவ்வாறு இயலும்? ஆனால் சிக்கலான இக்கேள்வி வெறும் தர்க்க வாதத்தைச் சேர்ந்ததேதவிர உண்மையில் இது ஏதாவது சங்கடமளிக்கிறதா என்றால் இல்லை. ஒன்றுக்கொன்று அருகே இரண்டு புள்ளிகள் இருப் பதாக வைத்துக்கொள்வோம். அவைகளுக்கிடை யிலுள்ள தூரத்தை எண்ணற்ற தடவைகள் பிரிக் கலாமாகையால் அந்தத்தூரம் எல்லையற்றது என்று தர்க்க ரீதியாகப்பேசலாம். நாம் அடியெடுத்துவைக் கும் ஒவ்வொரு தடவையும் எல்லையற்ற பொருளைக் கடந்து செல்கிறோம். நித்தியப் பொருளை ஒவ்வொரு வினாடியும் சந்திக்கிறோம். ஆகையால் நமது ஞானி களுட் சிலர் முடிவு அல்லது எல்லை என்பதாக ஒன்

றில்லை என்று கூறுகிறார்கள். அது வெறும் மாயை அல்லது பொய்த் தோற்றம் என்றும் கூறுகிறார்கள். உண்மைப் பொருள் எல்லையற்றது. எல்லையுள்ள தாகக் காட்டுவது மாயை அல்லது பொய். மாயை என்பது வெறும் சொல்லே தவிர விஷயத்தை அது விளக்கவில்லை. உண்மையுடன், அதன் எதிரிடை யின் தோற்றமும் இருக்கிற தென்பதையே அது காட்டுகிறது. இவையிரண்டும் ஒரே சமயத்தில் எப்படி நிலவுகின்றன? என்பது அறிய வொண் ணாதது.

படைப்பில் சில எதிரிடைகள் இருக்கின்றன. சமஸ்கிருதத்தில் இதைத் துவந்துவம் என்று சொல்வதுண்டு. நேர் துருவம், எதிர்துருவம் நடு நோக்கிப்பாயும் சக்தி, நடுவிலிருந்து பாயும் சக்தி, இழுத்தல், விரட்டல் ஆகியவை அவைகளுட் சில. இவைகளும் வெறும் பெயர்களேயன்றி இவை எதை யும் விளக்குவனவல்ல. எதிர்ச் சக்திகளான இந்த இரட்டைகள் தம்முள் இணங்கி ஒத்துப்போகின் றன. எதிர்ச் சக்திகளின் இணக்கத்தினால்தான் உலகம் உண்டாக்கப் பட்டிருக்கிறது என்பதை இச் சொற்கள் வெவ்வேறு விதமாக உறுதிப்படுத்து கின்றன. படைக்கும் கடவுளின் வலக்கை, இடக் கைபோல இச்சக்திகள் முழுதும் இணைந்தொன்றாகி வேலை செய்கின்றன. ஆனால் அவை எதிர்த்திசை களிலிருந்து செயல்படுகின்றன.

நம்முடைய இரண்டு கண்களும் ஒன்றாக உழைக்கும்படிசெய்கின்ற ஒருவித ஒற்றுமை அவை களிடை இருக்கின்றது. அதுபோல ஜட உலகத் திலும், வெம்மை-குளிர்ச்சி, ஒளி-இருள், ஓட்டம்-

ஓய்வு ஆகியவைகளுக்கிடையே இடையருத உறவுத் தொடர்பு இருக்கின்றது. பியானே வாத்தியத்தில் மேல்கீழ் ஸ்தாயிகள் ஒன்றி இணைவதுபோல இவை ஒன்றி இணைகின்றன. இவைகளுக்கிடையே உறவு இருப்பதனுல்தான் இவ்வெதிரிடைகள் பிரபஞ்சத்தில் குழப்பத்தை உண்டு பண்ணுமல் இணக்கத்தை உண்டுபண்ணுகின்றன. தாறுமாறும் குழப்பமும் சேர்ந்துதான் படைப்பாகு மென்ருல் இவ்வெதிரிடைகளைப்பற்றி நாம் என்ன நினைக்க வேண்டியிருக்கும்? இருவித அடிப்படைத் தத்துவங்கள் ஒன்ரூேடொன்று மோதிக்கொள்கின்றன என்றே நினைக்க வேண்டியிருக்கும். ஆனுல் பிரபஞ்சம், சிறிது காலத்துக்கு நீடிக்கக்கூடிய எந்தக் கொடுமையான ராணுவ ஆளுகைக்கும் உட்பட்டிருக்கவில்லை. இங்கு எந்தச் சக்தியும் வெறியாட்டம் ஆடவில்லை; நாடுகடத்தப்பட்டவன்போல, தன்னைச் சுழ்ந்திருப்பவைகளோடு தனக்குள்ள இணக்கத்தை அறுத்துக்கொண்டு தன் போக்கிலேயே போகவில்லை.ஆனுல்,அதற்கு மாருகவே, ஒவ்வொரு சக்தியும் ஒரு சுற்றுச்சுற்றிவிட்டு மீண்டும் அமைதி நிலைக்கு வரவேண்டியதாக இருக்கிறது. அலைகள் கிளம்புகின்றன. ஒன்றுக்கொன்று சிறிதும் விட்டுக்கொடுக்காமல் போட்டியிடுவதுபோல ஒவ்வொன்றும் கிளம்புகிறது. ஆனுல் இப்போட்டி ஓரளவுக்குத்தான் நடைபெறுகிறது. கடல் இயல்பாகப் பெரிதும் அமைதி வாய்ந்தது. அவ்வமைதியோடு அலைகள் உறவுள்ளவை. அற்புதமான அழகுடைய சந்தயின்பத்தை ஏந்திக்கொண்டு அந்த அலைகள் அவ்வமைதியைப் போய்ச்சேரும் என்பதை நாம் அறிவோம்.

மிகவும் வித்தியாசமானபொருள்கள், யாதொரு ஒழுங்கும் இல்லாமல் ஏதோ தத்தம் போக்கினில் திருகல் முறுகல் பண்ணிக்கொண்டிருப்பதால் இந்த அலைவுகளும், துள்ளல்களும்,கிளம்பல்களும், வீழ்வு களும் ஏற்படுகின்றன என்று நினைக்க வேண்டாம். உண்மையில் இவை சந்த இன்பத்தோடு கூடிய நாட்டியமே யாகும். சண்டை போடுகிற மும்முரத் திலே கைகால்களை வீசுவதால் சந்தம் பிறந்து விடாது. சந்த இன்பத்தின் அடிப்படை உண்மை ஒற்றுமையேயன்றி எதிர்ப்பு அல்ல.

அடிப்படையில் ஒற்றுமையிருக்கிற தென்ற உண்மை, மர்மங்களில் எல்லாம் பெரிய மர்மமாக இருக்கிறது. எதிரிடையான இருமையிருக்கின் றதே அதற்கென்ன சொல்வது? என்ற கேள்வி மனத்தில் உதிக்கின்றது. எல்லாம் ஒன்று என்ற விடையில் சமாதானமடையப் பார்க்கிறோம். ஒன்று, பல என்பவற்றுக் கிடையிலுள்ள உறவைக் காணும் பொழுது, கடைசியில் எல்லாம் அடிப்படையில் ஒன்றுதான் என்பதைக் காணும் பொழுது, சரி, நாம் உண்மையை அடைந்து விட்டோம் என்பதை உணர்கிறோம். அப்பொழுது, ஒன்றே பலவாகத் தோன்றுகிறது. அத்தோற்றம் உண்மையானதல்ல, அது உண்மைக்கு மாறானது. இருந்தாலும் அது உண்மையை விட்டுப் பிரியாத தொடர்புடையது'' என்ற முரண்பாட்டை, திகைக்க வைக்கும் முரண்பாட்டை வெளியே சொல்கிறோம்.

இயற்கை எவ்வளவோ வேறுபாடுடையது, அடிப்படையில் அது ஒற்றுமை யென்ற விதிக்குக் கட்டுப்பட்டிருக்கிறது. வேற்றுமையில் ஒற்றுமை

யிருக்கிறது என்றால் அது பெரிய மர்மம் அல்லவா? ஒன்றும் விளங்காத மர்மம் அல்லவா நமக்கு இன்பங்களை அளிக்கிறது? இத்தகைய மர்மத்தைக் கண்டு வியப்படையாத மனிதர்களும் இருக்கிறார்களென்றால் அது பெரும் ஆச்சரியமாகவேயிருக்கிறது. "மரத்திலிருந்து பழம் விழுகிறதே, அதைக் காட்டிலும் பூமியின் இழுக்கும் சக்தி என்ன பெரிய மர்மமா? ஒவ்வொரு பிராணி வகையும் தனித்தனியாகத் தோன்றியது என்பதைக் காட்டிலும் உயிர் வகை படிப்படியாக இனம்மாறி உயர்ச்சி பெறுகிறது என்பது அப்படி ஒன்றும் விளங்காத விஷயம் இல்லையே" என்பதுபோல இவர்கள் கருதுகிறார்கள். நம்மிடமுள்ள குறை இதுதான். மரத்திலிருந்து ஏன் பழம் விழுகிறது என்று ஆராய்கிறோம். பூமிக்கு இழுக்கும் சக்தி உண்டு என்ற இயற்கை விதி நமக்குக் கிடைக்கிறது. உடனே சரி, நம்முடைய ஆராய்ச்சியின் இறுதிக் கட்டத்தையடைந்துவிட்டோம் என்று நினைத்து அங்கே நின்றுவிடுகிறோம். அந்த விதி நமது ஆன்மாவின் தளையை நீக்குகிற காரியத்தை இன்னும் தொடங்கக்கூட இல்லை என்பதை உணர்கிறோம். இந்த விதி நம்முடைய புலமைக்குக் கொஞ்சம் திருப்தி அளிக்கிறது. அவ்வளவுதான்; நம்முடைய முழு ஜீவனும் அதில் திருப்தியடைய ஏது இல்லை. ஆகையால் அவ்விதி, பரம்பொருளைப்பற்றி நாம் அடைய இருக்கும் அறிவைச் சாகடிக்கிறது.

உயர்ந்த ஒரு கவிதையை பகுத்துப்பார்த்தோமானால் அது தனித்தனி ஒலிகளின் கூட்டமாக இருப்பதைக் காணலாம். அப்பொருள் அவ்வொலி

களை ஒன்று கூட்டுகிறது. பாட்டின் பொருளைக் கவிதையில் உணருகிறவன், அப்பாட்டு முழுதும் ஒருவித விதிக்கு அடங்கி யிருப்பதையும், விதி சிறிதும் மீறப்படவில்லை யென்பதையும் காண்கிறான். கருத்துக்கள் வளரவேண்டிய விதியும் பாட்டின் அமைப்பு, பாட்டின் இசைபற்றிய விதியும் ஒழுங்காக அமைந்து இருப்பதைக் காண்கிறான்.

விதி என்பது ஒரு வரம்புதான். எது எப்படியிருக்கிறதோ அது அப்படித்தான் இருக்குமே தவிர வேறுமாதிரி இருக்கமுடியாது என்பதையே அவ்விதி காட்டுகிறது. காரணத்தைக் கண்டுபிடிப்பதில் மாத்திரம் ஈடுபடும்போது நிகழ்ச்சிகளின் பிடியிலிருந்து விடுபட்டு நிகழ்ச்சிகளின் காரணமாக இருக்கும் இயற்கை விதியின் பிடியிலகப்பட்டுக்கொள்கிறோம். நாம் ஒரு மொழியைப் படிக்கிறதாக வைத்துக்கொள்வோம். வெறும் சொற்களைத் தெரிந்த பிறகு சொற்களை ஆளும் விதியை அறிந்தோமானால் அதுவரையும் பெரிய முன்னேற்றம்தான். ஆனால் நாம் அதோடு நின்றுவிட்டால், அந்த மொழியின் அற்புத அமைப்பில் ஈடுபட்டுவிட்டோமானால், அம்மொழி அங்கங்கே தன் போக்கினில் மாறுபட்டிருப்பதற்குக் காரணத்தைக் கண்டுபிடிப்பதில் முனைந்துவிட்டோமானால் நாம் நமது இலட்சியத்தை அடையப் போவதில்லை. ஏனெனில் இலக்கணம் இலக்கியமாகாது, யாப்பு கவிதையாகாது.

இப்பொழுது இலக்கியத்தைப்பற்றிக் கவனிப்போம். இலக்கியம் இலக்கண விதிகளுக்குட்பட்டிருந்தாலும் ஆனந்தமளிக்கும் பொருளாகவும்

சுதந்தரமாகவும் இருக்கிறது. கவிதையின் அழகு கண்டிப்பான விதிகளால் கட்டுண்டிருக்கிறது. இருப்பினும் அவ்விதிகளை மீறியும் அது நிற்கிறது. விதிகள் அதன் இறக்கைகள்; அவை அதைக் கீழே அமுக்கும் சுமைகள் அல்ல. இறக்கைகள் அதைச் சுதந்தரத்துக்குக் கொண்டு செல்லுகின்றன. கவிதையின் உடல் இலக்கண விதியின் பிடிப்பிலிருக்கிறது. அதன் உயிர் அழகில் அமைந்திருக்கிறது. விதி சுதந்தரத்தின் முதற்படி. அழகு என்னும் பூரண விடுதலை, விதியென்ற பீடத்தின் மீது அமர்ந்திருக்கிறது. அழகு, தன்னிடத்தில், எல்லையையும் எல்லையற்றதையும், விதியையும், விடுதலையையும் இணக்கப்படுத்தி வைத்திருக்கிறது.

உலகம் ஒரு கவிதை. இதன் இலக்கண விதியைக் கண்டுபிடித்தலும், இதன் பெருக்கம், சுருக்கம், ஓட்டம், ஓய்வு முதலியவைகளை அளந்து பார்ப்பதும், இதன் அமைப்பு, தன்மைகள் எவ்வாறு வளர்கின்றன என்பதைக் கண்டுபிடித்தலும் ஆகிய காரியங்கள் மனித மனத்தின் அரிய சாதனைகளே. இருந்தாலும் நாம் அதோடு நின்றுவிட முடியாது. இதெல்லாம் ஒரு ரயில்வே ஸ்டேஷனைப் போன்றவை; ஸ்டேஷன் பிளாட்பாரம் நம்முடைய வீடாகாது. உலக முழுதும் ஆனந்தத்தினால் படைக்கப்பட்டிருக்கிறதென்பதை அறிகிறவனே முடிவான உண்மையை அடைந்தவன் ஆவான்.

இதைக் குறிப்பிடும்போது, மனித இதயம் இயற்கையோடு எந்தவிதமான அற்புத ரகசிய உறவைக் கொண்டிருக்கிறது என்பதை நான் நினைக்க ஆரம்பித்துவிடுகிறேன். வெளியிலே காணப்படும்

உலகத்தில் இயற்கை ஒரு தோற்றத்தைக் கொண் டிருக்கிறது. உள்ளே நம்முடைய இதயங்களில், அக உலகத்தில், அது முழுவதும் வேறுவிதமாகக் காட்சியளிக்கிறது.

உதாரணமாக ஒரு செடியிலுள்ள மலரை எடுத்துக்கொள்வோம். எவ்வளவு நேர்த்தியாகவும் அழகாகவும் அது தோன்றினாலும் ஒரு பெரிய சேவையைச் செய்யும்படியாக அது கட்டாயப்படுத் தப்படுகிறது. அதன் நிறங்களும் வடிவங்களும் அந்தச் சேவைக்கு ஏற்றவாறு அமைந்திருக்கின் றன. மலர் காயாகிப் பழமாக வேண்டும். இல்லை யேல் செடியின் சந்ததி அற்றுவிடும். பூமியும் வெகு விரைவில் பாலைவனமாகிவிடும். ஆகவே மலரின் நிறமும் மணமும் ஏதோ ஒரு நோக்கத்தை நிறைவேற்றுவதற்காகவே அமைந்திருக்கின்றன. தேனீயின் உதவியால் கருப்பெற்றுக் காய்க்கும் பரு வம் வந்தபோது மலர் தனது அழகு மிக்க இதழ் களை உதிர்க்கிறது. கடுமையான செட்டுக் காரண மாக மலர் தனது இனிய மணத்தைக் கைவிடு கிறது. தனது ஆடையலங்காரங்களைப் பகட்டுவ தற்கு அதற்கு நேரமில்லை; தலைக்கு மேலே வேலை கிடக்கிறது. வெளி நியதியைக்கொண்டு கவனிக் கும்போது அவசியம் என்பதொன்று இயற்கையி லிருக்கிறதென்றும் அது காரணமாகத்தான் ஒவ் வொன்றும் உழைக்கிறது, நகருகிறதென்றும் தெரி கிறது. அரும்பு மலராகி, மலர் காயாகி, காய் கனி யாகி, கனி விதையாகி, விதை மீண்டும் ஒரு புதுச் செடியாகிறது. இவ்விதமாக அதன் தொழில் இடையருது செல்கிறது. இதில் ஏதாவது சீர்

குலேவோ, தடங்கலோ ஏற்பட்டால், அதற்காக அச்செடிக்கு மன்னிப்பு கிடையாது. பாவம், முன் னேற்றம் தடைப்பட்ட அந்த அதிர்ஷ்டக்கட்டை யான செடி அப்பொழுதே வெளியேற்றப்பட்டு விடும். வெகு விரைவில் அச்செடி மாண்டு மறைய வேண்டியதுதான். இயற்கையின் அலுவலகத்தில் கணக்கற்ற இலாகாக்கள் இருக்கின்றன. அங்கு வேலே ஓய்வில்லாமல் நடந்துகொண்டிருக்கிறது. மேனுமினுக்கிபோல ஆடையலங்காரமும் வாசனே யும் தரித்த இந்த மலர் நமக்குத் தென்படுகிற மாதிரி அது உண்மையில் இல்லே. அதுவும் ஒரு உழைப்பாளியைப்போல வெயிலிலும் மழையிலும் கிடந்து உழைத்து தான் செய்த வேலேக்குக் கணக்கு ஒப்புவிக்க வேண்டும். சும்மா கொஞ்ச நேரம் விளேயாட்டாகப் பொழுதுபோக்க அதற்கு நேரம் கிடையாது.

சரி, இதே மலர் மனிதர்களின் மனத்தில் புகும் போது சுறுசுறுப்பும் உபயோகமுமுள்ள அதன் தோற்றம் மறைந்து விடுகிறது. வேலேயற்ற ஓய் வைக்குறிக்கும் அடையாளமாக அது ஆகிவிடு கிறது. வெளியில் ஓய்வொழிவில்லாத உழைப்பின் அவதாரமாக இருக்கின்ற அதே பொருள் உள்ளத் தில் அழகையும் சாந்தத்தையும் தெளிவாகக் காட் டும் பொருளாக இருக்கின்றது.

விஞ்ஞானம் குறுக்கிட்டு நம்முடைய தவற்றை எடுத்துக்காட்டுகிறது. வெளியுலகில் காண்பதே மலரின் வேலேயென்றும் அது நமக்கு அழகையும் மணத்தையும் தருகிற உறவு பூண்டிருக்கிறதென்று சொல்வதெல்லாம், நாம் தாராளமாகக் கற்பனே

செய்துகொள்வதென்றும் அது கூறுகிறது. ஆனால் நம்முடைய இதயமோ நாம் சிறிதும் தவறு செய்ய வில்லை என்று பதிலளிக்கிறது. இயற்கை வட்டாரத்தில் அது கொண்டுசெல்லும் தகுதிக்கடிதம், அம்மலர் பயனுள்ள வேலையைச் செய்யக்கூடிய சக்தி மிகுதியும் வாய்ந்ததென்று கூறுகிறது. நம்முடைய இதயங்களின்கதவைத்தட்டும்போது நமக்கு அம்மலர் வேறுவிதமான அறிமுகக் கடிதத்தைக் கொண்டு வருகிறது. இதயங்களில் நுழைவதற்கு அழகுதான் அதன் ஒரே தகுதி. ஓர் இடத்தில் அம்மலர் அடிமையாக வருகிறது. மற்றோர் இடத்தில் அது ஒரு சுதந்தரப்பொருளாக வருகிறது. இவ்வாறு இருக்கையில் அதன் முதல் சிபார்சை மாத்திரம் நம்பி இரண்டாவது கடிதத்தை நாம் எப்படி நம்பாமலிருப்பது? இடையறாத காரண காரியத் தொடர்ச்சியில் மலர் தன் வாழ்வைப் பெற்றிருக்கிற தென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால் அது புற உண்மை. என்றுமுள்ள ஆனந்தத்திலிருந்தே எல்லாப் பொருள்களும் பிறந்திருக்கின்றன என்பது அக உண்மை.

ஆகவே ஒரு மலருக்கு வெளி இயற்கையில் மாத்திரம் வேலையிருக்கிற தென்பதில்லை. மனிதனுடைய மனத்தினுள்ளும் அது நிகழ்த்தவேண்டிய வேலை யொன்று இருக்கிறது. அது என்ன வேலை? வெளி இயற்கையில் அது ஒரு பணியாள் போல குறிப்பிட்ட காலத்தில் தோன்றவேண்டும். மனித மனத்திலே அரச தூதனைப்போல அது வருகிறது. இராமாயணத்துக்கு வருவோம். சீதை தன் கணவனிடமிருந்து பலவந்தமாகப் பிரிக்கப்பட்ட பொழுது

இராவணனுடைய பொன் அரண்மனையிலிருந்தபடி தனக்கு நேர்ந்த கொடும் விதியை நொந்துகொண் டிருந்தாள். அப்போது ஒரு தூதன் தோன்றி அவளுடைய காதலன் இராமச்சந்திரனிடமிருந்து ஒரு கணையாழியைக் கொண்டுவந்தான். கணை யாழியைக்கண்டதுமே அவன் சொல்வது உண்மை யென்று நினைத்தாள், அவன் தன் காதலனிட மிருந்து தான் வந்திருக்கிறனென்பதும், இராமன் தன்னை மறக்கவில்லையென்பதும், தன்னை விடுவிக்க வெகு விரைவில் வருவான் என்பதும் அவளுக்கு உறுதியாயிற்று.

ஒவ்வொரு மலரும் நம்முடைய பெரிய காதல னிடமிருந்துவந்த இத்தகைய ஒரு தூதனாகும். உலக வாழ்வின் தடபுடல்களும் மனோகரக்காட்சி களும் நம்மைச்சூழ்ந்து நின்று இராவணனுடைய பொன்னகரம்போலக் காட்சியளிக்கின்றன. எனினும் நாம் இங்கு நாடு கடத்தப்பட்டு வாழ் கிறோம். உலகவாழ்வின் செழுமைத்திமிர் ஆசை காட்டி மயக்கி நம்மை அதன் காதலியாக்கப் பார்க் கிறது. இதற்கிடையில் மலர் அக்கரையிலிருந்து செய்தியைக் கொண்டுவருகிறது. நம்முடைய காதோடணைத்து மெதுவாக "நான் வந்துவிட்டேன். அவர் என்னை அனுப்பினர். நான் அழகனின் தூதன். காதல் அன்பின் ஆனந்தமே, அவருடைய ஆன்மா, இந்த ஒதுக்கமான தீவுக்கு அவர் பாலம் போட்டு விட்டார். அவர் உன்னை மறக்கவில்லை. இப்பொழுதே உன்னை அவர் சிறை மீட்பார். உன்னைத் தன்னிடமே வரவழைத்து உன்னைத் தனதாக்கிக்கொள்வார். இந்த மாயை உன்னை

எப்பொழுதும் அடிமையாக்கி வைத்திராது '' என்று அம்மலர் கூறுகிறது.

அப்பொழுது விழித்துக்கொண்டிருந்தால் நாம் அவனைக் கேட்கிறோம், ''ஏனப்பா நீ அவரிடமிருந்து தான் வருகிறாய் என்பதை நாங்கள் எப்படித் தெரிந்து கொள்வது ?" தூதன் சொல்கிறான். ''பாருங்கள் ! இதோ அவரிடமிருந்து நான் கொண்டுவந்திருக்கும் கணையாழி".அதன் வண்ணங் களும் வனப்புக்களும் என்ன ரம்மியமாக இருக்கின்றன !

ஆம் சந்தேகமில்லாமல் இது அவருடையதே- நம்முடைய திருமணக்கணையாழி. இப்பொழுது நாம் மற்ற எல்லாவற்றையும் மறந்து விடுகிறோம். நித்தி யமான அன்பு நம்மைத் தொடுகிறது என்பதைக் காட்டுகிற இனிய அடையாளமான கணையாழி நம் முள்ளத்தில் காதலை நிரப்புகிறது. நாம் இருக்கும் பொன் அரண்மனைக்கும் நமக்கும் எவ்வித தொடர்பு மில்லையென்பதை அறிகிறோம். நம்முடைய விடுதலை இவ்வரண்மனைக்கு அப்பாலிருக்கிறது. இதற்கு அப்பால்தான் நமது காதல் பலன் பெறுகிறது, வாழ்வு நிறைவு பெறுகிறது.

இயற்கையுள், தேனீக்கு வெறும் நிறமாகவும் வாசனையாகவும் புள்ளிகளாகவும் தோன்றி தேனெடுப்பதற்குச் சரியான இடத்தைக் காட்டுகிற பூக்கள், மனித இதயத்துக்கு, எந்தக் கட்டாயத்திற் கும் உட்படாத அழகாகவும், ஆனந்தமாகவும் காட்சியளிக்கின்றன. பற்பல நிறமுள்ள மைகளாலும் எழுதப்பட்ட காதற் கடிதத்தை அவை இதயத்துக்குக் கொண்டு வருகின்றன.

சுறுசுறுப்பான இயற்கை வெளியில் எவ்வளவு தான் தொழிலில் மும்முரமாகத் தோன்றினாலும் மலரானது நமது இதயத்துள்ளே இருக்கும் தன் ரகசிய அறைக்கு ஒரு நோக்கமுமின்றித் தன் னிஷ்டம்போல வந்து போகிறதென்று சொன் னேன். அது தொழில் செய்கிற பட்டறையி லுள்ள பெருந்தீ. நமது இதய அறையினில் கார்த் திகை விளக்குகளாகவும் அதன் தொழிற்சாலைச் சத்தம் நமது இதயத்தில் இன்னிசையாகவும் மாறு கின்றன. காரண காரியம் என்ற இரும்புச் சங்கிலி யின் சத்தம் வெளியில் கனமாகக் கேட்கிறது. ஆனால் மனித இதயத்தில், கலப்படமற்ற அதன் மகிழ்ச்சி, வீணையின் பொன் தந்திகளில் எழுகிற நாதம் போல இனிய ஓசையாக இருக்கிறது.

ஒரே சமயத்தில் இயற்கை முரணான இருவிதத் தோற்றங்களைப் பெற்றிருப்பது உண்மையில் ஆச் சரியமாகவே இருக்கிறது. ஒன்று அடிமைத் தோற்றம்; மற்றொன்று சுதந்திரத் தோற்றம். ஒரே வடிவத்தில், ஒரே ஒலியில், ஒரே நிறத்தில், ஒரே சுவையில், மாறுபட்ட இரு ஸ்வரங்கள் கேட் கின்றன. ஒன்று நிர்ப்பந்தத்தால் கிளம்புவது, மற்றொன்று சுதந்திரத்தில் எழுவது. வெளியில் இயற்கை ஓய்வற்று தொழில் செய்துகொண்டிருக் கிறது. ஆனால் உள்ளே ஒரே மோனமும் சாந்தியு மிருக்கின்றன. ஒருபக்கம் உழைப்பு; மறுபக்கம் வேலையற்ற ஓய்வு. வெளியிலிருந்து பார்க்கும் பொழுதுதான் நாம் அதன் அடிமைத்தனத்தைப் பார்க்கிறோம். ஆனால் அதன் இதயத்துள்ளே எல்லையற்ற அழகு இருக்கிறது.

"ஆனந்தத்திலிருந்து எல்லா உயிர்களும் பிறந்திருக்கின்றன. ஆனந்தத்தால் அவை காப் பாற்றப்படுகின்றன, ஆனந்தத்தை நோக்கி முன் செல்லுகின்றன, ஆனந்தத்துள் புகுகின்றன" என்று நமது தீர்க்கதரிசி கூறுகிருர்.

ஆகையினுல் அந்த தீர்க்கதரிசி இயற்கைச் சட்டத்தைப் புறக்கணிக்கிருர் என்பது அர்த்த மல்ல. சூட்சும எண்ணங்களில் அளவுக்கு மிஞ்சி மனத்தைச் சுழலவிட்டதனுல் புத்திமயங்கி அதனுல் எல்லேயற்ற ஆனந்தம் என்ற கருத்து அவருக்கு உதித்துவிட்டது என்று கூறுவதற்கில்லே. இயற் கையின் கடுஞ்சட்டத்தை அவர் ஒப்புக்கொள்கிருர். அவருக்கு அஞ்சி (அவருடைய சட்டத்தினுல்) தீ எரிகிறது; அவருக்கு அஞ்சி சூரியன் பிரகாசிக் கிறது. அவருக்கு அஞ்சி காற்று, மேகங்கள், எமன், தத்தம் கடமைகளே நிறைவேற்றுகின்றன". என்று கூறுகிருர். இயற்கைவிதி ஈவிரக்கமற்ற இரும்பு ஆட்சியாக நிலவுகிறது. அங்கே சிறிது தவறிழைத்தாலும் தண்டனே தப்பாது. இருப்பி னும் தீர்க்கத்தரிசியான அக் கவிஞன் "ஆனந் தத்திலிருந்து எல்லா உயிர்களும் பிறந்திருக்கின் றன, அனந்தத்தால் காப்பாற்றப்படுகின்றன, ஆனந்தத்தை நோக்கி முன் செல்கின்றன, ஆனந் தத்துள் புகுகின்றன" என்று மகிழ்ச்சி பொங்கப் பாடுகிருன்.

அழிவற்றவன் ஆனந்த ரூபத்தில் வெளிப்படு கிருன். ஆனந்த நிறைவு காரணமாக அவன் படைப்பில் தோன்றுகிருன். உருவம் என்பது சட்டம். எல்லேயற்ற மகிழ்ச்சி, தன்னேத்தானே

யுணருவதன்பொருட்டு உருவத்தை எடுத்துக் கொள்கிறது. இது அதன் இயல்பு. உருவமற்ற ஆனந்தம் உருவங்களைப் படைக்க வேண்டும். தானே அவ்வுருவங்களாக மாறவேண்டும். இசை வாணனது மகிழ்ச்சி இன்னிசையாக வெளிப்படு கிறது. கவிஞனது மகிழ்ச்சி கவிதையாக வெளிப் படுகிறது. படைப்போன் என்ற முறையில் மனி தனும் எப்போதும் உருவங்களை அமைத்துக் கொண்டே யிருக்கிறான். அவை அவனுடைய எல்லையற்ற மகிழ்ச்சியிலிருந்து பிறக்கின்றன.

இந்த ஆனந்தத்தின் மறு பெயர் அன்பு. ஆனந்தம் தன்னைத்தான் உணர வேண்டுமானால் அது இரட்டைத் தன்மையைக் கொள்ளவேண்டும். இசைவாணன் உயர்ந்த மனோ எழுச்சியைப் பெறு கையில் தானே இரண்டு கூறுகளாகப் பிரிந்து கொள்கிறான். ஒரு கூறு பாடுகிறது, மற்றொரு கூறு பாடுவதைக் கேட்கிறது. வெளியிலிருந்து அவன் பாடுவதைக் கேட்கும் சபையானது கேட்கும் கூறினுடைய வெளி விரிவேயாகும். காதலனும், தனது மற்றொரு பாகத்தையே காதலியிடம் காண நாடுகிறான். தடங்கல்களைத் தாண்டி ஒன்றுகூடு வதற்காக ஆனந்தம் இவ்விதப் பிரிவினையை ஏற் படுத்திக்கொள்கிறது.

அமிருதம் அதாவது அழிவற்ற ஆனந்தம் தன்னை இரண்டுபடுத்திக்கொண்டிருக்கிறான். நம் முடைய ஆன்மாவே அவனுடைய இன்னொரு பாகம்; அதாவது நமது ஆன்மா அவனுடைய காதலி. நாம் பிரிந்திருக்கிறோம். இந்தப் பிரிவு பூரணமானதாக இருக்குமானால் உலகில் ஒரே

துன்பமும் குறைவற்ற தீமையும் மிஞ்சியிருக்கும். அப்படிப்பட்ட நிலைமையில் நாம் பொய்மை நீங்கி மெய்மைக்கு ஒருகாலும் போகமுடியாது. பாவத்தை விட்டகன்று இதயத் தூய்மையடையலா மென்ற நம்பிக்கைகொள்ள இயலாது. அப்போது எல்லா எதிரிடைகளும் எதிரிடைகளாகவே யிருந்துவிடும். அவைகள் ஒன்றுகூடக் கூடிய நடுவழியை நாம் கண்டுபிடிக்க இயலாமல் போய்விடும். அந்த நிலைமையில் நமக்கு மொழி என்பது இருக்காது, ஒருவரை யொருவர் புரிந்துகொள்வதென்பதும் இருக்காது. இதயங்கள் ஒன்றுபடா. வாழ்க்கையில் கூட்டுறவு இருக்காது. ஆனால் உண்மை நிலைமை அப்படியில்லை. பொருள்கள் ஒன்றேடொன்று நிலையாகப் பிரிந்திருக்கவில்லை. பொருள்களின் தனித்தன்மைகள் எப்பொழுதும் மாறிக்கொண்டே யிருக்கின்றன. அவை தம்முள் கூடிக் கலந்தொன்றுகின்றன. விஞ்ஞானமோ, தத்துவ விசாரணை யாக மாறிவருகிறது. சடப்பொருளின் வரம்புகள் மறைந்து வருகின்றன. வாழ்வு என்றால் என்ன என்பதும் வரையறுக்க முடியாதபடி திரிந்துகொண்டிருக்கிறது.

ஆம். நமது ஜீவாத்மா, பரமாத்மாவிடமிருந்து பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவைகளுக்குள் வேற்றுமை ஏற்பட்டதனால் அல்ல. அன்பு நிறைவினால் இப்பிரிவு ஏற்பட்டிருக்கிறது. அதனாலேதான் பொய்மைகள், துன்பங்கள், தீமைகள் யாவும் நிலைத்து நிற்கவில்லை. மனித ஆன்மா அவைகளை எதிர்க்கலாம், வெல்லலாம். மேலும் அவைகளைப் புதிய சக்தியாகவும் அழகாகவும் மாற்றலாம்.

இசைவாணன். பாடலைப் பாடித் தன் ஆனந் தத்துக்கு வெளி உருவங்களைக் கொடுக்கிருன். அதைக் கேட்கிறவனும், தான் கேட்கும் இன் னிசையை, இசையின் மூலப்பொருளாகிய ஆனந்த மாக மாற்றவேண்டும். அத்தகைய நிலையில் பாடு வோனுக்கும் கேட்போனுக்கும் உள்ள தொடர்பு பூரணமடைகிறது. எல்லையற்ற ஆனந்தம் அனேக உருவங்களாக வெளிப்படுகிறது. அது சட்டம் என் னும் தளையை வலியப்பூண்டு கொள்கிறது. நாம் உருவங்களிலிருந்து ஆனந்தத்தை நாடிச் செல் வோமாளுல் சட்டத்திலிருந்து அன்பை நாடிச் செல்வோமாளுல், எல்லையென்ற சிக்கலை உடைத்து எல்லையின்மைக்கு மீண்டு செல்வோமாளுல், அப் போதே நாம் நமது வாழ்வின் லட்சியத்தை அடை கிரேம்.

சட்டத்திலிருந்து அன்புக்கும், கட்டுப்பாட்டி லிருந்து விடுதலைக்கும், அறவொழுக்கத்திலிருந்து ஆத்ம நிலைக்கும் மனித ஆன்மா பிரயாணம் செய்து கொண்டிருக்கிறது. புலனடக்கம் அறவொழுக்க வாழ்வு என்ற கட்டுப்பாடுகளைக் கடைப்பிடித்து வாழுமாறு புத்தர் போதித்தார். அத்தகைய வாழ்வு சட்டதிட்டங்களை ஏற்றுக்கொண்ட வாழ்வாகும். ஏற்றுக்கொள்வதென்ருல் அடிமையாக இருப்பது என்பதல்ல. அவைகளின்படி பிசகாமல் நடப்பதன் மூலம் அவைகளை விட்டு நீங்கத்தக்க வழி கிடைக் கும். எல்லையற்ற அன்பே, இயற்கை விதிகளுக் குட்பட்டு எல்லையுள்ள உருவங்களாக வெளிப்பட் டிருக்கின்றது. விதிகளை அனுசரிப்பதன் மூலம் எல்லையற்ற அன்புக்கு அதாவது பிரமத்துக்கு நாம்

மீண்டு செல்கிறோம். இதைப் பிரமவிஹாரம், அதாவது பிரமத்தில் வாழ்வதால் எய்தும் ஆனந்தமென்று புத்தர் கூறுகிறார். இந்த நிலையை அடைய விரும்புகிறவன் என்ன செய்வான்? புத்தர் கூறுகிறபடி அவன் "யாரையும் ஏமாற்ற மாட்டான், யார் மீதும் பகைமை பாராட்டமாட்டான், கோபங்கொண்டு யாருக்கும் ஊறு செய்ய விரும்பமாட்டான். தாய் தனது ஒரே பிள்ளைமீது அளவற்ற அன்பு செலுத்தித் தன்னுயிரையும் கொடுத்து அதைக் காப்பாற்றுவதுபோல, எல்லா உயிர்களிடத்தும் அவன் அன்பு காட்டுவான். மேலும், கீழும், சுற்றிலும் அவன் தனது அன்பைப் பரப்புவான். அவனது அன்பு எல்லை கடந்தது; தட்டுத் தடங்கலற்றது; கொடுமையும் பகைமையும் தவிர்ந்தது. நின்றும், இருந்தும், நடந்தும், கிடந்தும், உறங்கப்போகும்வரை எங்கும் நல்லெண்ணத்தைப் பரப்புவதிலே அவன் தன் மனத்தை ஈடுபடுத்தியிருப்பான்."

அன்பு குறைந்திருப்பதென்பது ஓரளவு உணர்ச்சியற்றிருப்பதாகும். ஏனெனில் அன்பே உணர்வின் முழுமை. நாம் யாரையும் அறிந்துகொள்ளவில்லை என்றால், நாம் அவர்கள் மீது அன்பு செலுத்துவதில்லை என்றுதான் பொருள். அப்படிச் சொல்வதுகூடச் சரியில்லை – அன்பு செலுத்ாததனாலே நாம் யாரையும் அறிந்துகொள்கிறதில்லை, என்று கூறுவதே சரி. நம்மைச் சுற்றியுள்ள ஒவ்வொரு பொருளின் முடிவான உண்மை அன்புதான். அன்பு என்பது வெறும் மனக்கிளர்ச்சி யல்ல; அது ஒரு உண்மை; எல்லாப்

படைப்பின் அடிப்படையிலிருக்கிற ஆனந்தம். அது, பிரமத்தினின்றும் சுடர் விடுகிற சுத்த அறிவின் வெண்மையான ஒளியாகும். வெளி ஆகாயத்திலும், நம்முள் இருக்கும் ஆன்மாவிலும் இருந்துகொண்டு எல்லாவற்றையும் உணருகிற சர்வானுபவனோடு ஒன்று கூடுவதற்கு நாமும் உணர்வின் சிகரத்தை அதாவது அன்பை அடைய வேண்டும். ஆகாயம் ஆனந்தத்தாலும் அன்பாலும் நிரப்பப்படாவிட்டால் யாரால் மூச்சுவாங்க முடியும் அல்லது நகரத்தான் முடியும்? நமது உணர்வை அன்பாகக் கனியவைத்து உலக முழுவதும் பரப்பு வதன் மூலம் நாம் பிரம விஹாரத்தை அதாவது எல்லையற்ற அன்பை அடையலாம்.

அன்பு, எண்ணற்ற பரிசுகளாகத் தன்னையே தருகிறது. இப்பரிசுகளின் மூலமாக, கொடையாளி யாகிய அன்பை (அன்பனை) நாம் போய்ச்சேரா விட்டால் அப்பரிசுகள் முழுதும் பயனற்றுப் போகின்றன. அதற்கு நம் இதயத்தில் நாம் அன்பு கொண்டிருக்கவேண்டும். அன்பற்றவன் பரிசுப் பொருள்களின் மதிப்பை அவர்களின் உபயோகத் தைக்கொண்டு அளக்கிறான். எந்தப்பொருளும் எந்தக்காலமும் நமக்குப் பயன்படாது; அது சில நாட்களுக்குமட்டும் பயன்படலாம்; அரைகுறை யாகப் பயன்படலாம். ஆகவே அப்பொருளுக்கு நமது முழு இதயத்திலும் இடங்கிடையாது. உபயோகமுள்ள பொருள் என்றால், தேவைப்பட்ட போதுதான் அது நம்மை நெருங்கலாம். தேவை பூர்த்தியானபின் அப்பொருள் நம்மைவிட்டகலாது நிற்குமானால் அது நமக்குப் பெருஞ்சுமையாகி

விடுகிறது. நம்முடைய இதயத்தில் அன்பிருக்கும் போது வெறும் அடையாளமாகக் கொடுக்கப்பட்ட பொருளும் நிரந்தரமான மதிப்புடையதாகிறது. ஏதாவதொரு வகையில் அது நமக்கு நன்ருக உபயோகப்படும் என்பதற்காக அல்ல. அதுவே ஒரு இலட்சியப்பொருளாகிறது. அது நமது முழு ஜீவனையும் சேர்ந்ததாகிறது; அது ஒருபோதும் நமக்குச் சலிப்பைத் தராது.

இந்த உலகம் ஆனந்தத்தின் பூரணப்பரிசு. இதை நாம் எவ்வாறு ஏற்றுக்கொள்கிருேம் என்பது தான் கேள்வி. அழியாத மதிப்புடைய பொருள்களை நமது சிந்தையில் கோயில் கொளச்செய்திருக்கிருேமே, அங்கே உலகத்திற்கு என்ன இடமளித்திருக்கிருேம்? பிரபஞ்சச் சக்திகளைத் தொழிற்படுத்தி மேலும் மேலும் நமது வலிமையைப் பெருக்குவதில் நாம் மும்முரமாக இருக்கிருேம். பிரபஞ்சத்தின் உக்கிராணத்திலிருந்து நமக்கு வேண்டிய உணவைப் பெற்றுக்கொள்கிருேம், உடையைப் பெற்றுக்கொள்கிருேம். அதனுடைய செல்வங்களைக் கொள்ளையடிப்பதற்குப் பாய்ச்சலில் நிற்கிருேம். இப்பிரபஞ்சம் நமக்கு, கடுமையான போட்டி போடுவதற்குக் களமாகிறது. இது எனக்குச் சொந்தம் உனக்குச்சொந்தம் என்று நமது ஆதிக்க உரிமைகளைப் பரப்புவதற்கும் இதை வெறும் சந்தைச் சரக்காக்குவதற்குமா நாம் இதில் பிறந்திருக்கிருேம்? இந்த உலகத்தை எப்படி உபயோகப்படுத்திக் கொள்வது என்ற நோக்கத்திலேயே நமது முழு மனத்தையும் செலுத்தும் போது இதன் உண்மையான மதிப்பை நாம்

இழந்துவிடுகிறோம். நமது கீழ்த்தரமான ஆசைகளால் இதைத் தாழ்வுபடுத்துகிறோம். சாகிறவரைக்கும் இதைப்பறித்துத் தின்பதிலேயே ஈடுபட்டு, அதன் உண்மையைப் பார்க்கத்தவறி விடுகிறோம். அருமையான புத்தகத்தின் தாள்களைக் கிழித்து அவைகளை விழுங்க முயலுகிற அவாக்காய்ச்சலுள்ள குழந்தையைப்போல நாமும் முயலுகிறோம்.

மனிதனை மனிதன் கொன்று தின்னும் வழக்கமுள்ள நாட்டில், மனிதனை மனிதன் இரையாகக் கருதுவான். இத்தகைய நாட்டில் நாகரிகம் வளராது. அங்கே மனிதன் தனது உயர்ந்த மதிப்பை இழந்து விடுகிறான். சாதாரணத் தாழ்ந்த பொருளாக அவன் ஆக்கப்படுகிறான். மனிதனை இரையாக்கும் பழக்கத்தில் அனேக வகைகள் உண்டு. அவை அவ்வளவு கோரமாகத் தோன்றாதென்றாலும் கொலைபாதகத்தன்மையில் அவை குறைந்தவை யல்ல. இவைகளைக் கண்டுபிடிப்பதற்கும் நாம் நெடுந்தூரம் போகவேண்டியதில்லை. நாகரிகத்தில் இன்னும் சிறிது உயர்ந்தபடியிலுள்ள நாட்டில், மனிதனை வெறும் உடலாகமட்டும் மதித்து, அவனுடைய சதைப்பிடிப்பிற்குத் தக்கபடி விலை பேசிவாங்கி விற்கிறார்கள். சிலசமயம் மனிதன், தன் உபயோகத்துக்குத் தக்க மதிப்பைப் பெறுகிறான். பணக்காரன் அவனை ஒரு இயந்திரமாக்கி, உபயோகித்து, அவன் மூலம் மேலும் அதிகப் பணத்தைச் சம்பாதித்துக் கொள்கிறான். இவ்விதமாக நமது காமமும் பேராசையும், சுக இச்சையும் மனிதனுடைய மதிப்பை வெகுவாகத் தாழ்த்திவிடுகின்றன. இவ்விதமாக நம்மை நாம்

பரந்த அளவில் ஏமாற்றிக்கொள்கிறோம். மனித னிடம் பொதிந்துள்ள உண்மையைப் பார்க்க விடாதபடி, நமது ஆசைகள் நம்மைக் குருடாக்கு கின்றன. இதுவே நாம் நமது ஆன்மாவுக்குச் செய்யும் பெரும் தீங்கு. இது நமது உணர்வைச் சாகடிக்கிறது. நாளடைவில் நமது ஆன்ம விழிப்பை இவ்வாசைகள் கொன்று விடுகின்றன. நாகரிகத்தின் உடலில் அறுவறுப்பான குதர்ப்புண் களை இவ்வாசைகள் உண்டாக்குகின்றன. சிறிய குடிசைகளும், விபசார விடுதிகளும், பழிவாங்குகிற தண்டனைச்சட்டங்களும் கொடூரமான சிறை முறை களும் தோன்றுவதற்குக் காரணமாக இவை இருக் கின்றன. தங்களைத் தாங்களே ஆளுவதற்கும் பாது காத்துக் கொள்வதற்கும் பயிற்சி கிடைக்காதவாறு அன்னிய நாட்டினரைத் தடுத்து அவர்களை நிரந்தர முடமாக்கி, அவர்களைச் சுரண்டுவதற்கென்று ஒழுங்குபடுத்தப்பட்ட முறையையும் இவ்வாசைகள் உண்டாக்குகின்றன.

மனிதனுடைய உடல் அற்புதமான இயந்திர மாகவும் அவனுடைய மனம் ஆச்சரியமான திற னுள்ளதாகவுமிருப்பதால், மனிதனுக்கு மனிதன் உபயோகமுள்ளவனாக இருக்கிறான் என்பது வெளிப்படை. அதே சமயத்தில் மனிதன் ஆன்மா வாகவும் இருக்கிறான். அந்த ஆன்மாவை அன்பி னால்தான் உண்மையாக அறியமுடியும். ஒரு மனித னால் நமக்கு எவ்வளவு பெறுமானமுள்ள வேலை கிடைக்கும் என்று கணக்கிட்டு அவனை மதித்தால் நாம் அவனை முழுதும் அறியமுடியாது, அரை குறையாகத்தான் அறியமுடிகிறது. அவனை முழு

தும் அறியாததனுல் அவனைக் கொடுமையாக நடத்துவது நமக்கு எளிதாகிறது. நாம் கொடுக்கும் கூலிக்கு அதிகமாக அவனைக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்கக்கூடிய அளவுக்கு ஏதோ ஒரு கொடூரமான சாதக நிலைமை நமது பக்கம் இருக்குமானுல் நம்மை நாமே மெச்சிக்கொண்டு வெற்றிச் செருக்கு அடைகிறோம். அவனை ஒரு ஆன்மா என்று தெரிந்துகொண்ட நேரத்தில் அவனும் நம்மவன் என்று தெரிந்துகொள்கிறோம். அவனுக்கிழைக்கும் தீங்கு நமக்கிழைக்கப்படும் தீங்கு என்றும், அவனைச் சிறுமைப்படுத்துவது நம்முடைய மனிதத் தன்மையிலேயே கைவைப்பதாகுமென்றும், நம்முடைய சொந்த இலாபத்துக்காக அவனை உழைக்கச் செய்வதால் உயர்ந்த பொருளான உண்மையை பலி கொடுத்து அதற்குப் பதிலாகப் பணமோ, சுகமோ பெறுகிறோமென்றும் நாம் அறிந்துகொள்கிறோம்.

ஒருநாள் நான் கங்கையாற்றில் படகில் சென்றுகொண்டிருந்தேன். அப்போது இலையுதிர் காலம். அழகான மாலைநேரம். பகலோன் மறைந்தான். சொல்லமுடியாத அமைதியோடும், அழகோடும், வானத்தில் மௌனம் நிரம்பியிருந்தது. நீரின் அகன்ற பரப்பில் ஒரு சிறு அலையையும் காணேம். செக்கர் வானத்தின் செழுமையான மாறுதல்களைப் படம்பிடித்துக் காட்டியது அந்நீர்ப் பரப்பு. எத்தனையோ ஆயிர வருஷங்களுக்கு முன்னுல் வாழ்ந்துவந்த ராட்சஸ முதலையொன்று தன் மேனி மின்னும்படி அசைவற்றுக் கிடப்பதைப் போல, நடமாட்டமற்ற மணற் கரையும் மைல்

கணக்கில் பரந்து நீண்டு கிடந்தது. தண்ணீரருகே உட்பக்கம் கரை செங்குத்தாக இருந்தது. கூட்டம் கூட்டமாகப் பறவைகள் அந்தக் கரையிலுள்ள பொந்துகளில் கூடுகட்டி வாழ்ந்தன. எங்களுடைய படகு கரையோரமாக மெதுவாகச் சென்றுகொண் டிருந்தது. அப்போது சடாரென்று ஒரு பெரிய மீன், நீர்ப்பரப்பின் மேலே துள்ளிக்குதித்து மறைந் தது. மேலே துள்ளும்போது அதன் பளபளப் பான மேனியில் மாலைநேர வானத்தின் வண்ணங்க ளத்தனையும் மின்னின. ஒருகண நேரம், பன்னி றத்திரையை சற்றே அப்பாலிழுத்து அத்திரைக் கடியில் வாழ்வின் ஆனந்தம் நிரம்பிய ஒரு உல கத்தை அது காட்டிற்று. அந்த மீன் அழகாக நடனமாடிக்கொண்டு தனது அற்புத உறைவிடத் தின் ஆழத்திலிருந்து வெளியே வந்து, மறைகின்ற நாளின் அமைதியான தீங்குரலோடு தன் இன் னிசையையும் கூட்டிற்று. ஏதோ ஒரு புது உலகம் என்னை அதன் சொந்த மொழியிலே வரவேற்பது போல எனக்குத் தோன்றியது. என் மனத்தில் பளிச்சென்று மகிழ்ச்சி பொங்கிற்று. உடனே பட கோட்டி "ஆஹா, எவ்வளவு பெரிய மீன் !" என்று சிறிது வருத்தம் கலந்த குரலோடு சொன்னான். துள்ளிய மீனைக் கண்டதும், அதைப் பிடித்து சமைத்தது போன்ற ஒரு காட்சி அவன் மனக் கண் முன் தோன்றிற்று. தனது ஆசையின் மூலமாகத் தான் அவனால் அந்த மீனைப் பார்க்க முடிந்தது. ஆகவே அதன் வாழ்வின் முழு உண்மையையும் அவன் இழந்துவிட்டான். ஆனால் மனிதன் முழு மையும் மிருகம் அல்லன், முழு உண்மையின் தோற்றமாகிய ஆன்மக் காட்சியைக் காண அவன்

பெரிதும் ஆசைப்படுகிருன். ஆன்மக்காட்சி அவனுக்குப் பெருமகிழ்ச்சியைக் கொடுக்கிறது. அவனுக்கும் அவனைச் சூழ்ந்துள்ளவைகளுக்கும் உள்ள ஆழ்ந்த சமரசத்தை ஆன்மக் காட்சி வெளிப்படுத்துகிறதால் ஆன்மக்காட்சி அவனுக்குப் பெரு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது.

நம்மை நாம் முழுதும் உணராதபடி கட்டுப்படுத்துகின்றன, நமது ஆசைகள்; நமது உணர்வை விரிவுபடுத்துகையில் இடையில் குறுக்கிடுகின்றன, நமது ஆசைகள். வேற்றுமையையும் தனித்தொதுங்கி நிற்கும் அகம்பாவத்தையும் உண்டாக்கி, கடவுளிடமிருந்து நம்மைப் பிரித்துவைக்கும் அந்தரங்கத் தடைகளாக நமது ஆசைகளிருக்கின்றன. பாவம் என்பது ஏதாவது தனிப்பட்ட செயல் அல்ல. அது வாழ்க்கையைப் பற்றிய ஒருவகை மனப்பாங்கு. நம்முடைய இலட்சியம் எல்லையுடையதென்றும், நம்முடைய உடல் வாழ்வே முடிவான உண்மையென்றும், நாம் யாவரும் அடிப்படையில் ஒன்றுபட்டவர்கள் இல்லை, ஒவ்வொருவரும் தனக்குத்தானே வாழ்கிறவர் என்றும் வாழ்க்கையைப் பற்றி நினைக்கிற மனப்பாங்குதான் பாவமாகும்.

ஆகவே நான் மீண்டும் கூறுகிறேன், மனிதன் மீது அன்பு செலுத்தினாலொழிய நம்மால் அவனுடைய முழுக் காட்சியையும் பெற முடியாது. நாகரிகம் நமக்கு எவ்வளவு ஆற்றல் அளித்திருக்கிறதென்பதிலிருந்து நாம் நாகரிகத்தை மதிப்பிட்டுப் பாராட்ட முடியாது. மனித சமுதாயத்தின் மீதுள்ள அன்பைத் தனது சட்டங்கள் மூலமாகவும், ஸ்தாபனங்களின் மூலமாகவும் எவ்வளவு தூரம்

விருத்திபண்ணி அவ்வன்பை வெளிப்படுத்துகிற தென்பதைப் பொறுத்தே அதன் உயர்வை மதிப்பிடவேண்டும். நாகரிகம் மனிதனை இயந்திரமாகக் கருதாமல் ஆத்மாவாகக் கருதுகிறதா? அப்படியானல் அவ்வாறு எவ்வளவுதூரம் கருதுகிறது? என்ற கேள்விகளே நாகரிகத்தின் உரைகல். எவ்வெப்பொழுது பழைய நாகரிகங்கள் அழிந்தொழிந்தன என்பதைப் பார்த்தோமானல், நெஞ்சிலே ஈரமற்ற தன்மையை உண்டாக்கி மனிதனைத் தாழ்வாக நினைக்கும்படி செய்த காரணங்கள் கிளம்பிய போதும், அரசாங்கமோ அல்லது வலிமை மிக்க சிறு கூட்டமோ பொது மக்களைத் தமது கருவியாகக் கருத ஆரம்பித்தபோதும், வலிமையற்ற இனத்தவரைக் கட்டாய அடிமைகளாக்கி எல்லா வகையாலும் அவர்களைக் கீழே அமுக்கி அவ்விதக் கொடுமையின் மூலம் மனிதன், தனது பெருமை, சுதந்தர தாகம், நேர்மைத் தாகம் முதலியவைகளின் அடிப்படையையே தகர்த்தபோதும் பண்டை நாகரிகங்கள் அழிந்தன என்பதை நன்கு காணலாம். மனிதனை மனிதன் தின்னுகிற எவ்வித அரக்கத் தன்மையைக் கொண்டும் நாகரிகம் வாழ முடியாது. மனிதன் ஆன்ம வடிவினன். அவனது ஆன்மா அன்பினலும் நீதி முறையினலுமே செழிக்கும்.

மனிதனிடம் போலவேதான் பிரபஞ்சத்தினிடமும், உலகத்தை நமது ஆசைகள் என்ற திரை வழியாகக் காணும்போது அதைச் சிறிதாக்கிக் குறுக்கி அதன் உண்மையைக் காணமுடியாமல் போகிறது. உலகம்நமக்கு சேவைசெய்கிற தென்பதும் நமது தேவைகளைப் பூர்த்திசெய்கிறதென்பதும்

உண்மையே. இருப்பினும் நமக்கும் அதற்கும் உள்ள தொடர்பு அத்தோடு நின்றுவிடவில்லே. உலகம் நமக்குத் தேவையாயிருக்கிற தென்பதைக் காட்டிலும் நம்மோடு அது இன்னும் உண்மையான தும் ஆழமானதுமான உறவைக் கொண்டிருக்கிறது. நமது ஆன்மா உலகத்தின் வசம் பாய்கிறது: நாம் உயிரோடு வாழவேண்டுமென்று ஆசைப் படுகிருேமே அது என்னவாம்? இந்தப் பெரிய உலகத்தோடு நாம் கொண்டுள்ள உறவை நீடிக்க வேண்டுமென்ற ஆசையே அது. இந்த உறவு அன்பின் வழியது. நாம் இந்த உலகத்திலிருப்பது நமக்குப் பெருமகிழ்ச்சியா யிருக்கிறது; இந்த உலகத்தோடு நாம் எத்தனேயோ வகையான உறவுத் தளேகளால் இணேக்கப்பட்டிருக்கிருேம். நம்முடைய உறவு இம் மண்ணுலகத்திலிருந்து வானிலுள்ள நட்சத்திரங்கள் வரை செல்கிறது. மனிதன் இவ்வுலகத்தை வெறும் சடஉலக மென்று கூறி அதற்கும் தனக்கும் அடிப்படையான வேற் றுமை யிருக்கிறதாக நினேத்துக்கொண்டு அந்த நம்பிக்கை வெறியில் இந்த உலகத்தைத் தனது கொடிய விரோதியென்று கருதி அதைப் புறக் கணிக்கிருன். இவ்வுலத்தைக் காட்டிலும் தான் உயர்ந்தவன் என்பதை மெய்ப்பிக்க, முட்டாள்தன மாக முயலுகிருன். ஆனுல் அவனுடைய அறிவு முன்னேற முன்னேற அவனுல் இந்த வேறு பாட்டை நிலே நிறுத்துவது கடினமாகிறது. அவன் தன்னேச் சூழவும் அமைத்துக்கொண்ட கற்பனேச் சுவர்கள் ஒவ்வொன்ருக மறைந்துவருகின்றன. இயற்கையைக் காட்டிலும் மனித சமுதாயம் உயர்ந்த அந்தஸ்தை உடையதென்ற உரிமை

யைப் பாராட்டிக்கொள்ளும் பொருட்டு அதற்குச் சில அடையாளச் சின்னங்களைக் கொடுத்திருக்கிறோம். அச்சின்னங்கள் கொஞ்சம் கொஞ்சமாகத் தொலையும்போது நமக்கு அவமானம் உண்டாகி அதிர்ச்சி ஏற்படுகிறது. என்ன செய்வது? அவமானத்துக்கு இணங்க வேண்டியதுதான். நாம் நம்முடைய ஆன்மாவை உணரத் தலைப்பட்டபோது பிரிவுகளையும் வேற்றுமைகளையும் உண்டாக்கும் ஆற்றல் நமக்கு உண்டு என்ற செருக்கைக் கொண்டால், விரைவிலோ அல்லது கொஞ்சம் தள்ளியோ, உண்மையின் காலடிபட்டு அச்செருக்கு தூள் தூளாகப் போய்விடும். நாம் எதனுடனும் ஒட்டாத தனியர் என்பது அர்த்தமற்றது. அப்படிப்பட்ட எந்தவிதத் தனிக்கொடும் உயர்வையும் உண்மையில் நாம் தாங்கிக் கொண்டிருக்கவில்லை. ஆன்மீகத் தன்மையில் நம்மைக் காட்டிலும் எவ்வளவோ தாழ்ந்துள்ள உலகில் வாழ்வது நமக்கும் தாழ்வாகும். பிறந்தது முதல் சாகும் வரை இரவும் பகலும் எந்த நேரமும் ஏராளமான பணியாட்கள் சுற்றிநின்று சேவை செய்வது நமக்கு எவ்வளவு அருவருப்பாகவும் இழிவாகவும் இருக்குமோ அப்படியிருக்கும் நாம் இவ்வுலகத்தில் வாழ்வதும். ஆனுல் இதற்கு மாருக இவ்வுலகம் நம்முடன் சரிசமமாக இருக்கிறது. அம்மட்டோடில்லை, நாம் அதோடு ஒன்ருக இருக்கிருேம்.

விஞ்ஞானத்தின் முன்னேற்றத்தினுல் உலகத்திலுள்ள யாவும் சேர்ந்து ஒன்று என்பதும் நாம் உலகத்தோடு ஐக்கியமானவர்கள் என்பதும்

தெளிவாகிக்கொண்டு வருகிறது. நாமும் உலகமும் பூரணமாக ஒன்ருயிருக்கிரேம் என்ற அறிவு நமது விவகார புத்திக்குமட்டும் எட்டியதோடு நிற்காமல் எல்லாவற்றையும், புதிய அறிவொளி எல்லாவற்றையும் நன்குணரத்தக்க ஞானவொளியில் நம்மைச் சேர்ப்பிக்கும்போது ஒரே ஆனந்தம் பொங்குகிறது. அன்பு ததும்புகிறது. நமது ஆன்மா, உலகில் தனது பேரான்மாவைக் காண்கிறது ; தனக்கு இறப்பில்லை என்பதை உறுதியாக அறிந்துகொள்கிறது. “நான்” என்ற சிறுநிலை கூட்டோடு பலதடவை சாகிறது ; “நான்” என்ற பிரிவுபட்ட நிலையும் தனிப்பட்ட நிலையும் என்றைக்காவது ஒருநாள் இறக்கவேண்டியதே. அதை நிரந்தரமாக்க முடியாது. ஆனல் அது எல்லாவற்ருேடும் ஐக்கியமான நிலைமையில் அது தனது உண்மையையும் மகிழ்ச்சியையும் அடைவதால் அதற்கு இறப்புக் கிடையாது. வெளி உலகத்தின் சந்தம் நிறைந்த ஆன்மவாழ்வின் துடிப்பை மனிதன், தன் உள்ளத்திலுள்ள ஆன்மாவில் உணரும்போது அவன் சுதந்தரனுகிருன். உலகம் என்ற அழகு மிகுந்த மணமகள், வரம்பு அல்லது முடிவு என்ற பல நிறங்காட்டும் முகமூடியை அணிந்துகொண்டு, அப்பழுக்கற்ற வெள்ளையாடையை அணிந்த பரமாத்மாவோடு அந்தரங்கமாகக் காதல்புரியும் அரங்கத்தில், ஆன்மஞானம் கைவரப்பெற்றவனும் சேர்ந்துகொள்கிருன். பல வர்ணங்களும் சுடர் விடுகின்ற இந்தக் காதல் களிப்பு விழாவில் தனக்கும் பங்கு உண்டு என்பதை அவன் அறிந்துகொள்கிருன். இறவாமையைத் தரும் அமிருத விருந்தில் அவன் கௌரவமுள்ள

விருந்தினனுகிருன். அப்பொழுது "அன்பில் உலகம் பிறந்திருக்கிறது, அன்பால் அது காப்பாற்றப்படுகிறது, அன்பை நோக்கி அது செல்கிறது அன்பினுள் சென்றுவிடுகிறது" என்று முக்காலஞானியான கவிஞன் கூறிய கருத்து அவனுக்கு விளங்குகிறது.

வாழ்வைப்பற்றிய எல்லா மாறுபாடுகளும் அன்பில் மூழ்கி மறைந்து விடுகின்றன. அன்புஇருக்கையில் ஒற்றைத்தன்மையும் இரட்டைத்தன்மையும் விரோதமின்றி நிலவுகின்றன. அன்பு ஒரேசமயத்தில் ஒன்ருகவும் இரண்டாகவும் இருக்கவேண்டும்.

ஒரே இடத்தில் ஓட்டமும் ஓய்வும் இருக்கிறதா என்ருல் அது அன்பில் தான் இருக்கிறது, தனது அன்பைக் காணும் வரை நமது இதயம் தன்னிடத்தை மாற்றிக்கொண்டே போகிறது. கண்ட உடன் ஓய்வுபெறுகிறது. இந்த ஓய்வும் ஓய்வல்ல, இது ஒரு மும்முரமான இயக்கம். அன்பில், முழு ஓய்வும், இடையருத இயக்கமும், ஒரே இடத்தில் சந்திக்கின்றன.

அன்பில் இலாபமும் நஷ்டமும் சமரசமாகின்றன. அன்பு என்ற கணக்குப் பேரேட்டில் பற்றும் வரவும் ஒரே கட்டத்தில் எழுதப்படுகின்றன. வெகுமதிகள், இலாபத்தோடு சேர்க்கப்படுகின்றன. படைப்புஎன்ற இந்த அற்புதத் திருவிழாவில் கடவுளின் தியாகமாகிய இந்தப் பெரும் சடங்கில், அன்பைப் பெறுவதற்காக இறைவன் தன்னை இடையருது தந்துகொண்டேயிருக்கிருன். கைவிடுதல், ஏற்றல் என்ற இரண்டு காரியத்தையும் ஒன்று சேர்த்து அவைகளை இணைபிரியாது ஒன்று சேர்ப்பது உண்மையில் அன்பே.

அன்பில், அதன் ஒரு கோடியில், உருவமும், மற்ருெரு கோடியில் அருவமும் இருப்பதைக் காண் கிருேம். ஒரு கோடியில் "நான் இதோ இருக்கி றேன்" என்ற திட உறுதிப்பாடும், மற்ருெரு கோடியில் " நானில்லை " என்ற அதேயளவு உறுதி யான மறுப்பும் இருக்கின்றன. நான் என்பதில் லாமல் அன்புதான் ஏது? மற்று நான் என்பது மட்டும் இருக்கும்போது அன்பு ஏது?

அன்பில், கட்டும் விடுதலையும் ஒன்றுக்கொன்று விரோதமுள்ளவையல்ல. ஏனெனில் அன்பு மிகுந்த சுதந்தரமுள்ளது. அதே சமயத்தில் மிகுந்த கட்டும் வாய்ந்தது. கடவுள் முழுதும் சுதந்தரனுக இருந்தால் படைப்பு இல்லாமல் போய்விடும். எல்லை யற்றவன், எல்லையுண்மை என்ற விளங்காத ரகசியத்தை மேற்கொண்டிருக்கிருன். அன்பு வடி வினஞன அவனிடம் எல்லையும் எல்லையின்மையும் ஒன்ருக்கப்பட்டிருக்கின்றன.

இதே போல சுதந்தர நிலைமை, சுதந்தரமற்ற நிலைமை என்பவற்றின் தராதரங்களை மதிப்பிடு வதும் வெறும் சொல் சிலம்பமாகிறது. நாம் சுதந் தரத்தை மட்டும் விரும்பவில்லை, அடிமைத்தனத் தையும் விரும்பத்தான் செய்கிருேம். எல்லா வரம்பு களையும் வரவேற்று அவைகளை மீறிக்கடந்து செல்வதே அன்பின் உயர்ந்த வேலை. அன்பைப் போல அதிக சுதந்தரமுள்ள தெது? மீண்டும், வேறு எங்குதான் நாம் அவ்வளவு அடிமைத்தனத் தைக் காணமுடியும்? அன்பினில் சுதந்தரம் எவ்வளவு சிறந்திருக்கிறதோ அவ்வளவு அடிமைத் தனமும் சிறந்திருக்கிறது.

கடவுள் தன்னை மனிதனேடு இணைத்துக் கொண்டிருக்கிருர் என்றும், அதுவே மனிதப் பிறவியின் மிகப்பெரிய சிறப்பு என்றும் வைணவ மதம் கூறுகிறது. இறைவன் வரம்பு என்ற அற்புத சந்தத்தில் தன்னைத் தளைப்படுத்திக்கொண்டு பூரணப் பொலிவுள்ள அழகுப்பாடல்களில் இசை ரூபமாகத் தனது அன்பை அளிக்கிருன். அழகு என்பதன் மூலம் அவன் நமது இதயத்தைக் காத லிக்கிருன்; அழகுக்கு வேறு நோக்கம் இருக்காது. வலிமையைக் காட்டுவதே படைப்பின் இறுதியான லட்சியமில்லை என்பதை அது எங்கணும் இயம்பு கிறது. எங்கெங்கு சிறிது வண்ணம் இருக்கிறதோ, இசையின் ஒலியிருக்கிறதோ, வடிவத்தில் வனப்பு இருக்கிறதோ அங்கங்கே நமது அன்பை அழைக்கும் அழைப்பும் இருக்கிறது. பசி அதன் உத்திரவுக்குக் கீழ்ப்படியுமாறு நம்மை நிர்ப்பந்திக்கிறது. ஆனல் பசி யென்பது மனிதனை அடக்கியாளும் இறுதி ஆணையல்ல. மனித ஆன்மா, தேவைகளின் நெருக்குதல்களாலோ அல்லது துன்பம் நேரும், என்ற பயத்தினலோ வழிநடப்பதில்லை என்பதைக் காட்டுவதற்காகவே, அதன் ஆணைகளை மீறியவர் களும் இருந்திருக்கிருர்கள். உண்மையில் ஆண் மகனுக வாழுவதற்காக ஒவ்வொரு நாளும் நம்மில் சிறியவரும்சரி, பெரியவரும்சரி அதன் வேண்டு கோள்களை எதிர்க்க வேண்டியிருக்கிறது. உலகத் தில் அழகு என்பது ஒன்று இருக்கிறது. அது நமது சுதந்தரத்தை அவமானப்படுத்துவதில்லை. அதன் ஆட்சியை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டு மென்று அது தன் சுண்டுவிரலால்கூட நம்மை அதிகாரம் பண்ணுவதில்லை. மீறியதற்காக நாம்

தண்டனையடையப்போகிறதில்லை. அது நமக்கு ஒரு அழைப்பே தவிர ஆணையில்லை. அது நம்மிடம் அன்பை நாடுகிறது ; அன்பைக் கட்டாயத்தினுல் ஒருக்காலும் பெறமுடியாது. மனிதனை கட்டாயம் என்பது இறுதியாக வசப்படுத்தவில்லை, ஆனந்தம் வசப்படுத்துகிறது. ஆனந்தம் எங்கும் இருக்கின்றது ; பச்சை வண்ணத்தில் உலகத்தைப் போர்த்திருக்கின்ற புல் போர்வையிலும், வானத்தின் நீல அமைதியிலும், வஸந்தத்தின் அபரிமிதமான செழிப்பிலும், வெயிலடிக்காத மாரிக்காலத்தின் கடுமையான விரதத்திலும், நம்முடைய உடல் கூட்டுக்கு உயிரளித்துவரும் சதையிலும், மேன்மையும் நேர்மையும் பொருந்திய மனித உடலின் பூரணக் கட்டமைப்பிலும், வாழ்க்கையிலும், நம்முடைய சகல சக்திகளைப் பயன்படுத்திக்கொள்வதிலும், அறிவைப் பெறுவதிலும், தீமைகளை எதிர்த்துப் போராடுவதிலும், நாம் அனுபவிக்க முடியாத நன்மைகளுக்காக இறப்பதிலும் ஆனந்தம் இருக்கிறது. ஆனந்தம் எங்கும் நிரம்பியிருக்கிறது ; அளவுக்கு மிஞ்சியிருக்கிறது, அனுவசியமாகக்கூட இருக்கிறது. அவசியத்தின் மிகமிகக் கண்டிப்பான உத்தரவுகளை அது அடிக்கடி மறுக்கின்றது. சட்டத்தின் கட்டுப்பாடுகளை அன்பினுல்தான் விளக்க முடியுமென்று காட்டுவதற்காக அது நிலவுகிறது ; அவைகள் உடலும் உயிரும் போன்றவை. ஒருமைப்பாட்டின் உண்மையை உணருவதே ஆனந்தம் ; உலகத்தோடு நமது ஆன்மா, ஒன்றுனது என்ற உண்மையையும் உலக ஆன்மா, பரமாத்மாவான மேலாம் காதலனேடு ஒன்றுனது என்ற உண்மையையும் உணருவதே ஆனந்தம்.

# செயல்வழி இறைவனைக் காணுதல்

ஆனந்தம், சட்டத்தின் மூலமாகத் தன்னை வெளிப்படுத்துகிற தென்பதை அறிந்தவர்களே, சட்டத்தையும் கடந்து செல்லத் தெரிந்தவர்கள். அதனாலே அவர்களுக்குச் சட்டத்தின் கட்டுத்திட்டங்கள் இல்லாதொழிந்தன என்பது அர்த்தமல்ல. அவர்களுக்குச் சுதந்தரமே கட்டுத்திட்டங்களாக உருவெடுத்து வந்திருக்கிறது. விடுதலை பெற்ற ஆன்மா கட்டுத் திட்டங்களை ஏற்றுக்கொள்வதில் மகிழ்கிறது. கட்டுத் திட்டங்களிலிருந்து அது தப்பப் பார்ப்பதில்லை. ஒவ்வொரு கட்டுத்திட்டத் தின் மூலமாக எல்லையற்ற சக்தி வெளிப்படுவதை அது காண்கிறது. அந்த எல்லையற்ற சக்தி படைத்துக் கொண்டிருப்பதிலேயே ஆனந்தம் அடைகிறது.

உண்மையில், எங்கே கட்டுத்திட்டங்கள் இல்லையோ, எங்கே, தான்தோன்றித்தனம் வெறி கொண்டலைகிறதோ அங்கு ஆன்மா சுதந்திர மற்றிருக்கிறது. அங்கே அது துன்புறுகிறது. எல்லையற்றவனிடமிருந்து பிரிந்து நிற்கிறது, பாவத்தில் விழுந்து வேதனை அடைகிறது. ஆசை யாலிழுக்கப்பட்டு, சட்டத்தின் தளையிலிருந்து வழுவிய போதெல்லாம் தாயின் கைப்பிடியை இழந்த குழந்தைபோல அதுவும் "என்னை அடிக் காதே" என்று ஓலமிடுகிறது. "என்னைக் கட்டிப்

போடு, ஐயோ! என்னை உனது சட்டத்தின் தளை களில் கட்டிப்போடு; என்னை இறுகப் பிடித்துக் கொள்; உன் சட்டத்தின் பிடியிலிருக்கும் போது உனது ஆனந்தத்தில் நான் கட்டுப்பட்டிருப்பேனாக; என்னை நீ இறுகப் பிடித்துக்கொண்டு பாவத்தைச் செய்யக்கூடிய கொடிய சுதந்திரத்திலிருந்து என்னைக் காப்பாற்று'' என்று கூறுகிறது.

சட்டம் என்பது ஆனந்தத்துக்கு எதிரிடை யானது என்றும் ஆகவே கட்டற்ற வெறி நிலைமையே ஆனந்தம் என்றும் சிலர் கருதுகிறார் கள். அதைப்போல தொழிலும் சுதந்தரத்துக்கெதி ரானது என்று கருதுகிறவர்களும் நமது நாட்டில் அநேகர் இருக்கின்றனர்.

தொழில் செய்தல் என்பது உடல் பற்றியதாக இருப்பதால் அது ஆன்மாவின் சுதந்தரப் போக்குக்குத் தடையாயிருக்குமென்று சிலர் கருது கிறார்கள். ஆனந்தம், சட்டத்தின் மூலமாக வெளிப் படுதல் போல, ஆன்மாவும் தொழிலில் தனது சுதந்தரத்தைக் காண்கிறது என்பதை நாம் நினைவு படுத்திக் கொள்ளவேண்டும். ஆன்மா தான் மாத்திரமிருந்தால் அதனால் வெளிப்படமுடியாது. புறப் பொருளான சட்டத்தின் உதவிகொண்டே அது வெளிப்படமுடியும். அதே போல ஆன்மாவும் தனக்குள்ளே சுதந்தரத்தைக் காண முடியாதாகை யால் அது வெளியே தொழிலை விரும்புகிறது. தொழில் மூலமாகவே ஆன்மா, தனது கட்டுக்களி லிருந்து தன்னை விடுவித்துக்கொள்கிறது. தொழில் செய்யாதிருக்குமானால் அது தன்னிச்சையாக ஒரு காரியத்தையும் நிறைவேற்றியிருக்காது.

எவ்வளவுக் கெவ்வளவு மனிதன் தொழில் செய்கிருனே எவ்வளவுக் கெவ்வளவு தன்னுள் மறைந்துகிடப்பதை வெளிப்படுத்துகிருனே, அவ் வளவுக் கவ்வளவு வெகுகாலம் பிந்தி வரப்போவதை விரைவில் முன்னே வரும்படி செய்கிருன். தன்னுள் மறைந்து கிடப்பதை வெளிப்படுத்துவதனுல் தன்னையே மேலும் மேலும் சிறப்புடையவனுகச் செய்து கொள்கிருன். அரசாங்கத்திலும் சமுதாயத் திலும் தான் செய்யும் வெவ்வேறு காரியங்களினுல் தன்னைப் பல புதிய தோற்றங்களில் வெகு தெளி வாகக் காண்கிருன். இக்காட்சி சுதந்தரத்துக்கு இட்டுச் செல்கிறது.

சுதந்தரம் இருளில் இல்லை. தெளிவின்மை யிலும் இல்லை. யாருமறியாத இருளில் கிடப்பதைப் போன்ற பயங்கரமான அடிமைத்தனம் வேருென் றில்லை. இவ்வாறு இருளில் மறைந்துகிடக்கும் நிலைமையிலிருந்து தப்புவதற்காகவே விதை முளைப் பதற்கு முயல்கிறது. அரும்பு மலர முயல்கிறது. நம்முடைய மனத்தில் கருத்துக்கள் மங்கிக்கிடக் கின்றன. மங்கல் நிலைமையை உதறித் தள்ளிவிட்டு வெளியில் தெரியும்படியான உருவ மெடுப்பதற்காக அவை அடிக்கடி வாய்ப்புக்களைத் தேடிக் கொண் டிருக்கின்றன. அதுபோல நமது ஆன்மாவும் தென்படா நிலையிலிருந்து, தென்படும் நிலையை அடைவதற்காக இடையருது புதுப்புதுத் தொழில் களங்களை உண்டாக்கிக் கொள்கிறது. உலக வாழ்க்கைக்கு வேண்டாத தொழில் முறைகளையும் கண்டுபிடிக்கிறது. ஏன்? அது சுதந்தரத்தை விரும்புகிறது. தன்னையே பார்க்க விரும்புகிறது. தன்னை உணர விரும்புகிறது.

கொடுங்கானகத்தை அழித்து அவ்விடத்தில் தனக்கு ஒரு அழகிய பூங்காவனத்தை மனிதன் ஏற்படுத்திக்கொள்கிருன் என்று வைத்துக்கொள் வோம். அப்போது அவ்விடத்தில் விகாரத்தால் மூடுண்ட அக்கானகத்திலிருந்து அவன் விடுவித்த அழகு அவனுடைய ஆன்மாவின் அழகாகும். அவ னுடைய ஆன்மாவுக்கு இத்தகைய வெளிச் சுதந் தரம் கொடுக்காமல் உட்சுதந்தரமும் அவனுல் கொடுக்கமுடியாது. சமுதாயத்தில் ஒழுங்கோ, நியதியோ இல்லாதபோது அவற்றை ஏற்படுத்தினு னென்ருல், இவ்வாறு கெடுதல்களின் தடையி லிருந்து அவன் விடுவிக்கும் நன்மை அவனுடைய ஆன்மாவில் உறைந்துள்ள நன்மையாகும். இவ் விதம் வெளியில் அது சுதந்தரம் பெருதபோது உள் ளேயும் சுதந்தரம் அடையாது. இவ்விதமாக தன் சக்திகளேயும், அழகையும், நன்மையையும், தனது ஆன்மாவையுமே தொழில் மூலமாக இடைவிடாது வெளிப்படுத்துவதில் மனிதன் ஈடுபட்டிருக்கிருன். இதில் எவ்வளவுக்கெவ்வளவு வெற்றியடைகிருனே அவ்வளவுக் கவ்வளவு தன் பெருமையைக் காண்கிருன். அவனுடைய ஆன்ம ஞானம் விரிவடைகிறது.

"தொழிலில் ஈடுபட்டிருக்கும் போதுதான் நீ நூருண்டு வாழ விரும்புவாய்" என்று உபநிஷடம் கூறுகிறது. இது ஆன்ம ஆனந்தத்தை நன்கு பருகியவர்களின் வாக்கு. ஆன்மாவை முழுதும் உணர்ந்தவர்கள் வாழ்வின் துயரத்தைப்பற்றியோ, தொழிலுக்கு அடிமைப்பட்டிருத்தலைப் பற்றியோ, அழுது புலம்பியதில்லை. தன்னிடம் காய் தோன்று

வதற்கு முன்னால் வதங்கிவிழுகிற மெல்லிய பூவைப் போன்று அவ்வளவு மெலிந்தவர்கள் அல்லர் அவர்கள். அவர்கள் முழுபலத்தோடும் வாழ்வை இறுகப் பிடித்துக்கொண்டு "காய்முற்றிக்கனியாகும் வரை இதை விடமாட்டோம்" என்று சொல்கிறார்கள். ஆனந்த மேலீட்டால் தங்களுடைய வாழ்க்கையிலும், தொழிலிலும் தங்களை நன்கு புலப் படுத்த அவர்கள் ஆசைப்படுகிறார்கள். நோவும் துயரமும் அவர்களை மனங்குன்றச் செய்வதில்லை. அவர்களுடைய நெஞ்சுச்சுமை அவர்களைத் தரை யோடு தரையாக அமுக்குவதில்லை. அவர்கள் வெற்றிவீரனைப்போலத் தலைநிமிர்ந்து வாழ்வினூடே ஏறுபோற் பீடுநடை நடக்கிறார்கள். இன்பத்திலும் துன்பத்திலும் மேன்மேலும் பெருகு கிற ஆன்மவொளியில் தங்களைக் காண்கிறார்கள். தங்களைக் காண்பிக்கிறார்கள். பிரபஞ்சத்தில் ஆக்கி அழித்து விளையாடுகிற பராசக்தியின் ஆனந்தத் தோடு இவர்களது வாழ்க்கை ஆனந்தமும் கை கோத்துச் செல்கிறது. சூரிய வொளியின் ஆனந்தமும், சுயேச்சையான காற்றின் ஆனந்த மும் அவர்களுடைய வாழ்க்கை ஆனந்தத்தோடு விரவி உள்ளும் புறமும் கலந்தொன்றாகி இன்பந் தேக்கி இணைகின்றது. இத்தகையவர்களே "தொழிலுக்கு மத்தியிலிருந்துகொண்டுதான் நீ நூறாண்டு வாழ விரும்புவாய்" என்று கூறுகிறார்கள்.

மனிதனுக்கு வாழ்க்கையில் ஆனந்தமும், தொழிலில் ஆனந்தமும் உண்டு என்பது முழு உண்மை. இவைகளை வெறும் மாயை என்று

சொல்வதும் இவைகளை விட்டொழித்தால்தான் தன்னை யுணரத் தலைப்படலாம் என்று சொல்வதும் பயனற்ற சொற்கள். தொழிலைத் துறந்துவிட்டு எல்லையற்ற பரம்பொருளை உணரத் தலைப்படுவது பயனற்றதாகும். வலுக்கட்டாயத்தினுல் மனிதன் தொழிலில் ஈடுபடுகிருன் என்று சொல்வது உண்மையல்ல. ஒரு பக்கம் வலுக்கட்டாயம் இருக்குமானுல் ஒருபக்கம் இன்பமும் இருக்கிறது. ஒருபக்கம் தேவை தொழில் செய்யும்படி மனிதனைத் துரத்துகிறது என்ருல் இன்னொரு பக்கம் தன்னுடைய நிறைவை அடைவதற்காக அத் தொழிலே விரைந்து முன்னேறுகிறது. அதனுலே தான் மனித நாகரிகம் முன்னேற முன்னேற, மனிதன் தன்னிச்சையாக ஏற்படுத்திக்கொள்கிற கடமைகளையும் வேலைகளையும் அதிகப்படுத்திக் கொள்கிருன். மனிதனை அதிகச் சுறுசுறுப்புள்ள வனுக ஆக்குவதற்காக அவனுக்குப் போதுமான வேலையை இயற்கை கொடுத்திருக்கின்றதென்றும், பசி தாகத்தைக் கொடுத்து அவனைச் சாகடிக்கிற தென்றும், யாரேனும் நினைக்கக்கூடும். ஆனுல் உண்மை அப்படியில்லை. பசிதாகத்துக்கு உழைப் பது போதுமென்று மட்டும் அவன் நினைக்கவில்லை. பறவைகள் மிருகங்களோடு இவனுக்கும் பொது வாக இயற்கை கொடுத்துள்ள வேலைகளுடன் இவன் மனநிறைவு கொள்ளமாட்டான். தொழிலி லும் இவன் மற்ற யாவற்றையும் மிஞ்சவேண்டி யிருக்கிறது. எந்தப் பிராணியும் இவனைப்போல அவ்வளவு கஷ்டப்பட்டு உழைக்கவேண்டிய தேவையில்லை. சமுதாயத்திலே மிகப்பெரிய அள விலே தனது தொழில் களத்தை விரிவாக்கும்படி

யான தூண்டுதலேக் கொண்டிருக்கிருன். இவன் தன் தொழில் களத்திலே என்னேரமும் கட்டிக் கொண்டும் இடித்துக்கொண்டும், சட்டங்களே இயற்றிக்கொண்டும் ஒழித்துக்கொண்டும், பொருள்களேக் குவித்துக்கொண்டும், இடைவிடாமல் யோசித்துக் கொண்டும், தேடிக்கொண்டும், துன்பமனுபவித்துக்கொண்டும் இருக்கிருன். இந்தத் தொழிற் களத்தில் அவன் மிகப்பெரிய போர்களே நடத்தியிருக்கிருன். தொடர்ச்சியாகப் புதுவாழ்வைப் பெற்றிருக்கிருன். சாவுக்குச் சிறப்பளித்திருக்கிருன். துன்பங்களினின்றும் தப்புவதற்குப் பதிலாக மனப்பூர்வமாகப் புதுத் துன்பங்களேச் சுமையேற்றிக்கொள்கிருன். இப்போது தன்னேச் சூழ்ந்துள்ள கூட்டினில் தான் முழுமையாக இருக்கவில்லே யென்பதையும், தனது உண்மை நிலே தனது தற்போதைய நிலேமையிலும் பெரிது என்பதையும் அவன் அறிந்திருக்கிருன். முன்னேருமல் இருந்தபடியே யிருப்பது தொந்தரவில்லாமல் சுகமாக இருக்குமென்ருலும், அவ்வாறிருப்பது தனக்கு ஏற்பட்ட காரியத்தையும் தன் வாழ்வின் உண்மையான நோக்கத்தையும் அழிக்கிறதென்பதை அவன் அறிந்திருக்கிருன்.

இந்தப் பெருநாசத்தை அவனுல் சகிக்க முடியாது. ஆகவே தற்போதைய நிலேயைத் தாண்டி உயர்ச்சி பெறுவதற்காகவும் இன்னும் எந்த நிலேயை அடையவேண்டுமோ அந்தநிலேயை அடைவதற்காகவும் வருந்தி உழைக்கிருன்.

இந்த அரிய உழைப்பில்தான் அவனுடைய பெருமையிருக்கிறது. இதை அவன் நன்கு அறி

வான். அறிந்திருக்கிற காரணத்தினுல்தான் அவன் தன் தொழில்களத்தை சுருக்கிக்கொள்ளாமல் அதன் எல்லையை விரிவாக்குவதில் விடாது முனைந்திருக்கிருன். சில சமயம் அவன் அலைகிற அலைச்சலைப் பார்த்தால் அவனுடைய வேலைக்கு அர்த்தமில்லைபோல் தோன்றுகிறது. இங்கும் அங்கும் அவன் பாய்கிற பாய்ச்சல் பயங்கரச் சுழல்களை ஏற்படுத்துகிறது-சுயநலச் சுழல், அதிகார மமதைச் சுழல் முதலியவைகளை உண்டாக்குகிறது. இருப்பினும் எதுவரை வாழ்க்கையாற்றின் ஓட்டம் தடைபடாதிருக்கிறதோ அதுவரை பயமில்லை. தடங்கல்களும், செய்து முடிக்காமல் குவிந்து நிற்கும் காரியங்களும் சிதறுண்டு அவ் வெள்ளத்திலடிபட்டுப் போகும் வேகம், தன்னைத் திருத்திக்கொள்கிறது. ஆன்மா, தொழிலில் ஈடுபடாமல் கட்டுக்கிடையாகத் தேங்கி நிற்கும்போதுதான், அதன் பகைவர்களின் கை ஓங்கிவிடுகிறது. தடங்கல்கள், நீக்க முடியாதபடி குவிந்துவிடுகின்றன. ஆகவே வாழவேண்டு மென்ருல் நாம் வேலை செய்ய வேண்டுமென்றும், வேலைசெய்ய வேண்டுமென்ருல் வாழவேண்டுமென்றும் வாழ்வும் தொழிலும் பிரிக்க முடியாதபடி இணைந்திருக்கின்றன என்றும் நமது ஆன்ருேர்கள் கூறியிருக்கிருர்கள்.

வாழ்வு, தன்மட்டில் நிறைவு கொண்டிருக்கவில்லை. அது, வெளிப்பட்டுத் தோன்றவேண்டும். உள் இயற்கையும் வெளி இயற்கையும் நெருங்கி உறவாடவேண்டும். அதுவே அதன் உண்மை. உயிர் வாழ்வதற்காக, உடல், வெளியிலுள்ள ஒளியோடும் காற்ருேடும் உறவுகொள்ள வேண்டியிருக்

கிறது. உயிர்ச்சக்தியைப் பெறுவதற்காக மட்டு மின்றி அதைப் புலப்படுத்துவதற்காகவும் அவ்வுற வைக் கொள்ளவேண்டும். உடல் தன்னுட்புறத் தில் எவ்வளவு வேலையிலீடுபட்டிருக்கிறதென்பதை உன்னிப்பாருங்கள். அதனுடைய இதயத்துடிப்பு ஒரு விநாடியும் நின்றுவிடக்கூடாது. அதன் வயிறும், மூளையும் இடைவிடாமல் வேலை செய்துகொண்டி ருக்கவேண்டும். இருந்தாலும் இதுவும் போதாது. உடல் தனது வெளிப்புறத்திலும் எப்போதும் ஓய் வின்றி உழைக்கிறது. வெளியில் வேலையும் விளை யாட்டுமான நடனத்தில் ஈடுபடும்படி, அதன் வாழ்வு, அதை நடத்திச் செல்கிறது. உடலின் உட்புறத்தில் சிக்கனமாகக் காரிய நிர்வாகம் பண் ணுவதோடு, அது, திருப்தியடைவதில்லை. வெளி யில் சுற்றியலைந்து திரிவதில்தான், தன்னுடைய மகிழ்ச்சி, நிறைவு பெறுவதை அது காண்கிறது.

ஆன்மாவின் விஷயமும் இப்படியேதான். தன் னுள் தோன்றும் சொந்த உணர்ச்சிகளையும் கற் பனையையும் கொண்டுமட்டும் அது வாழ முடியாது. ஆன்மாவுக்குப் புறப்பொருள்கள் எப்பொழுதுமே தேவை. தன்னுடைய உள்ளுணர்வை வளர்ப்ப தற்கு மட்டுமின்றி, தொழிலில் ஈடுபடுவதற்கும், ஏற்பதற்கு மட்டுமின்றிக் கொடுப்பதற்கும் ஆன்மா வுக்கு புறப்பொருள்கள் தேவை.

மெய்ப்பொருளாக இருப்பவனை இரண்டாகப் பிரித்து வைத்துக்கொண்டு நாம் வாழ முடியாது. இதுவே நிலையான உண்மை. நாம் உள்ளும் வாழ வேண்டும், புறமும் வாழவேண்டும். அவன் உள் ளேயோ புறத்தேயோ இல்லையென்று மறுத்தால்

நம்மை நாம் ஏமாற்றிக்கொள்கிறோம். நஷ்டமடைகிறோம். 'பிரமம் என்னை விட்டு நீங்கவில்லை. நானும் பிரமத்தை விட்டு நீங்காதிருப்பேனாக. ஆன்ம விசாரணையினால் மட்டும் அவனை உணர்வோம், நம்முடைய புறக் காரியங்களின் மூலம் அவனைக் காணமாட்டோம் என்று கூறினாலோ, இதயத்தின் அன்புகொண்டே அவனை அனுபவிப்போம், வெளிப் பணிவிடை மூலம் அவனை வணங்கமாட்டோம் என்று கூறினாலோ, அல்லது இதை மாற்றி வைத்துக் கூறினாலோ, நமது வாழ்வின் இலட்சியத்தை நாடிப் பிரயாணம் செய்யும்போது ஒரு பக்கத்தில் மாத்திரம் பெருஞ் சுமையை ஏற்றிக்கொண்டவர்களாகிறோம். இதனால் தளர்ந்து வீழ்ச்சி அடைகிறோம்.

மேற்கேயுள்ள ஒரு பெரிய கண்டத்தில், மனித ஆன்மா வெளிப்புறத்திலேயே தனது எல்லைகளை பரப்பிக்கொண்டு போவதில் ஈடுபட்டிருப்பதை நாம் காண்கிறோம். அங்கே மனித ஆன்மா தனது வலிமையைச் செலுத்தக்கூடிய புற உலகத்தைத் தனது களமாகவைத்துக் கொண்டிருக்கிறது. வலிமையைப் பரப்புகிற வெளிப்புறத்தில்தான் அது அதிகமாக பிரியப்படுகிறது. உள்ளுணர்வு என்ற அக உலகத்தை, தனது நிறைவை அடையக்கூடிய அக உலகத்தை, அது புறக்கணிக்கிறது. அக உலகத்தை அது நம்புவதுகூட இல்லை. அது புற உலகத்தில் நெடுந்தூரம் போய்விட்டது. எவ்வளவு தூரம் போனாலும் அதன் வாழ்வு நிறைவெய்துவதாகவும் காணோம். அதற்கு நிறைவு இருப்பதாகவும் தெரியவில்லை, உலகம் உயர்வாக

உருவாகிக்கொண்டே யிருக்கிறதென்று அதன் விஞ்ஞானம் பேசிவந்திருக்கிறது. அதன் தத்துவ ஊகங்கள் கடவுளும் உருவாகிக்கொண்டே யிருக்கிருர் என்று பேச ஆரம்பித்து விட்டன. கடவுள் முழுமையாகியே இருக்கிருர் என்பதை அவைகள் ஒப்புவதில்லே. உருவாகிக்கொண்டிருக்கிருர் என்றுதான் மேனுட்டினர் வைத்துக்கொள்கிருர்கள்.

எல்லேயற்ற பொருளானது நாம் கொடுக்கக் கூடிய எந்த எல்லேயையும் தாண்டிய அத்தனே பெரிது என்ருலும் அது பூரணமானது என்பதை மேனுட்டினர் காணத்தவறிவிடுகிருர்கள். ஒருபக்கம் பிரமம் உருவாகிக் கொண்டிருக்கிருன். மற்ருெரு பக்கம் பிரமம் பூரணமாக இருக்கிருன். ஒருபக்கம் உயிர். மறுபக்கம் அதன் தோற்றம். இரண்டும் ஒரே சமயத்தில் கூடவே யிருக்கின்றன. பாட்டும் பாடுகின்ற தொழிலும் கூடவே ஒரே சமயத்தில் தோன்றுவதுபோல. மேனுட்டினர் கூறுவதைப் பார்த்தால், பாடுகிறவன் இருப்பதையே கவனிக்காமல் "பாடுகிற காரியந்தான் நடந்துகொண்டிருக்கிறது. பாட்டு கிடையாது" என்று சொல்வதைப் போல இருக்கிறது. அது உண்மைதான். நாம் நேரடியாக பாடுகிறதைத்தான் அறிகிருேம். பாட்டு முழுவதையும் ஒரே சமயத்தில் ஒருபோதும் அறிவதில்லே. இருந்தாலும் பாட்டு முழுவதும் பாடுகிறவனுடைய ஆன்மாவில் இருக்கிற தென்பதை நாம் அறியமாட்டோமோ?

மேனுட்டில் ஆற்றலேப் பெருக்குவதில் பெரிதும் முனேந்திருப்பதேன் ? எக்காலமும் தொழிலில்

ஈடுபட்டுக்கொண்டே யிருக்கவேண்டும், உருவாகிக் கொண்டே யிருக்கவேண்டுமென்று அவர்கள் வற்புறுத்துகிருர்கள். இது இறுதியில் அதிகார மமதையில் முடிகிறது. இந்த மனிதர்கள் எதையும் கொள்ளையடிப்பதென்றும், எதையும் பலாத்காரத் தால் கைப்பற்றுவதென்றும் தீர்மானங்கொண்டவர் களாகத் தோன்றுகிருர்கள். பிடிவாதமாக எதையும் செய்துகொண்டே யிருக்கிருர்கள். செய்யப்படுவ தற்கு இணங்குவதில்லை. இயற்கைத் திட்டத்தில், சாவுக்கு, அதற்குரிய இடத்தைக் அவர்கள் கொடுப் பதில்லை. பூரணத்தின் அழகை அவர்கள் அறிய முடியவில்லை.

நம்முடைய நாட்டின் ஆபத்து, நேர் எதிர்ப் ப்க்கத்திலிருந்து வருகிறது. நம்முடைய ஓரவஞ் சகம் அகஉலகத்தின் பக்கத்தைச் சேர்ந்திருக்கிறது; அதிகாரத்தையும் விரிவையும் மகா கேவலமாக வெறுத்தொதுக்குகிருேம், பிரமத்தை பூரணத்தன் மை வாய்ந்த முறையில் தியானம் செய்கிருேம். வெளி உலகத்திலே பழகி, தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு உருவாகிக் கொண்டிருக்கிற பிரமத்தை நாம் ஏறிட்டுப் பார்ப்பதில்லை, என்று தீர்மானித்தி ருக்கிருேம். ஆகையினுல்தான் நம்முடைய ஞானி களிடம் உணர்ச்சிப் பரவசத்தையும் அதன் காரண மான வீழ்ச்சியையும் காண்கிருேம். அவர்களுடைய நம்பிக்கை எந்தச்சட்டத்திற்கும் அடிமையாக இருக்காது. அவர்களுடைய கற்பனை கட்டுக்கடங் காமல் உயரும். அவர்களுடைய நடத்தைக்குக் காரணமிருக்காது. படைப்பினின்றும் பிரிக்கமுடி யாத இறைவனைப் பார்ப்பதற்காக அவர்களுடைய

அறிவு கல்லைப்போன்று கடினமாகிவிடும். அவர்களுடைய இதயம் தன்னுடைய சொற்களுக்குள் அவனை அடக்கவேண்டுமென்று முயன்று, மன எழுச்சிப் பெருக்கினல் குடிமயக்கம் பெற்றது போன்று மூர்ச்சையடையும். வெளி உலகச் சட்டங்களுக்குக் கீழ்ப்படியாததால், தொழில் செய்ய வேண்டிய அவசியத்தைப் புறக்கணித்ததால் அவர்கள், ஆண்மையின் வலிமையையும் சக்தியையும் இழந்துவிட்டார்கள். எவ்வளவு தூரம் இழந்து விட்டார்கள் என்பதை அளவிட்டுக் கூறவும் முடியாது.

உண்மையான ஆன்மீகம் என்பது நம்முடைய தெய்விக சாத்திரங்களின்படி, உள்ளும் புறமும் ஒருங்கே கொண்ட உறவில் சமமான வலிவுடையது. உண்மைக்குச் சட்டம் உண்டு. ஆனந்தம் உண்டு. "அவனுக்கு அஞ்சி நெருப்பு எரிகிறது" என்று சொல்லப்படுகிறது. மறுபக்கம் "எல்லாப்படைப்பும் ஆனந்தத்திலிருந்து பிறக்கின்றன" என்று சொல்லப்படுகிறது. சட்டத்திற்குக் கட்டுப்படாமல் சுதந்தரத்தை அடைவதென்பது முடியாது. ஏனென்ருல் பிரமமே ஒருபக்கம் தனது உண்மையால் கட்டுப்பட்டிருக்கிருன். மறுபக்கம் ஆனந்தத்தில் சுதந்தரமாக இருக்கிருன்,

நம்மைப் பொறுத்தவரை, உண்மையின் தளைகளுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்தபோதுதான் நாம் சுதந்தரமான ஆனந்தத்தை முழுதும் பெறுகிருேம். அது எப்படி? வீணையில் இறுக்கப்பட்டுள்ள தந்தி போல. வீணையில் தந்தியை சரியானபடி கட்டியிருக்கும்போதுதான், அந்தக் கட்டுதலில் சிறிதும்

தொய்வு இல்லாதபோதுதான், இசை பிறக்கிறது. தந்தி, இசையினிமையில், தன்னையும் மீறித் தனது உண்மையான சுதந்தரத்தைக் காண்கிறது. ஒரு பக்கம் இவ்வாறு கட்டுத்திட்டமான சட்டங்களால் கட்டுண்டிருப்பதால் இன்னொரு பக்கம் தன்னுடைய சுதந்தரத்தை அது பரக்கக் காண்கிறது. தந்தி, தனதுண்மையை இழந்தபோது, தன்னியல்பை இழந்தபோது, சும்மா கட்டுப்பட்டு மாத்திரம் கிடக்கிறது. அதன் கட்டுகளை அவிழ்த்து விட்டால் அதற்குச் சுதந்தரம் கிட்டாது. மேலும் மேலும் இறுக்கப்பட்டு தன் உண்மையான சுருதியை அடையும்போதே அது தனது சுதந்தரத்தையடைகிறது.

நமது கடமையென்ற வீணைக்கும் கீழ்ஸ்தாயி, மேல்ஸ்தாயி நரம்புகள் இருக்கின்றன. உண்மையின் சட்டத்திற்குப் பொருந்துமாறு அவைகளைச் சுருதிப் படுத்தாதுபோனால் அப்போது அவைகள் நமக்குத் தளைகளாகின்றன. அந்நரம்புகளைத் தளர்த்தி தொழிலற்று இருக்கும்படி செய்துவிட்டால் அந்த நிலைமையைச் சுதந்தரமென்றழைக்க முடியாது. உண்மையையும் தர்மத்தையும் நாடி உண்மையாக உழைப்பதென்றால் அது தொழிலைப் புறக்கணிப்பதனால் முடியாது. அத்தொழிலை நித்திய இணக்கத்தோடு நெருங்கி வரும்படி செய்வதால் உண்மையைக் காணமுடியும். "நீ எந்த வேலைகளைச் செய்தாலும் அவைகளைப் பிரமத்துக்கு அர்ப்பணம் செய்" என்ற வாசகத்துக் கிணங்கியவாறு நமது முயற்சிகள் இருக்கவேண்டும். அதாவது தனது எல்லாக் காரியங்களின் மூலமும் ஆன்மா தன்

னைப் பிரமத்துக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். இந்த அர்ப்பணமே ஆன்மாவின் கீதம். இதில் ஆன்மாவின் சுதந்தரம் அடங்கி இருக்கிறது. எப்பொழுது எல்லாக் காரியங்களும், பிரமத்தோடு நம்மை ஒன்று சேர்க்கும் பாதைகளாகின்றனவோ அப்போது ஆனந்தம் பொங்குகிறது. எப்போது ஆன்மா தனது சொந்த ஆசைகளின் பக்கம் திரும்ப வில்லையோ, எப்போது காரியங்களில் நம்மை நாம் மும்முரமாக ஈடுபடுத்துகிறோமோ, அப்போது ஆனந்தம் ஆட்சி புரிகிறது; நிறைவு ஏற்படுகிறது. சுதந்தரம் நிலவுகிறது. மண்ணுலகத்தில் விண்ணு லகம் வந்திறங்குகிறது.

மனித சமுதாயம் தொழில் மூலமாகத் தன்னை அற்புதமாக வெளிப்படுத்துவதையும், இடைவிடாது தன்னை அர்ப்பணம் செய்வதையும் மூலையிலிருந்து முணு முணுத்துக் கொண்டு அவமதிக்கிறவன் யாவன்? மனித சமுதாயத்தின் பெருமை வான ளாவிய கோபுரம் போல் ஓங்கி நிற்கின்றது. இக் கோபுரத்தை எழுப்புவதற்கு மனித வர்க்கம் முழுதும் வெயிலிலும் மழையிலும் பல்லூழியாகப் பாடுபட்டுக் கொண்டிருக்கும் போது அதைவிட்டு நெடுந்தூரம் விலகித் தன்னந்தனியாய்த் தன் மனக் கற்பனைகளில்தான் இறைவனைச் சேரமுடியு மென்று நினைப்பவன் யாவன்? தனிமையாக ஒதுங்கியிருந்து தியானிப்பதுவே மிக உயர்ந்த முறையான சமயாசாரம் என்று கருதுகின்றவன் யாவன்?

ஏ, சித்தப் பிரமைகொண்ட நாடோடி! ஏ, துறவி! தன்னறிவு என்ற மது மயக்கம் தலைக்

கேறியவனே! மனித சமுதாயம் பரவியுள்ள நாலா பக்கங்களிலும் மனித ஆன்மா முன்னேறிச் செல்லும் ஒலி உன் காதுகளில் விழவில்லையா? வெற்றித் தேரில் இடி முழக்கம் போன்று அது முன்னேறுவது உன் செவிகளில் விழவில்லையா? பிரபஞ்சத்தில் மனித முயற்சி விரிவடைவதை எவையெவை தடுக்கின்றனவோ அவைகளையெல்லாம் மீறிச்செல்லப் போகின்றது அந்தத் தேர், அந்தத் தேரின் மீதுள்ள கொடிகள் வானைத்தொட்டு வீறுடன் பறக்கின்றன. அவைகளுக்கு முன்னுல் மலைகளும் பிளந்து சரிந்து வழிவிடுகின்றன. சூரியனுக்கு முன் பரவிய பனிபோல சடப்பொருள்களின் விளங்காத இரகசியங்கள் அந்தத் தேரின் தடையற்ற சக்கரத்தின் முன் மறைகின்றன. வலி, நோய், குழப்பம் அத்தனையும் அதன் முன் பின்வாங்குகின்றன; அறியாமையின் தடைகள் அப்பால் தள்ளப்படுகின்றன. குருட்டுத் தனத்தின் இருள் பிளக்கப்படுகிறது. செல்வமும் சுகமும், கவிதையும், கலையும், அறிவும், நேர்மையும், பொங்குகிற நாடு உதயமாகும் என்று ஆன்ருேரால் வாக்களிக்கப்பட்ட நாடு இதோ மெல்ல மெல்ல கண்ணுக்குத் தென்படுகிறது. மனித சமுதாயம் என்ற இந்தத் தேர், சரித்திரம் என்ற பாதைவழியாக வெற்றியோடு தரையதிரும்படி முன்னேறிச் செல்லும் போது "அதை நடத்திச் செல்கிற சாரதி கிடையாது. ஆகவே அது சேர்க்கை போய்ச் சேராது" என்று தூங்குமூஞ்சித் தனமாகச் சொல்ல விரும்புகிருயா? இந்த வெற்றி முன்னேற்றத்தில் தன்னுேடு சேர்ந்து கொள்ளும்படி அவன் அழைக்கிருனே, அதில்சேர மறுப்பவன் யாவன்?

இந்த மகிழ்ச்சி நிறைந்த கூட்டத்தைவிட்டு விலகி, தொழிலைத்துறந்து உயிரற்ற வாழ்வில் அவனைத் தேடும்படியாக அவ்வளவு முட்டாளாக இருப்பவன் யாவன்? மனிதர்கள் நிறைந்த இந்தப் பெரிய உலகம், பரவிக்கொண்டிருக்கிற சமுதாயத்தின் நாகரிகம், துக்கத்தின் ஆழங்களினூடும், மகிழ்ச்சியின் சிகரங்களின்மேலும் உள்ளும் புறமும் உள்ள எண்ணற்ற தடைகளினூடும், தனது சக்திகளுக்கு வெற்றி நாடிப் பாடுபடும் மனிதனின் இடையரு முயற்சி ஆகிய யாவற்றையும் பொய் என்று சொல்லக்கூடியவாறு அவ்வளவு தூரம் பொய்யில் மூழ்கிப்பொதிந்து கிடப்பவன் யாவன்? இந்த மிகப்பெரிய வெற்றியை மிகப்பெரிய மோசடி என்று நினைக்கிறவன் உண்மையின் வடிவாக இருக்கிற இறைவனை உண்மையாக நம்புகிருனு? உலகத்தைவிட்டு ஓடுவதன் மூலம் கடவுளைக் காண நினைக்கிறவன் எப்பொழுது எங்கு அவனைக் காணலாமென்று எதிர்பார்க்கிருன்? எவ்வளவு தூரம் ஓடமுடியும்? ஓடியோடிக் கடைசியில் ஒன்று மற்றவெறுமைக்குள் ஓடி முடிவானே? முடியாது, ஓடுகின்ற கோழை எங்கும் அவனைக் காணமுடியாது. நாங்கள், அவனை இங்கே, இந்த இடத்திலேயே இக்கணத்திலேயே சென்றடைகிறோம் என்று சொல்லக்கூடிய அளவுக்கு நாம் துணிவு பெறவேண்டும். நம்முடைய செயல்களின் மூலம், நம்மை நாமே உணருவதைப் போல நம்முயிருக்குயிராக இருப்பவனை நம்முள்ளே நாம் உணருகிறோம் என்று நம்மால் சொல்ல முடியவேண்டும். தொழிற்படும் போது இடையூருக நிற்கும் எல்லாத் தடைகளையும், கோளாறுகளையும், தாறுமாறுகளை

யும் நம்முடைய முயற்சியால் விலக்கிவிட்டு தயக்க மின்றி அவ்வாறு சொல்லுவதற்குரிய உரிமையைப் பெறவேண்டும். "என்னுடைய வேலையில் எனக்கு ஆனந்தமிருக்கிறது. எனது ஆனந்தத்தின் ஆனந்தம் அந்த ஆனந்தத்தில் இருக்கிறது." என்று சொல்லக் கூடியவர்களாக வேண்டும் நாம்.

"பிரமத்தை யறிந்தவர்களில் தலையானவர்கள்" என்று யாரை உபநிஷதங்கள் கூறுகின்றன? "வேலையிலீடுபட்டுள்ளது பிரமம். எவனுடைய ஆனந்தம் பிரமத்திலிருக்கிறதோ எவனுடைய விளை யாட்டு பிரமத்திலிருக்கிறதோ அப்பேர்ப்பட்டவன் பிரமத்தையறிந்தவர்களில் தலையானவன்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனந்தத்தின் விளை யாட்டில்லாமல் ஆனந்தம் ஆனந்தமாகாது. தொழி லற்ற விளையாட்டும் விளையாட்டல்ல. ஆனந்தத்தின் விளையாட்டே தொழில்தான். பிரமத்தில் ஆனந்த முள்ளவன் எவ்வாறு தொழிலற்றிருக்க முடியும்? பிரமத்தின் ஆனந்தம், உருவங்கொண்டு வெளிப் படுவதற்குரிய சாதனத்தை அவன் தனது தொழில் மூலம் கொடுத்துதவ வேண்டாமா? ஆகவே பிரமத்தை அறிந்தவன் பிரமத்தில் தனது ஆனந் தத்தைக் கொண்டவன், தனது எல்லாத் தொழில் களையும் பிரமத்தில் கொண்டிருக்க வேண்டும். உண்ணல், குடித்தல், உழைத்தல், நன்மை செய்தல் ஆகிய எல்லாவற்றையும் பிரமத்தில் நின்று செய் வான். கவிஞனின் ஆனந்தம் அவனுடைய கவிதை யிலும், கலைஞனின் ஆனந்தம் கலையிலும், வீரனின் ஆனந்தம் அவனுடைய துணிவிலும், அறிஞனின் ஆனந்தம் உண்மைகளைக் கண்டுபிடிப்பதிலும்

வெளிப்படுவதற்கு முயலுவதைப்போல, பிரமத்தை அறிபவனுடைய ஆனந்தம் அவனுடைய பெரிதும் சிறிதுமான அன்றாட வேலைகளிலும், உண்மையிலும், அழகிலும், ஒழுங்கிலும், நன்மையிலும் எல்லையற்ற பரம்பொருளை வெளிப்படுத்த முயல்கிறது. பிரமமும் தனது ஆனந்தத்தை அவ்வாறே புலப்படுத்துகிறான். "எல்லாத் திசைகளிலும் பரவிச்செல்லுகிற அவனுடைய பலவிதச் செயல்களால் அவன் தனது வெவ்வேறு ஜீவராசிகளின் அந்தரங்கத் தேவைகளைப் பூர்த்தி செய்கிறான்" அவனே அவைகளின் அந்தரங்கத்தேவை. ஆகையினால் அவனே தன்னை எத்தனையோ உருவங்களில் தருகிறான். அவன் உழைக்கிறான், உழைக்காமல் எப்படி அவனால் தன்னைத்தானே கொடுக்க முடியும்? அவனுடைய ஆனந்தம், தன்னை அர்ப்பணித்து படைப்பு ரூபமாக வெளிப்படுகிறது.

நம்முடைய பிறவிப் பயனும் இதிலேதான் அடங்கியிருக்கிறது. இதில்தான் நாம் நமது தந்தையையொத்திருக்கிறோம். பல நோக்கங்களைக் கொண்ட பலவித வேலைகளுக்கு நம்மை நாம் அர்ப்பணம் செய்ய வேண்டும். "தன்னையே கொடுப்பவன், வலிமையைக் கொடுப்பவன்" என்று வேதங்களில் அவனைச் சொல்லப்பட்டிருக்கின்றது. தன்னைக் கொடுப்பதோடு அவன் திருப்தி அடைவதில்லை. நாமும் அவனைப்போலக் கொடுப்பதற்காக, அவன் நமக்கு வலிமை அளிக்கிறான். அதனாலேதான் உபநிஷத ஞானி, நம்முடைய தேவைகளைப் பூர்த்தி செய்கிறவனை நோக்கி "அவன் நமக்கு நல்ல மனத்தை அளிப்பானாக", அதாவது நமக்கு மிகமிகத் தேவையான நல்ல மனத்தைக் கொடுத்

தருள்வானாக, என்று பிரார்த்திக்கிறார். நம்முடைய குறைகளை நீக்குவதற்கு அவன் மாத்திரம் உழைத்தால் போதாது. நன்மையைச் செய்யும் காரியத்தில் நாமும் அவனோடு சேர்ந்துழைப்பதற்கு விருப்பமும் பலமும் அவன் நமக்கு அளிக்கவேண்டும். அப்போதே அவனுடன் நமக்கு ஏற்படும் ஐக்கியம் பூர்த்தியாகிறது. பிறருடைய குறைதான் நம்முடைய குறையும் என்பதைக் காட்டுகிற மனமே நன்மை செய்யும் மனம். நம்முடைய பல முகச் சக்திகளையும் மனித சமுதாயத்துக்காக உழைப்பதில் ஆனந்தம் இருக்கிறது என்பதைக் காட்டுகிற மனம் நன்மை செய்யும் மனம். இத்தகைய நன்மை செய்யும் மனத்தின் வழிநடக்கும்போது நமது செய்கை ஒழுங்குபடுத்தப்படுகிறது. ஆனால் அச்செய்கை உணர்ச்சியற்ற இயந்திரத்தின் அசைவு போல இருக்காது. அது தேவையால் தூண்டப்பட்ட தொழில் அல்ல. அது ஆன்ம திருப்திக்காகச் செய்யப்படும் காரியம். இத்தகைய காரியம், கூட்டத்தைக்கண்டு குருட்டுத்தனமாகப் பின்பற்றப்பட்டதன்று. கோழைத்தனத்தினால் வெறும் வழக்கத்தை அனுசரித்ததும் அன்று. அக்காரிய மூலமாக "பிரபஞ்சத்தின் தொடக்கத்திலும் இறுதியிலும் அவன் இருக்கிறான்" என்பதைக் காண்கிறோம். அதேபோல நம்முடைய காரியத்துக்கு ஊற்றுக் கண்ணாகவும், ஊக்கமாகவும் பின்னர் அதன் முடிவாகவும் அவன் இருக்கிறான் என்பதையும், ஆகவே நம்முடைய காரிய முழுதும் சாந்தியும், நன்மையும், ஆனந்தமும் விரவியிருக்கிறதென்பதையும் நாம் காண்கிறோம்.

“அறிவு, ஆற்றல், செயல் இவை அவனது இயல்பு” என்று உபநிஷதம் கூறுகிறது. இந்த இயல்பு நம்மிடம் தோன்ருததால், வேலையையும் ஆனந்தத்தையும் பிரித்துவிடுகிருேம். நம்முடைய வேலை நாள், நம்முடைய ஆனந்த நாளாக இருப் பதில்லை-நாம் ஓய்வு நாளைத் தேடுகிருேம். பாவம், வேலையிலே நம்முடைய ஓய்வை நம்மால் காண முடியவில்லை. வெள்ளம், முன்னேறிப் பாய்ந்து செல்வதில், தன் ஓய்வைக் காண்கிறது. நெருப்பு, கொழுந்துவிட்டு எரிவதில் தன் ஓய்வைக் காண் கிறது. மலரின் மணம், பரவுவதில் தன் ஓய்வைக் காண்கிறது. ஆனல் நம்முடைய அன்ருட வேலை யில் நமக்கு ஓய்வு கிடையாது. நம்மை நாமே அதில் பாயும்படி செல்ல விடுவதில்லை. நம்மை நாமே முழுவதும் மகிழ்ச்சியாக அதற்கு அர்ப்பணம் செய்வதில்லையாகையால் நம்முடைய தொழில் நம் மைத் திகைக்க வைக்கிறது.

தன்னைத்தானே கொடுப்பவனே! ஆனந்த ருபனுன உன்னைக் கண்டதும் எமது ஆன்மாக்கள் அழல்போல உன்னை நோக்கிச் சுடர்விட்டோங்க அருள்செய். ஆறுபோல உன்னை நோக்கிப் பாய அருள்செய். இன்ப துன்பத்திலும்,இலாப நஷ்டத்தி லும் உயர்வு தாழ்விலும் எமது வாழ்வை முழுவதும் விரும்புவதற்கு வலிமை கொடு. உன்னுடைய பிரபஞ்சத்தைப் பார்க்கவும் கேட்கவும் அதனுள் முழு ஊக்கத்தோடு உழைக்கவும் போதுமான வலி மையைக் கொடு. எங்களுக்களிக்கப்பட்ட வாழ்வை நாங்கள் முழுதும் வாழ்வோமாக. துணிந்து கொள்வோமாக, துணிந்து கொடுப்போமாக. இதுவே எமது பிரார்த்தனை. உன்னுடைய ஆனந்

தம், தொழிலிலிருந்து வேறுபட்டதாய், மென்மை யானதாய், உருவமற்றதாய், நிலையற்றதாய் இருக்கு மென்ற பலவீனமான கற்பனையை எமது மனத்தை விட்டு அகற்றுவோமாக. எங்கெங்கு உழவன், இறுகிய தரையை உழுகிருனோ அங்கெல்லாம் உன் னுடைய ஆனந்தம் பசும் பயிராகக் குபுகுபுவென்று கிளம்புகிறது. எங்கெங்கு மனிதன் அடர்த்தியான காடுகளை அழித்து, கல்தரையைச் சமமாக்கி அங்கே தனக்கு ஒரு வீட்டை கட்டிக்கொள்கிருனோ உனது ஆனந்தம் அந்த இடத்தைச் சுற்றி, ஒழுங்கு, அமைதி, என்ற உருவத்தில் சூழ்கிறது.

பிரபஞ்சத்தின் தொழிலாளியே! உன்னுடைய பிரபஞ்ச சக்தியின் தடையற்ற ஓட்டம் வஸந்த காலத்தின் வேகமுள்ள தென்றல்போல வருவதா குக, என்று நாங்கள் உன்னிடம் பிரார்த்தனை செய் வோம். மனிதனுடைய வாழ்வு என்ற விரிந்த பரப்பு முழுவதிலும் அக்காற்று வேகமாக வீசுவதாக. பல மலர்களின் மணத்தை அது கொண்டுவருவதாக. அனேக வனங்களின் சலசலப்புகளைக் கொண்டு வருமாக. வற்றி உலர்ந்த எமது ஆன்ம வாழ்வின் களையற்ற தன்மையைப் போக்கி அது இனிமையும் கலகலப்பும் உள்ளதாக்குமாக. புதிதாக விழிப் படைந்த எமது சக்திகள் இலையாகவும், மலராகவும், கனியாகவும் எல்லையற்ற நிறைவை எய்துவதற் காக அலைமோதிக்கொண்டிருக்குமாக.

# அழகை உணர்தல்

நாம் எந்தப் பொருள்களில் மகிழ்ச்சி யடைவதில்லையோ அவைகள் நம்மனத்தில் பெரும் சுமைகளாக இருக்கின்றன. அவைகளை எப்படியாவது ஒழித்தால் சரியென்று நினைக்கிறோம். அத்தகைய பொருட்கள் ஒருகால் நமக்கு உபயோகமுள்ளவைகளாக இருக்கக்கூடும். அப்போது நம்மோடு அவை கொஞ்சநாளைக்கு ஏதோ அரை குறையான உறவு கொண்டிருக்கும். உபயோகம் முடிந்தவுடன் நமக்கு அவை சுமையாகி விடுகின்றன. அப்படியுமில்லை யென்றால் அவை நாடோடிகளைப் போல நமது மனத்தின் விளிம்புகளில் சிறிது அலைந்துவிட்டு மறைந்து விடுகின்றன. எப்போது ஒரு பொருள் நமக்கு மகிழ்ச்சியளிக்கிறதோ அப்பொழுதுதான் அது நமக்கு முழுதும் சொந்தமாகிறது.

நமக்கு இவ்வுலகத்தின் பெரும்பாகம் இருந்தும் இல்லாதது போலத்தான். அதற்காக நாம் அதை அப்படியே விட்டு விடப்போகிறோமோ? கிடையாது. விட்டுவிடுவதால் நம்மை நாம் சிறுமைப்படுத்திக் கொள்வதாகிவிடும். இந்த உலகம் முழுதும் நமக்களிக்கப்பட்டிருக்கிறது. நமது தந்தையின் சொத்தாக இருக்கிற இந்த உலகத்தை நமது உடைமையாக்கிக்கொள்ளும் பொருட்டே நமக்கு ஆற்றல்களும் அளிக்கப்பட்டிருக்கின்றன.

அழகை உணரும் புலன் நம்மிடம் உள்ளது. உணர்வை விரிவுபடுத்துங் காரியத்தில் நம்மிட முள்ள அழகுணர்ச்சியின் பங்கு என்ன? இது கடுமையான ஒளி, இது வெறும் நிழல் என்று பிரித்து, அழகும் ஆபாசமுமாக ஒன்று படாத வண்ணம் உண்மை யிருக்கிறது என்று காட்டுவதா, அதன்வேலை. அப்படியானால் இந்தப் பிரபஞ்சத்தில் அழகுணர்ச்சி, வேற்றுமைகளை உண்டாக்கி, ஒரு பொருளோடு மற்றப் பொருள்கள் உறவு கொள் ளாதவாறு தடைச்சுவர்களை எழுப்புகிற தென்பதை நாம் ஒப்புக்கொள்ளவேண்டும்.

ஆனால் உண்மையில் நிலைமை இப்படி இல்லை. நமது அறிவு நிறைவு பெறுதவரை, தெரிந்த பொருள்கள், தெரியாத பொருள்கள், உவகை யுள்ளவை, உவகையற்றவை என்ற வேறு பாடு நிச்சயம் இருந்துதான் தீரும். உலகத்தில் இவ்வ ளவுதான் மனிதன் அறியமுடியும் என்று சில தத்துவ ஞானிகள் வரம்பு படுத்தியிருந்தாலுங்கூட பொதுவாக மனிதன் தன்னுடைய அறிவுக்கு, கடுமையான அல்லது திட்டவட்டமான எல்லைகளை ஏற்றுக்கொள்வதில்லை. இவை கண்டுபிடிக்கப் படாதவை, இவை கண்டுபிடிக்க முடியாதவை என்று இதற்கு முன்னால் குறிக்கப்பட்டவை களுக்குள், மனிதனுடைய விஞ்ஞானம் ஒவ்வொரு நாளும் முன்னேறிப் புகுந்து கொண்டிருக்கின்றது. அவ்வாறே நமது அழகுணர்ச்சியும் வெற்றிகரமாகத் தனது வரம்புகளைத் தள்ளிக்கொண்டே விரிவு படுத்திச் செல்கிறது. உண்மை யெங்கும் இருக் கின்றது. ஆகவே ஒவ்வொரு பொருளும் நாம்

அறிந்துகொள்ளவேண்டிய பொருளே. அழகு எங்கும் பரவிக்கிடக்கின்றது. ஆகவே எப்பொருளும் நமக்கு மகிழ்ச்சி யளிக்கும்.

ஆதிகாலத்திலே மனிதன் ஒவ்வொன்றையும் உயிரின் இயக்கமாகக் கருதினன். பிறகு மெல்ல, இது உயிருள்ளது, இது உயிரற்றது என்ற திடமான வேறுபாடு கண்டான். இந்த வேறுபாடு தான் அவனுடைய விஞ்ஞானத்தின் ஆரம்பம், விஞ்ஞானம் மேலும் மேலும் முன்னேறும்போது உயிருள்ளவை உயிரற்றவைகட்கு இடையே உள்ள வரம்பு மங்கலாகிக்கொண்டே வருகிறது. அறிவின் தொடக்க நாட்களிலே வேறுபாட்டைக் காட்டும் இவ்வரம்புகள் நமக்கு உதவியாக இருந்தன. விஷயங்களை உய்த்துணரும் நமது புலம் தெளிவு பெறப் பெற, அவ்வரம்புகள் மெல்ல மறைந்து வருகின்றன.

'எல்லையற்ற மகிழ்ச்சியினுல் எல்லாப் பொருள்களும் படைத்துக்காக்கப்படுகின்றன' என்று உபநிஷதங்கள் சொல்லியிருக்கின்றன. படைப்பின் இவ்வடிப்படை உண்மையை அறிந்துகொள்வதற்கு அழகுள்ளவை அழகற்றவை என்ற பிரிவினையில் நாம் தொடங்க வேண்டியிருக்கிறது. அப்போது, ஆழ்ந்த தூக்கத்திலிருந்த நமது உணர்வை ஓங்கியடித்துத் தட்டியெழுப்பி, அழகை, உணர்த்த வேண்டி யிருக்கிறது. பொருள்களுக் கிடையே காணும் வேறுபாடுதான் நமது உணர்வைத் தட்டி எழுப்பக்கூடியதாக இருக்கிறது. ஆகவே நாம் முதன் முதலில், பலநிறங்களும் கூடிக் கதம்பமாக இருப்பனவற்றையும், பட்டையாகவும், கோடுகளாகவும்

உள்ள நிறங்களையும், தாறுமாருகவும் அலங்கோல மாகவும் இருப்பனவற்றையும் அழகு என்று கருது கிறேம். அழகுணர்ச்சி கனியும்போது, வெளிப்பார் வைக்குத் தென்படுகிற வேறுபாடுகள் மறைந்து, சுரபேதங்களினுல் ஏற்படும் இனிமைபோலமாறிவிடு கின்றன. முதன் முதலில் அழகை, அதன் சுற்றுப் புறங்களிலிருந்து தனியாகப் பிரித்தெடுத்து அலாதி யாகக் கொண்டாடுகிறேம். கடைசியில் அதற்கும் மற்றப் பொருள்களுக்குமுள்ள இணக்கத்தைக் காண்கிறேம். அப்போது அழகின்கீதம், பெருங் கூச்சலிட்டு பரபரப்பை ஏற்படுத்தி நமது கவ னத்தை இழுக்கவேண்டிய தேவையில்லை. அது கடுமையைக் கை விட்டுவிடுகிறது. மென்மை உலகத்தை ஆளும் வாரிசாக வரப்போகிறது. அமைதியான இன்னிசையால் நம்மைக் கவர்ந்து கொள்ள முடியும், என்ற உண்மையைப் புலப் படுத்தி நமது கவனத்தைக் கவருகிறது.

நமது வளர்ச்சியின் ஒரு கட்டத்தில், நமது சரித்திரத்தின் ஒரு காலத்தில், அழகை இப்படித் தான் போற்றி வணங்கவேண்டு மென்று ஒரு தனி முறையை உண்டாக்க முயல்கிறேம். அழகை ரசிக் கும் விரிவான கூட்டத்தைச் சுருக்குகிறேம். நாங் களே அழகு ரசிகர் என்று கொஞ்சப் பேர் பெருமை யடிக்க முன் வருகிருர்கள். இந்திய நாகரிகத்துக்கு இறங்கு காலம் ஏற்பட்டபோது மக்கள் உயர்ந்த உண்மையைக் கைவிட்டு விட்டார்கள். வெறும் மூட நம்பிக்கைகள் தங்கு தடையின்றிப் பெருகின. பிரா மணர்களிடம் போலித்தனமும், சடங்குகளைப் பிரமா தப் படுத்தும் தொழிலும் உண்டாயிற்று. அது

போல அழகின் பக்தர்களிடமும், போலித்தனமும், ரசிக்கும் முறைகளைப் பற்றிப் பிரமாதப் படுத்தல் களும் உண்டாகிறது.

அழகை அனுபவித்த வரலாற்றை வரிசையாகக் கவனித்தால், அங்கும் ஒரு விடுதலைக்காலம் வருகிறது. அப்போது சிறு பொருள்களிலும் சரி, பெரும் பொருள்களிலும் சரி அழகைக் காண்கிற காரியம் எளிதாகிறது. அதிசயமானதாகத் தோன்றித் திகைப்பூட்டும் பொருள்களில் தவிர, மற்ற சாதாரணப் பொருள்களிலும் படாடோபமின்றி இணங்கி விளங்கும் அழகை அதிகம் காண்கிறோம். மிகுதியும் திகைப்பூட்டுவனவே அழகுள்ளவை என்று கருதியதைக் கைவிட்டு சாதாரணப் பொருள்களே அழகுள்ளவை என்று கருதத் தொடங்கி, அக் காரியத்தையும் இடையில் எங்கும் நிறுத்தாமல் கடைசி எல்லைவரை விரட்டியடித்துப் பார்த்துவிடுகிறோம். இது ஒருவகையான எதிர்ப்பு. இதில் பல கட்டங்கள். உண்மையாகவே கண்ணுக்குக் குளர்ச்சியானவைகளையும், தொன்றுதொட்டு அழகாகக் கருதப்பட்டவைகளையும் விலக்க முயல்கிறோம், பழைய போக்குக்கு எதிர்ப்பைக் காட்டவேண்டுமென்பதற்காக சர்வசாதாரணப் பொருள்களின் சாதாரணத் தன்மையைப் பற்றிப் பிரமாதப்படுத்தி, அவைகளையும், கொடுந் தன்மையேறிய அசாதாரணப் பொருள்களாக்கத் துணிந்துவிடுகிறோம். ஒற்றுமையைத் திரும்ப உண்டக்குவதன் பொருட்டு வேற்றுமையை உண்டாக்குகிறோம். எல்லாஎதிர்ப்புக்களின் தன்மையும் இப்படித்தான். அழகை அனுபவித்தல் சம்பந்தமாகத் தோன்றிய தற்காலத்திய

எதிர்ப்பை இப்பொழுதே காண்கிறோம். இது ஆபாசம் இது அழகு என்று அவனுடைய அழகுணர்ச்சியில் கடுமையான பாகுபாட்டை உண்டாக்குவது, குறுகிய பார்வையின் கோளாறு என்பதைக் கடைசியில் மனிதன் உணர்ந்துவிட்டான் என்று அவ்வெதிர்ப்பு நிரூபிக்கிறது. சுயநலமின்றி, ஐம்புலன்களின் ஓயாத வேட்கையின்றிப் பொருள்களைப் பார்க்கக் கூடிய தெளிவான சக்தியை அவன் பெற்றபோதே எங்குமுள்ள அழகை அவனால் உண்மையாகக் காணமுடியும். நமக்கு உவகையளிக்காதவை அழகில்லாமலிருக்க வேண்டுமென்ற அவசியமில்லை, மெய்ப்பொருளில் அது தனது அழகைப் பெற்றிருக்கிறது என்பதையும் அப்பொழுதுதான் அவன் காண்பான்.

அழகு எங்குமிருக்கிறது என்று சொல்வதனால் விகாரம் என்ற சொல்லையே நமது மொழியிலிருந்து எடுத்துவிட வேண்டுமென்று நாம் கூற வரவில்லை. உண்மையல்லாதது என்பதாக ஒன்றும் கிடையாது என்று கூறுவது அபத்தமாகும். உண்மையல்லாதது என்பது நிச்சயமாக இருக்கிறது. எங்கே? பிரபஞ்ச அமைப்பில் இல்லை. விஷயங்களை அறிகிற நமது மனோசக்தியில் இன்மையைக் குறிக்கும் அம்சமாக அது இருக்கிறது. மெய்ப்பொருளை அரைகுறையாக உணர்ந்த காரணத்தினால் நமது வாழ்க்கையிலும் கலையிலும் அழகைக் கோணல் மாணலாகக் காட்டுகிறோம். அங்கு விகாரம் ஏற்படுகிறது. ஓரளவு நாம், நம்முள்ளும், எல்லோரிடமும் எல்லாவற்றிலும் தங்கியிருக்கும் உண்மையின் சட்டத்திற்கு மாறாக வாழ்க்கை

நடத்துகிறோம். அதேபோல எங்குமுள்ள ஒற்றுமை என்ற நித்தியச் சட்டத்திற்கு மாறுகச் சென்று விகாரத்தை நம்மால் உண்டாக்க முடியும்.

உண்மையை அறியக்கூடிய புலனால் படைப்பில் உள்ள சட்டத்தை அறிந்துகொள்கிறோம். அழகை அறியக்கூடிய புலனால் பிரபஞ்சத்தில் ஒற்றுமை இருக்கிறதென்பதை அறிந்துகொள்கிறோம். இயற்கைச் சட்டங்களை அறிந்து இயற்கைச் சக்திகளை அடக்கியாண்டு பேராற்றல் வாய்ந்தவர்களாகிறோம். நமது அறவொழுக்கச் சார்பான இயற்கையின் சட்டங்களை அறிந்தபோது, ஆணவத்தை வென்று விடுதலை பெறுகிறோம். அதைப்போல, புற உலகப் பொருள்களில் உள்ள ஒற்றுமையையும் இணக்கத்தையும் நன்கு உணர உணர, படைப்பில் அமையும் மகிழ்ச்சியில் நாமும் அதிகமாகப் பங்கு கொள்கிறோம். நமது கலையில் வெளிப்படும் அழகுணர்ச்சி எல்லாவற்றையும் குறுகிய மனப்பான்மையின்றி தழுவிச் செல்கிறது. நமது ஆன்மா எங்குமுள்ள பொருளோடு இணங்கி யொருமித் திருப்பதை நாம் காணும்போது, உலக ஆன்மாவில் பொங்கிக்கொண்டிருக்கும் ஆனந்தத்தையும் நாம் எங்கும் காண்கிறோம். நம்மிடமுள்ள அழகுணர்ச்சி, நன்மை, அன்பு என்ற வடிவத்தில், வாழ்க்கையில் வெளிப்பட்டு எல்லையற்ற பொருளை நாடிச் செல்கிறது. "அழகே உண்மை, உண்மையே அழகு" என்ற இறுதி உண்மையை அறிய வேண்டுமென்பதே நாம் உயிர்வாழ்வதன் நோக்கம். அன்பைக் கொண்டு நாம் உலக முழுவதையும் அறிய வேண்டும். ஏனெனில் அன்பே உலகத்தைப் பெற்றெடுக்

கிறது, காக்கிறது, மீண்டும் தன்னகத்துள் வர வழைத்துக்கொள்கிறது. பொருள்களின் நடுவுக்கு நுழைந்து சென்று, அங்கிருந்து, பிரமத்துக்கே யுரிய பற்றற்ற இன்ப நிறைவை நாம் சுவைக்க வேண்டும். இதற்குரிய ஆற்றல் நமக்கு எவ்வாறு கிட்டும்? நமது இதயம் கட்டுகளற்று நிறைவான சுதந்திரத்தை அடையும்போது நமக்கு அவ்வாற் றல் கிட்டுகிறது. நாம் அவசியம் அவ்வாற்றலைப் பெற்று இன்ப நிறைவைப் பெறவேண்டும்.

இசை, கலையின் சுத்தமான வடிவம். ஆகை யினால் அது அழகை நேரடியாகக் காட்டுகிறது. அதன் வடிவமும் ஜீவனும் ஒருமித்து எளிமை யோடு விளங்குகின்றன. அதில் அனாவசியப் புறப் பொருள்களின் வில்லங்கம் கிடையாது. எல்லை யற்ற பொருள், படைப்பில் எல்லையுள்ள வடிவங் களில் தோன்றியிருக்கிறதே, இதுவே மோன முள்ளதும் பார்க்கக் கூடியதுமான இசையாக நமக்குப் புலப்படுகிறது. குழந்தை, தான் முதன் முதலில் சொன்ன சொல்லையே கண்டு, ஆச்சரியப் பட்டு இதென்ன மர்மம் என்று நினைக்கிறது. சொன்ன சொல்லையே திருப்பித்திருப்பி மழலை கூறி, முடிவற்ற மகிழ்ச்சியில் அதையே கேட்டுக் கொண்டிருக்கிறது. அந்தக் குழந்தைபோல மாலை நேர ஆகாயமும் களைப்படையாமல் நட்சத்திரங் களைத் திரும்பத் திரும்ப வரவழைத்துக் கொண்டே யிருக்கிறது. ஆடிமாதம் மழைகால இரவில் புல் வெளிமேல், கும்மிருட்டாக இருக்கிறது. உறங்கிக் கொண்டிருக்கிற பூமியின் அமைதிமீது சடசட வென்றடித்துக் கொண்டிருக்கும் மழை, பாட்டம்

பாட்டமாகப் போர்வைகளைப் போட்டு மூடுகிறது. திரும்பத்திரும்ப ஒரே மாதிரியாக இறைந்து கொண்டிருக்கும் மழைச்சத்தம், ஒலியின் இருளோ வெனத் தோன்றுகிறது. நெருங்கி அடர்ந்து மங்கலாகத் தோன்றும் மரவரிசையின் இருளும், தண்ணீரில் மூழ்கி நீந்துகிறவர்களின் தலைகள் போல, வெட்ட வெளியான தரிசுப் பரப்பில் ஆங்காங்கு முளைத்திருக்கும் முட்புதர்களும், ஈரப் புல், நனைந்தமண் ஆகியவைகளின் மணமும், கிராமக் குடிசைகளைச்சுற்றி ஒரே இருட்டாக இருக்க, அதற்கு மேலே உயரக்கிளம்பி நிற்கும் உச்சிக் கோபுரமும்,இவை யாவுமே இரவின் இதயத்திலிருந் தெழுகின்ற ஸ்வரங்களாகத் தோன்றுகின்றன.

ஆகையால் உண்மையான கவிஞர்கள், முக் காலமுமறிகிறவர்கள், பிரபஞ்சத்தை இசைவடிவில் சொல்ல முயல்கிறார்கள். நீல ஆகாயமாகிய படத் திரையில் உருவங்கள் எப்படி உண்டாகின்றன, முடிவற்ற கோடுகளும் நிறங்களும் ஒவ்வொரு நொடியிலும் எவ்வாறு கலக்கின்றன என்பதைத் தெரிவிக்க, படங்களாகிய அடையாளங்களை அவர் கள் கையாளுவதில்லை.

அதற்குக் காரணமிருக்கிறது. படம் வரைப வனுக்கு திரைத்துணி, தூரிகை, வர்ணப்பெட்டி இவையாவும்வேண்டும். தூரிகை கொண்டு அவன் இழுக்கும் முதல் கோட்டுக்கும் முழுப் படத்துக்கும் எவ்வளவோ தூரம். படம் முடிந்தபின்பு, ஓவியனும் போன பின்பு, படம் விதவையாகி நிற்கிறது. காதலோடு இடைவிடாது தொட்டு நின்ற கை, படைக்கும் கை, அகற்றப்பட்டு விட்டது.

ஆனால் இசைவாணனே தன்னுள்ளே எல்லாம் கொண்டிருக்கிறான். அவனுடைய உயிரிலிருந்தே ஸ்வரங்கள் பிறக்கின்றன. அவைகள் வெளியி லிருந்து சேகரிக்கப்பட்ட பொருள்களல்ல. அவனுடைய கருத்தும் அதன் வெளித்தோற்றமும் அண்ணன் தங்கைகள்; பெரும்பாலும் அவை இரட்டைக் குழந்தைகள். பாடுகையில் இதயம் தன்னையே அந்நொடியில் வெளிப்படுத்துகிறது. புறப்பொருளின் இடையூறில்லாமலே அது ஆனந்த மாக இருப்பதாலோ, அது தடைப்படுவதில்லை.

நிறைவடைவதற்கு இசையும் தாமதிக்க வேண்டியிருக்கிறது. இருப்பினும் ஒவ்வொரு அடி யிலும் அது முழுமையின் அழகை வெளிப்படுத்து கிறது. கருத்தை வெளியிடுவதற்கு வார்த்தைகள் கூடத் தடைகள்தான். அவைகளுக்கென்ன அர்த்தம் என்பதை நினைத்துப்பார்க்க வேண்டி யிருக்கிறது. ஆனால் இசை எந்த அர்த்தத்தையும் நம்பிக்கொண்டிருக்கவில்லை; சொற்களாலும் சொல்லமுடியாததை அது சொல்லிவிடுகிறது.

அதுமட்டுமா? இல்லை. இசையும் இசைவாண னும் பிரிக்கவொண்ணாதவர்கள். பாடுவோன் பிரிந் தால், பாடலும் அவனோடு சாகிறது. பாடல், தன் முதல்வனுடைய வாழ்வோடும் மகிழ்வோடும் நித்தியமாய் இணைந்திருக்கிறது.

உலகமாகிய இப்பாடல் ஒரு நொடியேனும் தன் இசைவாணனை விட்டுப் பிரியவில்லை. அவனுக்குப் புறம்பான எப்பொருளாலும் இது ஆக்கப்படவில்லை. அவனது மகிழ்வே முடிவற்ற வடிவங்களெடுக்கின்றது. அந்தப்பெரிய இதயமே

தனது துடிப்பை ஆகாய முழுதும் அனுப்பிக் கொண்டிருக்கிறது.

இந்த இசையின் ஒவ்வொரு அடியிலும் நிறைவு இருக்கிறது. இந்நிறைவு, இசை முற்றுப் பெருத நிலையிலும் அதன் முழு நிலைமையைக் காட்டுகிறது. எந்த ஸ்வரமும் முடிவானதல்ல, இருப்பினும் அது தன்னில் எல்லையின்மையைப் பிரதிபலிக்கிறது.

இந்தப் பிரமாண்ட இசை யினிமைக்குச் சரியான அர்த்தம் என்ன என்பதை நாம் காணத் தவறிவிட்டால் என்ன மோசம்? வீணை நரம்பைத் தொட்டு அதிலுள்ள ஒலிகளத்தனையையும், கை, வெளிக்கொண்டு வருவது போலல்லவா இருக் கின்றது? இது உலகத்தின் இதயத்திலிருந்து வந்து நேரே நம்முடைய இதயத்தில் புகுகின்ற அழகின் மொழி, தழுவிநிற்கும் முத்தம்.

நேற்றிரவு, எங்கும் பரவிய மோன இருளில் தனியாக நின்று நித்தியமான கீதங்களைப் பாடுகிற வனது குரலைக்கேட்டேன். உறக்கத்தால் உணர் வற்றிருக்கும் பொழுதும், பேச்சற்றுத் தூங்குகிற என் உடலில், மேலே நட்சத்திரங்கள் பாடுவதற் கேற்ப உயிரின் நடனம் நடைபெறும் என்று மனத்தில் நினைத்துக்கொண்டே கண் மூடித்தூங்கி னேன். தலைவனது கைபடவும் வீணையிலிருந்து துடித்தெழுகின்ற நாதத்தோடிணைந்து இதயம் துடிக்கும். இரத்தக் குழாய்களில் இரத்தம் குதித்துச் செல்லும், என்னுடலிலுள்ள கோடிக்கணக்கான உயிரணுக்கள் வேகமாய்த்துள்ளும்.

# இறைவனை உணர்தல்

"இப்பிறவியிலேயே இறைவனை அறிய முடிந்தால் மனிதன் மனிதனாகிறான். இல்லாவிட்டால் அவனுக்குப் பெரிய அழிவே" என்று உபநிஷதங்கள் கூறுகின்றன.

சரி, கடவுளை அடைதல் என்றால் அதன் தன்மை என்ன? அனேக பொருள்களைப் போல எல்லையற்றவனும் ஒரு பொருளாக மாட்டான் என்பது தெளிவு. நம்முடைய உடைமைகளோடு எல்லையற்றவனையும் ஒரு பொருளென்று பேர்சூட்டி வைத்துக்கொள்ள முடியாது. அரசியலிலோ, யுத்தத்திலோ, பணம் சம்பாதிப்பதிலோ அல்லது சமூகப்போட்டிகளிலோ நமக்கு உதவி செய்கிற நண்பனாக அவனை வைத்துக்கொள்ள முடியாது. பங்களாக்கள், மோட்டார்கார்கள், அல்லது பாங்கியில் போட்டிருக்கும் பணம் முதலியவைகளோடு சேர்த்துக் கடவுளையும் அந்தப் பட்டியலில் வைத்துக் கொள்ள வேண்டுமென்பது அனேகருக்கு ஆசைதான். இருந்தாலும் அவர்களால் அப்படிச்செய்ய முடியாது.

ஒரு மனிதனுடைய ஆன்மா கடவுளை வேண்டி மறுகும்போது அந்த ஆசையின் உண்மையான இயல்பு என்ன என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டும். எவ்வளவுதான் மதிப்புள்ளதாக இருந்தாலும், தன்னுடைய உடைமைகளோடு புதிதாக

எதையாவது சேர்க்க அவன் விரும்புகிருனு? கண்டிப்பாக இல்லே! பொருள்களேச் சேகரிக்கிறது இருக்கிறதே, அப்பா! அது ஒரு ஓயாத தொல்லே. உண்மையில்,ஆன்மா, கடவுளே நாடும்போது,இந்த ஓயாத தேடல் குவித்தல்களிலிருத்து இறுதியாகத் தப்பவே அவ்வாறு செய்கிறது. புதியதொரு பொருளே ஆன்மா நாடாமல் நிலேயற்றவைகளில் நிலேத்ததையும். எல்லா இன்பங்களுக்கும் நடுவான பேரின்பத்தையும் அது நாடுகிறது. பிரமத்தில் எல்லாவற்றையும் உணருமாறு உபநிஷதம் போதிக்கிறதென்ருல் ஏதாவது அதிகப்படியான பொருளே நாடும்படி அது சொல்லவில்லே. புதியதொரு பொருளே உண்டாக்கச் சொல்லவும் இல்லே.

"பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் இறைவனுல் மூடப்பட்டிருப்பதாக அறிந்துகொள். அவரால் கொடுக்கப்பட்டது எதுவாயினும் அதை அனுபவி. உனக்குச் சொந்தமில்லாத செல்வத்துக்குப் பேராசை கொள்ளாதே."

உள்ளபொருள் யாவற்றினும் இறைவன் நிரம்பியிருக்கிருன் என்பதையும், நாம் பெற்றிருப்பன யாவும் இறைவனுல் கொடுக்கப்பட்டவை என்பதையும் நாம் அறிந்துவிட்டால், அப்போது எல்லேக்குள் எல்லேயற்றவனேயும், கொடைப்பொருளில் கொடையாளியையும் உணர்ந்து கொள்கிருேம். இயற்கை நிகழ்ச்சிகளத்தனேயும் பேருண்மையையே வெளிப்படுத்துகின்றன என்பதையும் எல்லேயற்றவனேடு நமக்கு தொடர்பு உண்டாக்குவதே நம்முடைய உடைமைகளின் பயன் என்பதையும் அறிகிருேம்.

பிற பொருள்களைப் போலப் பிரமத்தைப் பார்க்க முடியுமென்று சொல்லமுடியாது. இந்தப் பொருளில் பார்ப்பதைக் காட்டிலும் அந்தப் பொருளில் தான் அவனை நன்கு காணலாம், இந்த இடத்தில் காட்டிலும் அந்த இடத்தில்தான் நன்கு காணலாம் என்பது கிடையாது. காலை நேர வெளிச்சத்தைப் பெறுவதற்காக நாம் கடைக்குப் போகவேண்டிய தேவையில்லை, கண்களைத் திறந்து பார்க்கிறோம், எதிரில் வெளிச்சம் இருக்கிறது. பிரமம் எங்குமிருப்பதைக் காண்பதற்கு நம்மை நாம் அர்ப்பணம் செய்யவேண்டும், அவ்வளவுதான்.

இதற்காகத்தான் தன்னல வாழ்க்கையிலிருந்து விடுபடுமாறு புத்தன் நம்மைத் தூண்டினான். தன்னல வாழ்க்கையினும் திடமான பூரணம் வாய்ந்ததும் திருப்திகரமானதுமான வேறொரு வாழ்க்கையில்லாதபோது இந்த வற்புறுத்தலுக்குக் கொஞ்சமும் அர்த்தமே யில்லை. தான் வைத்திருப்பதையெல்லாம் கொடுத்தபின் திரும்பப் பெறுவது ஒன்றுமில்லை யென்றால், அதற்காக எந்த மனிதனும் புத்தனுடைய அறிவுரையைக் கருத்தூன்றிக் கவனிக்கப் போவதில்லை. கவனித்தாலல்லவா அதற்கப்புறம் அதில் ஊக்கம் கொள்வது?

ஆகவே நாம் இறைவனைத் தினந்தோறும் வணங்குகிறோம் என்றால் கொஞ்சம் கொஞ்சமாக அவனை நமது உடைமையாக்கிக் கொள்கிறோமென்பதல்ல அதன் அர்த்தம். நாள்தோறும் நம்மை அவனுக்கு அர்ப்பணம் செய்கிறோம். கடவுளோடு நாம் கூடுவதைத் தடுக்கிற இடையூறுகளை விலக்கி, பக்தியினாலும், சேவையினாலும், நன்மையி

னாலும், அன்பினாலும் கடவுளுணர்வை மிகுதிப்படுத்திக்கொள்கிறோம்.

. "தன்னுடைய இலக்கில் முழுதும் புகுந்த அம்பைப்போல நீயும் பிரமத்தில் முற்றிலும் மறைந்துவிடு" என்று உபநிஷதங்கள் கூறுகின்றன. பிரமத்தால் சூழப்பட்டிருக்கிறோம் என்ற உணர்வு நிரம்பப் பெற்றிருத்தல் என்பது, சும்மா மனத்தை ஒருமுகப்படுத்துகிற காரியமல்ல. நமது வாழ்வு முழுவதும் அந்த ஒரு இலட்சியத்தையே கடைப்பிடிக்கவேண்டும். நம்முடைய எண்ணங்கள், செயல்கள், யாவற்றினும் நாம் எல்லையற்ற பரம்பொருளை உணரவேண்டும். உண்மையை உணருகிற இக்காரியம் நமது வாழ்வில் நாளுக்கு நாள் எளிதாகி வருவதாகுக. "எங்கும் பரவியுள்ள ஆனந்தத்தின் சக்தி வானத்தில் நிரம்பியிராவிட்டால், யாரால் வாழ முடியும்? யாரால் அசைய முடியும்?" என்று நினைக்கக்கூடிய அளவுக்கு நமது பரம்பொருளறிவு எளிதாகுமாக. நம்முடைய எல்லாச் செய்கைகளிலும் எல்லையற்ற சக்திகளின் தூண்டுதலை உணர்ந்து மகிழ்வோமாக.

எல்லையற்றது, நம்மால் அடையமுடியாதது, ஆகவே நம்மைப் பொறுத்தவரை அது இல்லாதது போலத்தான், என்று யாரும் சொல்லலாம். அடைதல் என்ற சொல் உடைமையைக் குறிக்குமானால், எல்லையற்றது அடைய முடியாததே. ஆனால் மனிதனுடைய மிக உயர்ந்த இன்பம் எதையும் உடையவனாக இருப்பதில்இல்லை. அடைந்தும் அடையாததாக இருக்கிறதே, அத்தகைய அடைதலிலே தான் உயர்ந்த இன்பம் இருக்கிறது.

நாம் உடலின்பங்களைப்பற்றிக் கவனிப்போம். இன்னும் கொஞ்சம் அனுபவிப்பதற்கு அவை இடம் விட்டு வைப்பதில்லை. பூமியைச் சுற்றுகிற துணைக்கிரகமாகிய சந்திரனைச் சுற்றிக் காற்று இல்லாததுபோல, உடலின்பங்களைச் சுற்றிக் கொஞ்சம் இடைவெளி யிருக்கிறதா என்ருல் இல்லை. உணவை உண்டு பசி தணிக்கிருேமே, அது உடைமையாக்கிக் கொள்ளுகிற ஒரு முழுக்காரியம். சாப்பிட்டு முடிகிறவரை உண்பது இன்பம் தரு கிறது. அப்போது உணவின்பம் ஒவ்வொரு நொடி யிலும் எல்லையற்ற பொருளைத் தொடுகிறது. ஆனுல் அது முற்றுப்பெறும்போது அதாவது உண்ணுதலிலுள்ள ஆசை, தன் காரியத்தைச் செய்யமுடியாத கட்டத்தின் எல்லைக்கு வந்தபோது, அது தன் இன்பத்தின் முடிவுக்கும் வந்துவிடு கிறது. நம்முடைய அறிவைச் சார்ந்த இன்பங் களை அனுபவிக்கும்போது, இன்னும் ஏற்றுக் கொள்ளக்கூடிய இடம் நிரம்ப இருக்கிறது. எல்லை, தள்ளி அப்பால் இருக்கிறது. நாம் மிக ஆழ்ந்த அன்பு செலுத்தும்போதும், அடைதல், அடையாதிருத்தல், என்ற காரியங்கள் ஒரேயள வினவாக முடிவுருமல் நெடுகலும் செல்கின்றன. நம்முடைய வைணவப் பாடல்கள் ஒன்றில் காதலன் காதலியிடம், "பிறந்தது முதல் நான் உன் முக அழகைப் பார்த்துக்கொண்ருந்ததுபோல இருக்கிறது. இருந்தாலும் என் கண்களின் பசி நீங்கியபாடில்லை : இலட்சக்கணக்கான வருஷங்கள் நான் உன்னை மார்போடணைத்துக் கொண்டிருந் ததுபோலிருக்கிறது. இருந்தாலும் எனது உள்ளம் திருப்தி யடையவில்லை" என்று சொல்லுகிருன்.

நமது இன்பங்களில், உண்மையில் நாம் எல்லை யற்றவனைத்தான் தேடுகிறோம் என்பது இதனால் தெளிவாகிறது. பணக்காரனாக இருக்க வேண்டு மென்று ஆசைப்படுகிறோமே, அந்த ஆசை ஏதோ ஒரு குறிப்பிட்ட தொகை வேண்டுமென்பதற்காக அல்ல. அந்த ஆசையை இன்னதென்று சொல்லி விடமுடியாது. மிக வேகமாக மறைகின்ற இன்ப மும், நித்தியப் பொருள் நம்மை ஒரு நொடி நேரம் தொட்டுவிட்டுச் செல்வதால் ஏற்படுகிறது. நாம் வைத்துக்கொள்ளக்கூடிய பொருள்களை விரிவு படுத்த வீணாக முயலுவதால் வாழ்வில் சோகம் நேருகிறது. இப் பொருள்கள் எல்லையற்றதாக ஒருபோதும் ஆகா. எல்லையுள்ள பொருள்களை மேலும் மேலும் அறிவீனமாய்க் குவிப்பதன் மூலம் எல்லையற்றவனை அடைதல் இயலாது.

நம்முடைய எல்லா உடைமைகளையும் தாண் டிக் கடந்து செல்வதே நமது ஆன்மாவின் உண் மையான ஆசையென்பது இதிலிருந்து தெளி வாகிறது. தான் தொடக்கூடியதும், உணரக்கூடி யதுமான பொருள்களால் சூழப்பட்ட ஆன்மா "பொருள்களைச் சேர்த்துச் சேர்த்துச் சலித்து விட்டேன். ஐயோ! அடைய முடியாதவன் எங்கு ளான்?" என்று கதறுகிறது.

மனித ஆன்மாவின் ஆழத்தில், துறவுணர்ச்சி, அடிப்படையான உண்மையாக இருக்கிற தென் பதை மனித சரித்திரத்தில் எங்கும் காண்கிறோம். ஆன்மா ஏதாவதொரு பொருளை நோக்கி "இது எனக்கு வேண்டாம், நான் இதனினும் மேம்பட் டவன்" என்று கூறுமேயானால் அப்போது அது

தன்னிடமுள்ள உயர்ந்த உண்மையை வெளியிடு கிறது. ஒரு பெண் விளையாட தனக்கு பொம்மை வேண்டும் என்ற அவசியத்தை மீறியபோது, பொம்மையைக் காட்டிலும் ஒவ்வொரு வகையிலும் தான் மேலானவள் என்பதை அவள் உணரும் போது, அதை அவள் எறிந்துவிடுகிறுள். பொருள் களை உடைமையாகப் பெற்றிருக்கிறே மென்பதே, நாம் அவைகளைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் என்ப தைக் காட்டுகிறது. நம்மைக் காட்டிலும் தாழ்ந்த பொருள்களோடு கட்டுண்டிருப்பது முழுத்துயர மாக இருக்கும். மைத்திரேயியின் கணவன், தன் வீட்டைவிட்டுச் செல்லும்போது, பொருளை யெல் லாம் அவளிடம் கொடுத்தான். அச்சமயம் மைத் திரேயிக்கும் இவ்வித எண்ணம்தான் தோன்றியது. "இப்பொருள்கள் உயர்ந்தவனை அடைவற்கு உதவுமா அல்லது எனது ஆன்மாவைக் காட்டிலும் இவை எனக்கு உயர்ந்தனவா" என்று கேட்டாள். "அதிகமான பொருள்களைக் கொண்ட பணக் காரியாக நீ யிருப்பாய்" என்ருர் அவர். உடனே அவள் "இவைகளை வைத்துக்கொண்டு நான் என்ன செய்வது?'' என்று கேட்டாள். தன் உடை மைகளின் உண்மைத் தன்மையை உணர்ந்த போதுதான் மனிதன் அவைகளைப் பற்றிய மயக்கம் நீங்கியவனுகிறுன். தன்னுடைய ஆன்மா, இவை களைக்காட்டிலும் எவ்வளவோ உயர்ந்தது என்பதை அறிகிறுன். அவைகளின் தளையிலிருந்து விடுதலை பெறுகிறுன். இவ்விதமாக மனிதன் தன் உடை மைகளின் தேவைகளை மிஞ்சி நிற்கும்போது உண் மையாகத் தனது ஆன்மாவை உணருகிறுன். நித்திய வாழ்வை நோக்கிச் செல்லுகையில் துறவு

என்ற ஏணியில் பல படிகளைக் கடந்தே முன்னேற வேண்டியிருக்கிறது.

எல்லையற்றவனை நாம் முழுவதும் கைக்கொள்ள முடியாது என்பது வெறும் விவகார வார்த்தையல்ல. அதை நாம் அனுபவத்தில் உணரவேண்டும். அந்த அனுபவமே ஆனந்தம். வானத்தில் பறக்கும் போது சிறகடிக்கும் ஒவ்வொரு சமயத்திலும் வானம் எல்லையற்றது என்பதையும், தன்னுடைய சிறகு வானத்திற்கப்பால் தன்னைக் கொண்டு செல்லாதென்பதையும், பறவை உணரும். அவ்வுணர்வில், அதன் ஆனந்தம் இருக்கிறது. பறவையின் கூட்டிலும் வானம் இருக்கிறது. ஆனால் அங்கு வானம் எல்லைப்பட்டிருக்கிறது. பறவையின் வாழ்க்கைக் காரியங்களனைத்தையும் கூட்டுக்குள்ளேயே யிருந்து நடத்திவிடலாம். ஆனால் தேவைக்கு அதிகமாக அங்கு வானம் இல்லை, தேவைக்குப் போதுமான அளவுக்குள் பறவை இன்பமடையாது. தான் விரும்பக்கூடிய அளவைக் காட்டிலும், தன்னால் உணரக்கூடிய அளவைக் காட்டிலும் எவ்வளவோ அதிகம் பெற்றிருக்கிறோம் என்பதை அது அறிந்தபோதுதான், பறவை மகிழ்ச்சியடைய முடியும்.

நமது ஆன்மா எல்லையற்ற பரம் பொருளில் ஓங்கிப்பறக்க வேண்டும். தனது இலட்சியத்தின் இறுதியை அடைய முடியவில்லை என்று ஒவ்வொரு கணமும் அது உணரவேண்டும். அத்தகைய உணர்வில்தான் அதற்கு மேலான ஆனந்தமும் இறுதியான விடுதலையும் இருக்கிறது.

. எந்தப்பொருளையும் அடைவதில் மனிதனு டைய நிலையான இன்பம் இல்லை. தன்னைக்காட் டிலும் உயர்ந்த ஒன்றுக்குத் தன்னைக் கொடுக்க வேண்டும். அதில்தான் அவனது நிலைத்த இன்பம் இருக்கிறது. தன்னுடைய சொந்தத் தனி வாழ்வை மிஞ்சிய மேலான கருத்துக்களுக்கும், நாடு, மனித சமுதாயம், கடவுள் என்ற கருத்துக்களுக்கும் அவன் தன்னைக் கொடுக்கவேண்டும். தன்னுயிர் உள்பட தான் வைத்திருப்பவைகளை விட்டுப் பிரிவது, அவனுக்கு அப்போது எளிதாகிறது. இவனுடைய உடைமைகள் யாவற்றையும் தன தாக்கி அவைகளின் மீதுள்ள பற்றுதலிலிருந்து அவனை விடுவிக்கிற ஏதாவதொரு உயர்ந்த கருத்தை அவன் கண்டுகொள்ளும் வரை, அவனு டைய வாழ்வு துன்பமயமாக இருக்கிறது. புத்தன், இயேசு, இன்னும் நமது பெருந்தீர்க்கதரிசிகளனை வரும் இத்தகைய உயர்ந்த கருத்துக்களின் பிரதி நிதிகளாக நிற்கிறார்கள். நம்முடைய பொருள் களனைத்தையும் துறத்தற்குரிய சந்தர்ப்பங்களை இவர்கள் நமக்களிக்கிறார்கள். தெய்வீகப் பிச்சைப் பாத்திரத்தை ஏந்திக்கொண்டு அவர்கள் வரும் போது நம்மால் கொடுக்காமல் இருக்க முடியவில்லை. எவ்வளவுக் கெவ்வளவு கொடுக்கிறோமோ அவ்வள வுக்கவ்வளவு எல்லையற்ற பொருளோடு நாம் ஒன்றுகிறோம். ஆகவே கொடுப்பதில்தான் நமது உண்மையான ஆனந்தமும் விடுதலையும் இருக்கிற தென்பதைக் காண்கிறோம்.

மனிதன் நிறைவு பெற்றவனல்லன்; இனிமேல் தான் நிறைவுபெற வேண்டும். இப்பொழுதிருக்கிற

நிலைமையில் அவன் சின்னவனுக இருக்கிருன். என்றென்றைக்கும் இப்படியே அவன் நின்று விட வேண்டியவன்தான் என்ருல் அதைக் காட்டிலும் வேருெரு கொடிய நரகத்தை நம்மால் கற்பனை செய்யமுடியாது. இனிமேல் ஏற்படப்போகிற நிலைமையில் தான் அவனுடைய சுவர்க்கமும் விடுதலையும் இருக்கிறது. அங்கே அவன் எல்லையற்றவனுக இருக்கிருன். இப்பொழுதிருக்கிற நிலைமையில் எதனையெல்லாம் தனதாக்கிக் கொள்ளலாம், அனுபவித்துத் தீரலாமென்பதிலேயே ஒவ்வொரு நொடியும் அவன் ஈடுபட்டுள்ளான். அவனுடைய வருங்கால நிலைமை, பெற முடியாததும், பெறமுடியாததாகையால் இழக்கமுடியாததும் ஆகிய ஒன்ருகும். அதைப் பெறுவதற்காக மறுகிக்கொண்டிருக்கிருன்.

நமது வாழ்வில் இரண்டு கோடிகள் இருக்கின்றன. ஒன்று எல்லையுள்ளது, மற்ருென்று எல்லையற்றது. எல்லைக்கோடி அவசிய உலகத்தில் இடம் பெற்றிருக்கிறது. அங்கே மனிதன் உயிரோடிருப்பதற்காக உணவைத் தேடவேண்டிய அவசியமிருக்கிறது. உடலை வெதுவெதுப்பாக வைத்துக்கொள்வதற்காக உடையைத் தேடவேண்டியிருக்கிறது. இந்த உலகில்—இயற்கை உலகில் பொருள்களைச் சம்பாதிப்பதே அவனுடைய வேலை. இயற்கை வசப்பட்ட மனிதன் தனது உடைமைகளைப் பெருக்குவதில் ஈடுபட்டிருக்கிருன்.

பொருள்களைச் சம்பாதித்தல் என்பது முழுக் காரியமல்ல. மனிதனுடைய தேவைகளோடு அது நின்றுவிடுகிறது. நமக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவைத்தான் நாம் கொள்ள

லாம். பாத்திரத்திலே எவ்வளவு இடமிருக்கிறதோ அவ்வளவுக்குத்தான் தண்ணீர் கொள்ளும். உண்கிற காரியத்தில்தான் உணவுக்கும் நமக்கும் உறவு. வசிக்கிற அளவுக்குத்தான் வீட்டுக்கும் நமக்கும் உறவு. நம்முடைய குறிப்பிட்ட ஒரு தேவையை ஒரு பொருள் பூர்த்தி செய்யும்போது அது நல்லது என்று சொல்கிறோம். இவ்வாறாக, பெறுவது என்றால் குறையாகப் பெறுவது என்பதுதான் அர்த்தம். வேறு மாதிரி அது இருக்க முடியாது பொருள்களைச் சேர்க்க வேண்டுமென்ற அவா நம்முடைய எல்லைக்குட்பட்ட இயற்கையைச் சேர்ந்ததாகும்.

ஆனால் எல்லையற்ற நிலைமையை நாடிச் செல்லும் நமது தன்மையிருக்கிறதே அது பணத்தைத் தேடுவதில்லை ; விடுதலையையும் ஆனந்தத்தையும் அது நாடுகிறது. அங்கே அவசியத்தின் ஆட்சி முடிந்துவிடுகிறது. அங்கே நமது வேலை எதனையும் பெறுவதல்ல, . ஆனால் நமது வேலை என்ன ஆவது? பிரமத்தோடு ஒன்றுவது. எல்லையற்ற பரம்பொருளின் உலகம், ஒற்றுமை உலகம். ஆகவே உபநிஷதங்களும் “ கடவுளையறிந்தவன் உண்மையான மனிதன் ” என்று கூறுகின்றன. ஆகுவதே இங்கே நடக்கும் காரியம், அதிகம் பெறுவதல்ல. சொற்களுக்கு அர்த்தம் தெரிந்த போது, சொற்கள் பெரிதாகத் தோன்றா. கருத்தோடு ஒன்றுபடும்போது அவைகள் தமது பயனை அடைகின்றன.

“ நானும் எனது தந்தையும் ஒன்று ” என்றும், ‘‘கடவுளைப்போல நீங்களும் பூரணத் தன்மையைப் பெறுங்கள்” என்றும் தனது சீடர்களுக்குச்

சொன்னவனைத் தமது குருவாக மேல்நாடு ஏற்றுக் கொண்டபோதிலும், நாம் எல்லையற்றவனோடு ஒன்றாகக்கூடும், என்ற கருத்து அதற்குச் சம்மதமில்லை. மனிதன் கடவுளாவது என்ற கருத்தை தெய்வ நிந்தையாக மேனாடு கண்டிக்கிறது. கடவுட் கலப்பு என்ற கருத்தை கிறிஸ்துநாதரும் போதிக்கவில்லை. கிறிஸ்தவச் சித்தர்களும் போதிக்கவில்லை. ஆனால் இதுவே மேனாட்டுக் கிறிஸ்தவர்களிடையே பரவி யிருக்கிறது.

ஏதாவது உலகக் காரியங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக்கொள்ளும்பொருட்டு கடவுளைச் சம்பாதிப்பது தன்னுடைய வேலையல்ல என்று கிழக்கத்திய உயர்ந்த ஞானம் கருதுகிறது. மேலும் மேலும் கடவுளோடு ஒன்றாகுவதே நாம் செய்யக் கூடிய காரியம். வேற்றுமை சார்ந்த உலகாகிய இயற்கை உலகில், பொருளைப் பெருக்கியே வளர்கிறோம். ஒற்றுமை உலகாகிய ஆன்ம உலகில் நம்மையிழந்து ஒன்றுகூடுவதன் மூலம் வளர்கிறோம். ஏற்கெனவே கூறியுள்ளபடி ஒரு பொருளைப் பெறுதல் என்றால் குறைவாகப் பெறுதலாகும். அது ஒரு குறிப்பிட்ட தேவைக்குத் தான் அப்பொருள் வேண்டும்; ஆனால் "ஆவது" என்பது நமது பூரணத்தைச் சேர்ந்தது. அது ஏதாவது ஒரு அவசியத்தால் எழுந்ததல்ல. எல்லை யற்ற பொருளோடு நமக்குள்ள தொடர்பால் அது உண்டாவது. நமது ஆன்மாவிலுள்ள பூரணத் தன்மையே இத்தொடர்புக்குக் காரணம்.

ஆம், நாம் பிரமம் ஆகவேண்டும். இதை ஒப் புக்கொள்வதற்கு நாம் தயங்கக்கூடாது. இருக்கிற

தில் எது உயர்ந்த பூரண நிலையோ அதையடைய முடியும் என்ற நம்பிக்கையை நாம் கொள்ள முடியா தென்ருல், நம்முடைய வாழ்வு பயனற்றது. அடைய முடியாத இலட்சியமிருக்கிறதென்ருல் அது இலட்சியமேயில்லை.

சரி. அப்படியாஞல் பிரமத்துக்கும் நமது சொந் தத் தனி யான்மாவுக்கும் வேறுபாடு இல்லையா என்று கேட்கலாம். உண்மை, வேறுபாடு வெளிப் படையாக இருக்கிறது. அதை மாயையென்ரூே அறியாமையென்ரூே வேறு எந்தப்பேரைச் சொல்லி யாவது அழையுங்கள். அது இருக்கத்தான் செய் கிறது. அதற்கு விளக்கங்கள் கொடுக்கலாம். ஆனுல் அதை ஒழித்துவிட முடியாது. மாயையும் மாயா ரூபத்தில் உண்மையாகத்தானிருக்கிறது. பிரமமே பிரமமாக இருக்கிறது. அது பூரணத்தின் எல்லையற்ற இலட்சியமாக இருக்கிறது. ஆனுல் நாம் இருக்கவேண்டிய உண்மை நிலையில் இல்லை. நாம் இனி உண்மையாக வேண்டியிருக்கிறது, பிரமமாக வேண்டியிருக்கிறது. இருப்பது, ஆவது, என்ற இரண்டுக்கும் உள்ள உறவில் நித்தியமான காதல் விளையாட்டு நடை பெற்றுக்கொண்டிருக்கிறது. இக் காதல் விளை யாட்டு வெளிப்படக்காணுத ஒரு இரகசியம். இந்த இரகசியத்தின் ஆழத்திலிருந்து, முடிவற்றுத் தொடர்ச்சியாக நடக்கும் படைப்பைத் தாங்குகிற உண்மையும் அழகும் பிறக்கின்றன.

ஓடிக்கொண்டிருக்கிற ஓடையின் இசையில் "நான் கடல் ஆவேன்" என்ற ஆனந்த உறுதி ஒலிக்கிறது. இது வீணுன ஆசையல்ல, ஆனுல்

உண்மையான பணிவு. ஏனெனில் இதுதான் உண்மை. ஆற்றுக்கு வேறு வழி கிடையாது. அதன் இரு கரைப்பக்கங்களிலும் ஏராளமான வயல்களும், காடுகளும், கிராமங்களும், நகரங்களும் இருக்கின்றன. அவைகளுக்கு, ஆறு, பல வகையில் உதவலாம், சுத்தம் பண்ணலாம், ஊட்டலாம், உண் பிக்கலாம், விளைபொருள்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுசெல்ல உதவலாம். ஆனால் இவைகளோடு அது கொண்ட உறவு முழு உறவாக இருக்காது. அவைகளுக்கிடையே எவ் வளவுதான் அதிகம் தங்கினாலும், ஆறு தனியாகவே இருக்கிறது. அது தானே ஒரு நகரமாகவோ காடாகவோ முடியாது.

ஆனால் அது கடலாக முடியும், அது கடலா கவே ஆகிறது. மெதுவாக நகருகிற தண்ணீர், அசைவற்ற பெரிய சமுத்திரத் தண்ணீரோடு தொடர்பு கொண்டிருக்கிறது. போகிற பாதையில் கணக்கற்ற பொருள்களுக் கிடையே நகருகிறது. அது கடலை அடைகிறபோது தன்னுடைய போக் கின் முடிவை அடைகிறது.

ஆறு, கடலாகலாம் ஆனால் அது கடலைத் தனது பாகமாக ஆக்கிக்கொள்ள முடியாது. தற் செயலாக, எங்காவது, ஒரு அகலமான நீர்ப்பரப்பை வளைத்துக்கொண்டு கடலைத் தனது பாகமாக ஆக்கிக்கொண்டதாக அது பாவனை செய்யுமானால் அது உண்மையல்ல என்பது நமக்குத் தெரியும். எல்லை கட்டமுடியாத பெரிய சமுத்திரத்துக்கும் போய்ச் சேர்ந்து அது தனது ஓய்வைப் பெற வேண்டுமென்பதை நாம் அறிவோம்.

ஆறு கடலாக முடியும். அதுபோல ஆன்மா வும் பிரமமாக முடியும். ஆன்மா மற்றவைகளை யெல்லாம் அங்கங்கே தொடுகிறது, பிறகு அவை களை விட்டு மேலே செல்கிறது. ஆனால் பிரமத்தை விட்டு நீங்கி அதற்கப்பால் அதனால் செல்ல முடியாது. பிரமத்தில் ஒன்றுவது என்ற தனது இறுதி லட்சியத்தை அது எப்போது அடை கிறதோ அப்போது அதனுடைய இயக்கங்களெல் லாம் அர்த்தம் கொள்கின்றன. எல்லையற்ற ஓய்வு என்ற சமுத்திரமே முடிவற்ற காரியங்களுக்குக் காரணமாக இருக்கின்றது. பூரணமாகி இருக்கின்ற பொருளின் நிறைவான நிலை, பூரணம் ஆகிக் கொண்டிருக்கிற பொருளின் குறைபாடுள்ள நிலைக் கும் அழகுத் தன்மையைக் கொடுக்கிறது. அந்த அழகு கவிதை, நாடகம், கலை முதலியவற்றில் வெளிப்படுகிறது.

ஒரு கவிதையில் முதலிலிருந்து கடைசிவரை ஒரு முழுக் கருத்து உயிர் கொண்டிருக்கவேண்டும். அப்போது அக்கவிதையின் ஒவ்வொரு வாக்கியமும் அந்தக் கருத்தையே தொடுகிறது. கவிதையில் பரவி யுள்ள கருத்தை வாசகர் உணரும்போது, அக் கவிதையை வாசிப்பதால் பெருமகிழ்ச்சி உண்டா கிறது. முழுப்பாடலின் ஒளியால் அதன் ஒவ் வொரு பாகமும் பொருள் விளங்கிப் பிரகாசிக் கிறது. முழுக்கருத்தை வெளிப்படுத்தாமல் இங்கு மங்கும் சில சில்லரைக் கற்பனைகளைச் சிதறிக் கொண்டே முடிவில்லாமல் போய்க்கொண்டிருந் தால் அக்கவிதை எவ்வளவுதான் அழகு வாய்ந்த தென்றாலும் அது நமக்குச் சலிப்புத் தட்டிவிடும்.

பெரிதும் பயனற்றதாகவும் இருக்கும். நம்முடைய ஆன்மாவின் முன்னேற்றமும், கவிதையின் முன் னேற்றம் போன்றது. ஆன்மாவும் ஒரு எல்லை யற்ற நோக்கத்தைக் கொண்டிருக்கிறது. அதை உணர்ந்தபோது காரியங்களனைத்தும் பொருளும் பயனும் உடையதாகின்றன. அதன் காரியங்களை இறுதி நோக்கத்தோடு சேர்க்காமல் பிரித்துவைத் துப் பார்ப்போமானால், எல்லையற்ற ஓய்வைக்காணா மல் எல்லையற்ற ஓட்டத்தைமாத்திரம் காண்போ மானால், அப்பொழுது வாழ்வு ஒரு கொடிய துன்ப மாகத் தோன்றுகிறது. பயனற்ற நிலைக்கே, அது வேகமாகப் பாய்ந்துகொண்டிருக்கிறது.

நாங்கள் சிறுபிள்ளையாக இருக்கும்போது எங்களுக்கு ஒரு ஆசிரியர் சமஸ்கிருத இலக்கணம் கற்பித்தார். இலக்கணம் சூத்திரங்களைக்கொண்டி ருக்கிறது. அதன் பொருளைச் சொல்லாமல் புத்தகம் முழுவதையும் பாராமல் படிக்கச் சொன் னார். ஒவ்வொரு நாளும் கஷ்டப்பட்டுப் படித் தோம். எதற்காக என்பது எங்களுக்குச் சிறிதும் தெரியவில்லை. ஆகவே பாடம் சம்பந்தப்பட்டவரை ஒரே துன்பமாகவே யிருந்தது. உலகத்தில் எவ் வளவு வேகமாகக் காரியங்கள் நடக்கின்றன என்று சிலர், காரிய வேகத்தைக் கவனிப்பார்களே தவிர பூரணத்தின் எல்லையற்ற ஓய்வைக் காணமாட்டார் கள். அந்த எல்லையற்ற ஓய்விலிருந்து பிறந்த தால் பிரபஞ்சக் காரியங்கள் ஒன்றுக்கொன்று முரண்படாமல், இசைந்து, பொருந்தி, ஒற்றுமை யாக நடைபெற்று நிதானத்தை அடைகின்றன. வாழ்க்கையையும் வெறும் ஓய்வற்ற வேலையென்று

கருதும்போது நாம் உண்மையைக் காணத் தவறி விடுகிறோம். ஆகவே வாழ்வில் நமக்கு மகிழ்ச்சி யில்லாமல் போய்விடுகிறது. பரதநாட்டியம் ஆடு வதைப் பார்க்கும்போது, ஆடுபவளுடைய கைகால் கள் ஏதோ ஒரு இரக்கமற்ற கொடிய விதி வசத் தினல் ஆடுகின்றன என்று நினைக்கிருேமே யொழிய அவை தன்னிச்சையாகவும் அழகாகவும் அசைவதற்குக் காரணமாக இருக்கிற நித்திய இசையை நாம் கேட்பதில்லை. இவ்வசைவுகள் வளர்ந்து வளர்ந்து பூரணத்தின் இசையாக மாறு கின்றன. அதோடு ஒன்ருகின்றன. தாங்கள் உண்டாக்குகிற எண்ணற்ற உருவங்களை ஒவ் வொரு விநாடியும் அந்த இசையமுதுக்கே அர்ப்பணம் செய்கின்றன.

நமது ஆன்மா பிரமம் ஆகிக் கொண்டிருக்க வேண்டும். இதுவே அதன் உண்மை, அதன் ஆனந்தம். ஆன்மாவின் காரியங்கள், இந்த இறுதி நோக்கத்திற்கு இசைந்து போகவேண்டும். அதன் படைப்புகள் யாவும் நிறைவை அடைய வேண்டும் என்ற உணர்ச்சிக்கு அர்ப்பணம் செய் யப்படவேண்டும்.

"அவனை நான் நன்கு அறிந்திருக்கிறதா கவோ, அல்லது அவனை அறியவில்லையென்ருே நான் நினைக்கவில்லை" என்ற அற்புதமான வாச கம் உபநிஷதங்களில் காணப்படுகிறது.

அறிவைப்பெறுகிற முறையின்படி எல்லை யற்றவனை நாம் ஒருக்காலும் அறியமுடியாது. நம்மால் அவனை எட்டமுடியா தென்ருல் அவன்

நமக்கு முழுதும் இல்லையென்றே சொல்லிவிடலாம். உண்மையென்ன தெரியுமோ? நாம் அவனை அறியவில்லை, இருப்பினும் அறிந்திருக்கிறோம்.

இதை இன்னொரு உபநிஷத வாக்கியம் விளக்குகிறது "பிரமத்திடமிருந்து வார்த்தைகளும் மனமும் தோல்வியுற்றுத் திரும்புகின்றன. ஆனால் அவனை அவனுடைய ஆனந்தத்தினால் அறிந்தவன் யாதொரு பயமும் அற்றவனாக இருக்கிறான்"

பகுத்தறிவு அரைகுறையானது. பகுத்தறிவு வெறும் கருவி, நம்மைச்சேர்ந்த ஒரு பாகம். அது பொருள்களை வகுத்துப் பிரித்துப் பாகம் பாகமாக அதன் தன்மைகளை வகைப்படுத்தி நமக்கு அறிவிக்கும். ஆனால் பிரமமோ நிறைவானது. அரைகுறையான அறிவு அவனைப்பற்றிய அறிவாகாது.

ஆனால் அவனை ஆனந்தத்தாலும் அன்பாலும் அறிந்துகொள்ளலாம். ஆனந்தமே முழுமை அடைந்த அறிவு. ஆனந்தத்தால் அறிவது என்றால் அவனை நமது முழு ஜீவனாலும் அறிகிறோம். பகுத்தறிவு நம்மையும் நாம் அறிய வேண்டிய பொருளையும் பிரிக்கிறது. அன்பு அப்பொருளோடு ஒன்றாகி அதை அறிகிறது. இவ்வித அன்பறிவு ஒரு நொடியில் அறிந்து விடுகிறது. அதாவது நம்மை நாம் அறிவதுபோல, அதைக் காட்டிலும் அதிகமாகவே அறிகிறது.

ஆகவே உபநிஷதங்கள் கூறுகிறபடி, மனம் பிரமத்தை ஒருக்காலும் அறிய முடியாது. சொற்கள் அவனை விவரிக்க முடியாது. அவனை ஆன்மா தான் அறிய முடியும். பிரமத்தில் தனக்குள்ள ஆனந்தத்

தாலும் தனது அன்பினாலும் ஆன்மா அவனை அறிய முடியும். வேறு வார்த்தைகளில் சொல்லப் புகுந்தால் ஒற்றுமையால் தான் நாம் அவனோடு உறவு கொள்ள முடியும். நம்முடைய முழு ஜீவனோடும் நாம் ஒன்ற வேண்டும். நமது தந்தையோடு நாம் ஒன்றாகவேண்டும். அவனைப்போல பூரணமாக வேண்டும்.

இது எப்படி நிகழ்வது? எல்லையற்ற பூரணத்தில் பலபடிகள் கிடையா. கொஞ்சம் கொஞ்சமாக நாம் பிரமமாகலாம் என்பது கிடையாது, அவன் முழுமையானவன். கொஞ்சம் குறைந்த பிரமம், கொஞ்சம் கூடின பிரமம் என்பது கிடையாது.

நம்முடைய அந்தராத்மாவினுள் பரமாத்மாவை உணருங் காரியம் முழுதும் நிறைவேறிய நிலையிலிருக்கிறது. நமது அந்தராத்மா பரமாத்மாவை இன்னும் உணரவில்லை யென்றோ, கொஞ்சம் கொஞ்சமாக உணருவதற்கு நமது அற்பசச்க்திகளை அது நம்பிக்கொண்டிருக்கிறதென்றோ, நாம் நினைக்க முடியாது. நமக்கும் தெய்வத்துக்கும் உள்ள தொடர்பு நம்மால் ஏற்படுத்தக்கூடிய சங்கதியாக இருக்குமானால் அது உண்மைதான் என்று எப்படி நம்புவது? அது எப்படி நமக்கு உதவியளிக்கும்?

காலமும் இடமும் ஆட்சி செலுத்தாத பொருளை நம்முள் நாம் பெற்றிருக்கிறோமென்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். புல்லாகிப் பூடாகி மாறி மாறி உயர்நிலையடைகிற உயிர்வளையங்கள்

அங்கு ஒன்றி விடுகின்றன. ஆத்மா என்றென்றும் வாழ்கிற இடத்தில் பரமாத்மாவும் ஏற்கெனவே முழுமையாக வெளிப்பட்டுக் காட்சி தருகிறது. ஆகவே உபநிஷதங்களும் "உண்மையானவனும், எல்லாமறிந்தவனும் எல்லேயற்றவனுமான பிரமம் ஆன்மாவின் ஆழத்தில், உன்னதவானத்தில் (அதாவது உணர்வு என்ற வானத்தில்) ஒளிந்து கிடக்கிறது என்பதை எவன் அறிந்திருக்கிருனே அவன் எல்லா மறிந்த பிரமத்தோடு கலந்து ஆசைப் பொருள்களத்தனேயும் அனுபவிக்கிருன்'' என்று கூறுகின்றன.

'ஒன்று கூடுதல்' ஏற்கெனவே நிறைவேறி விட்டது. பரமாத்மன் நம்முடைய ஆத்மாவைத் தன் காதலியாகத் தேர்ந்துகொண்டான். திருமண மும் நடந்துவிட்டது "என்னிதயம் போல உன் னிதயமும் இருக்குமாக" என்ற புனித மந்திரம் சொல்லியாயிற்று, கீழ் நிலேயிலிருந்து படிப்படியாக மாறி உயர்நிலேயடைதல் என்ற காரியத்துக்கு அங்கு இடமில்லே. இந்தத் திருமணத்திலே அந் தப் புரோகிதனுக்கு இடமில்லே. ஈசனே 'இது' என்பது தவிர வேறு எந்த விதமாகவும் விவரிக்க முடியாது. பேரற்றவனுய், இப்போதே, இங்கே இருப்பதால் அவனே "இது" என்றுதான் விவரிக்க முடியும். அவன் நம் உயிரின் அந்தரங்கத்தில் என்றும் இருக்கிருன். "இந்த ஈசன் அல்லது இதுவே மற்ருேர் 'இது'வின் மேலான இலட்சியம்'' "இந்த 'இது'வே மற்ருேர் 'இது'வின் மேலான நிதி''. "இந்த 'இதுவே' மற்ருேர் 'இது'வின் மேலான உறைவிடம்''. "இந்த 'இதுவே' மற்

றேர் 'இது'வின் மேலான ஆனந்தம்''. ஏனென்ருல் ஏற்கெனவே மேலான அன்பின் திருமணம் காலமற்ற காலத்தில் நிறைவேறிவிட்டது. இப்பொழுது முடிவற்ற லீலை அல்லது காதல் விளையாட்டு நடைபெறுகிறது. நித்தியத்தில் கைகூடியவனை இப்போது காலத்திலும் இடத்திலும் பின்தொடர்ந்து பிடிக்கப் பார்க்கிறேம். இன்பத்திலும் துன்பத்திலும் பின்தொடர்ந்து பிடிக்கப் பார்க்கிறேம். இவ்வுலகத்திலும் இதற்கப்பாலுள்ள உலகத்திலும் பிடிக்கப் பார்க்கிறேம். ஆன்மா என்னும் மணமகள் இதை நன்கு அறியும்போது அவளுடைய இதயம் ஆனந்தம் நிரம்பி நிம்மதியாக இருக்கிறது. ஆற்றைப்போல, தானும், அடையவேண்டிய இலட்சியமான சமுத்திரத்தை ஒரு கோடியில் அடைந்து விட்டதையும் மறு கோடியில் அடைந்து கொண்டிருப்பதையும் அவள் தெரிந்திருக்கிருள். ஒரு கோடியில் நித்திய ஓய்வையும் நிறைவையும் அடைந்திருப்பதையும், மற்றெரு கோடியில் இடையருத இயக்கத்தையும் மாறுதலையும் கொண்டிருப்பதையும் அவள் நன்கு அறிந்திருக்கிருள். இரண்டு கோடிகளும் பிரிக்கமுடியாதபடி இணைக்கப் பட்டிருக்கின்றன என்பதையும் அவள் அறியும்போது, உலகத்தையும் அதன் தலைவனையும் அறிந்த உரிமையினுல் இவ்வுலகம் தனது 'வீடு' என்று அறிகிருள். அப்போது அவளுடைய சேவைகள் அன்பு கலந்த சேவைகளாகின்றன. வாழ்வில் கஷ்டங்களும் கொடுந் துன்பங்களும் வந்தபோது அவை தனது அன்பின் வலிமையைச் சோதிக்க வந்தவை என்றும் தன் காதலனிடமிருந்து பந்தயத்தை ஜெயிப்பதற்காக வெற்றி

கரமாக அவைகளைப் பொறுத்துக்கொள்கிருள். ஆனல் அவள் பிடிவாதமாக இருட்டிலே இருக்கிற வரைக்கும், தன் முகத்திரையை அகற்ருத வரைக்கும், தன் காதலனைத் தெரிந்துகொள்ளாதவரைக்கும் அவனிடமிருந்து பிரிக்கப்பட்ட உலகத்தை மாத்திரம் தெரிந்திருக்கும்வரைக்கும், உரிமைபூண்ட இராணியாக ஆளவேண்டியவள், வெறும் பணிப் பெண்ணுகச் சேவை செய்கிருள். சந்தேகத்தில் கிடந்து திண்டாடுகிருள். துயருற்று மனமிடிந்து அழுகிருள். "அவள் பட்டினிமேல் பட்டினி கிடக்கிருள். கஷ்டத்துக்குமேல் கஷ்டம் அனுபவிக்கிருள். அஞ்சி அஞ்சிச் சாகிருள் ".

ஓர் இடத்திலே விடியற்காலத்திலே திருவிழா இராத்திரியே கூட்டம் கூடிவிட்டது. கிழக்கு வெளுக்கும்போது கூட்டத்தின் இரைச்சலுக்கு மத்தியிலே ஒரு பாட்டின் அடி கேட்டது. "படகோட்டியே என்னை அக்கரை சேர் " என்ற அந்த அடியை என்னல் மறக்க முடியவில்லை.

நமது வேலைகளின் சந்தடிகளுக்கிடையே "என்னை அக்கரை சேர் " என்ற குரல் கேட்கிறது. இந்தியாவிலே வண்டி ஓட்டும்போது வண்டிக்காரன் "என்னை அக்கரை சேர் " என்று பாடுகிருன். தெருத்தெருவாய் பண்டங்களைச் சுமந்து விற்போன் சரக்குகளை விற்றுக்கொண்டே "என்னை அக்கரை சேர் " என்று பாடுகிருன்.

சரி, இப்பாட்டுக்கு என்ன அர்த்தம்? நாம் நமது இலட்சியத்தை அடையவில்லை என்பதை உணருகிருேம். என்னதான் பாடுபட்டாலும்

உழைத்தாலும் முடிவுக்கு வந்து சேரவில்லையென்பதையும் நம்முடைய இலட்சியத்தை நாம் அடையவில்லையென்பதையும் நாம் அறிகிறோம். தனது பொம்மைகளில் திருப்தி அடையாத பிள்ளையைப் போல நமது இதயமும் "இதுவல்ல, இதுவல்ல" என்று அழுகிறது. அப்படியானால் எதுதான் வேண்டும்? அக்க்ரை எங்கேயிருக்கிறது?

நம்மிடம் இல்லாத ஒரு பொருளா அது? நாமிருக்கும் இவ்விடம் இல்லாத வேறோர் இடமா அது? நம்முடைய வேலைகளிலிருந்து ஓய்வெடுத்துக் கொள்வதா அது? வாழ்க்கைப் பொறுப்புகளிலிருந்து விடுவிக்கப்படுவதா?

இல்லை, நம்முடைய செயல்களுக்கு மத்தியிலேயே நாம்நம்முடைய இலட்சியத்தை நாடுகிறோம். இருக்கின்ற இடத்திலேயே அக்கரையை நாடுகிறோம். படகில் செல்லுமாறு உதடுகள் பிரார்த்திக்கிறபோது சுறுசுறுப்பான நமது கைகள் சும்மா இருப்பதில்லை.

உண்மையில், ஏ! ஆனந்தக்கடலே! இக்கரையும் அக்கரையும் உன்னிடத்தில் ஒன்றாகயிருக்கின்றன. இதை மாத்திரம் என்னுடையது என்று சொல்லும்போது மற்றொன்று அன்னியமாகத் தள்ளி நிற்கிறது. என்னுள் இருக்கின்ற பூரணத் தன்மையை நான் அறியாதிருப்பதனால் என்னுடைய இதயம் இன்னொன்றுக்காக அலறி நிற்கிறது. 'இது', 'அது' என்ற என்னுடைய எல்லாமும் உன்னுடைய அன்பில் முற்றிலும் ஒன்றாகுவதற்குக் காத்துக்கொண்டிருக்கின்றன.

என்னுடைய இந்த "நான்" தன்னுடைய சொந்தம் என்று தான் அறிந்த வீட்டுக்காக இரவு பகலாக அரும்பாடுபடுகிறது. பாவம், இதையே தன் வீடு என்று அழைக்க இயலாதவரை அதனுடைய துன்பங்களுக்கு ஓய்வில்லை. அது வரையும் அது கிடந்து மல்லாடும். அதனுடைய இதயம் "படகோட்டியே என்னை அக்கரை சேர்" என்று கதறும். இந்த என்னுடைய வீடே உன்னுடைய வீடாக்கப்பட்டபோது, அந்தொடியிலேயே, இது அக்கரை சேர்க்கப்பட்டுவிடுகிறது. இதனுடைய பழஞ்சுவர்கள் இதைச் சூழ்ந்திருக்கும் போதே அது அக்கரை போய்விடுகிறது இந்த "நான்" ஓய்வற்றிருக்கிறது. தன்னுடைய இயற்கையோடு ஒன்று சேர்க்கமுடியாத ஒரு இலாபத்துக்காகவும், கைகளால் பிடித்து வைத்துக்கொள்ள முடியாத இலாபத்துக்காகவும், அது பாடுபடுகிறது. எல்லோருக்கும் பொதுவான ஒன்றைத் தனது கைகளுக்குள் பிடித்துக்கொள்ள முயலும்போது இது பிறரைத் துன்புறுத்துகிறது, தானும் துன்பமடைகிறது. உடனே "என்னை அக்கரை சேர்" என்று கதறுகிறது. "என்னுடைய காரியங்களனைத்தும் உன்னுடையனவே" என்று அது கூறமுடியும் பொழுதே, எல்லாம் இருந்தபடியிருக்க அது மாத்திரம் அக்கரை சேர்கிறது.

என்னுடைய இந்த வீடே உன்னுடைய வீடாக ஆக்கப்படாதவரை நான் உன்னை எங்கு போய்க் காண்பேன்? என்னுடைய இந்த வேலையே உன்னுடைய வேலையாக ஆக்கப்பட்டாலொழிய நான் உன்னோடு எங்கே சேருவேன்? நான் என்

னுடைய வீட்டை விட்டால் உன்னுடைய வீட்டை நான் சேரமுடியாது. நான் என்னுடைய வேலையை விட்டால் உன்னுடைய வேலையில் நான் சேர்ந்து கொள்ளமுடியாது. நீ என்னுள் வாழ்கிருய், நான் உன்னுள் வாழ்கிறேன். நீயற்ற நானும் நானற்ற நீயும் இல்லை.

ஆகவே நமது வீட்டிலே வேலைகளுக்கு மத்தியிலேயே "என்னை அக்கரை சேர்" என்ற பிரார்த்தனை எழுகிறது. இங்கே கடல் அலை சுருள்கிறது. தாம் வந்து சேருவதற்காக அக்கரையும் இங்கேயே காத்துக் கொண்டிருக்கிறது. ஆம் இங்கேயே முடிவற்ற நித்தியம் இருக்கிறது. நெடுந்தொலைவில் இல்லை. வேறெங்கும் இல்லை. இங்கேயே இருக்கின்றது.

## செல்வியின்
## நூல்களைப்பற்றிக் கருத்துரைகள் சில

கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி ரூ. 2 – 00.

— ந. சுப்பு ரெட்டியார்

"We find in the book plenty of material for contemporary political, and cultural history of the land and these are set with minute details in this work. Vidwan Subbu Reddiar has studied this work under nine heads and has brought out its historical and literary values very ably..."

— THE HINDU.

திருக்குறள் உரைவேற்றுமை—அறத்துப்பால் ரூ. 4 – 00

— இரா. சாரங்கபாணி

"Several commentaries and annotations have been brought out to the great Tamil work, Tirukkural and the process is yet going on.........This is a very useful publication both as a reference book and for study by scholars."

— THE HINDU.

இலக்கியத்தில் இன்பச்சுவை ரூ. 2 – 50.

— தமிழண்ணல்

"This is a beautiful study of Love in Sangam Literature...........The book affords pleasant and profitable reading and it is hoped that he will take other emotions also for study on the same lines as this and thus enrich our appreciation of Tamil literature on right lines."

— THE HINDU.

## புதிய நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| சாரங்கபாணி : | திருக்குறள் உரைவேற்றுமை (அறம்) | 4 | 00 |
| தாகூர் : | கீதாஞ்சலி | 1 | 50 |
| கதிரவன் : | மக்கட்பேறு | 2 | 00 |
| ,, | தொண்டைமான் இளந்திரையன் | 1 | 00 |
| தமிழண்ணல் : | காதல் வாழ்வு | 2 | 00 |
| ,, | இலக்கியத்தில் - இன்பச்சுவை | 2 | 50 |
| ,, | தாலாட்டு | 2 | 00 |
| ,, | மொழிவழிச் சிந்தனைகள் | 1 | 25 |